# தமிழர் சமயம், தமிழர் வேதம், தமிழகத்துக் கோயில்கள்





ஆசிரியர் :
ப. சுப்ரமணியன், ஐ.ஏ.எஸ். (ஓய்வு)

# தமிழர் சமயம், தமிழர் வேதம், தமிழகத்துக் கோயில்கள்.

எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு.




ஆசிரியர் :-

யு. சுப்ரமணியன், ஐ.ஏ.எஸ். (ஓய்வு)
(முன்னாள் மாவட்ட ஆட்சித் தலைவர்,
ஆணையர், இந்து சமய அறநிலையத் துறை, தமிழ்நாடு)

மாற்றுப் பதிப்பு, டிசம்பர்-1990


பக்கம் 36 + 205

**விலை ரூ. 25.00**

கிடைக்குமிடம் :

யு. சுப்ரமணியன், இ. ஆ. ப. (ஓய்வு)
"சால்பகம்"
10, இரண்டாம் தெரு
ராஜப்பா நகர், தஞ்சாவூர்-613 007

அச்சிட்டோர் :

J.V. பிரிண்ட்டர்ஸ், 19 அண்ணா நகர், மருத்துவக்கல்லூரி சாலை,
தஞ்சாவூர்-613 004 தொலைபேசி 21958

82/2

மு. அருணாசலம்
திருச்சிற்றம்பலம். 22—3—90

# அணிந்துரை

இது ஓர் அபூர்வமான புத்தகம். இதனுள் தமிழர் சமய உணர்வை, வேதம், கோயில்கள் என்று இரண்டு கோணங்களில் ஆசிரியர் திரு யு. சுப்ரமணியன் முழுமையாக, ஒன்றையும் மிச்சம் விடாமல் ஆராய்கிறார்; அழகாகத் தொகுத்துச் சொல்லியிருக்கிறார். இந்த நூலில் பேசப்படும் பொருள்கள் இரண்டே. ஒன்று தமிழர் சமயம் அல்லது மதம், இரண்டு தமிழகத்துக் கோயில்கள். கோயில்களைத் தொல்காப்பியர் காலத்திலிருந்து விஜய நகர மன்னர் காலம் வரையில் கோவையாக ஒன்றையும் விடாமல் அழகுறத் தொகுத்துச் சொல்லியிருப்பது வியப்புக்குரியது. தமிழர் சமயம் என்று எடுத்துக்கொள்ளும்போது ஆசிரியருடைய கருத்து எல்லோருக்குமே புதுமையாகவும் அதிர்ச்சியைத் தருவதாகவும் உள்ளது. மிகப் பழங்காலம் முதல் இன்று வரையில் உள்ள மதத்துக்கும் கோயில்களுக்கும் தாம் சொல்லுகிற கருத்துக்களுக்கு ஆதாரத்தோடு எடுத்துக்காட்டி வருகிறார்.

சமய உணர்வுக்கு எல்லோரும் ஆதாரமாகச் சொல்வது வேதம் என்பது. இந்த வேதம் எது என்பதைப் பற்றி இவர் புதுமுறையில் சர்ச்சை எழுப்புகிறார். தமிழ் வேதம், ஆரிய வேதம் என்று இரண்டாகப் பிரித்து, தமிழ்இனமக்களுக்கு எது வேதம், இவர்களுக்கு ஆரிய வேதம் பொருந்துமா என்பதை ஆராய்கிறார். இவருடைய ஆராய்ச்சி ஆதாரபூர்வமாய் இருப்பதால் அதை யாரும் அசைக்க இயலாது.

பொதுவாக வேதம் என்றால் நாம் எல்லோருமே ஒரே வேதத்தைதான் சொல்கிறோம். ஆரிய வேதம், தமிழ் வேதம், என்ற இவருடைய பாகுபாடு அருமையானது. இது யாருக்குமே புதுமையான ஒரு செய்தி. ஆரிய வேதம் என்று இவர் பிரித்துக் காட்டுவது, இன்றைய தமிழ் மக்கள் ஏற்றுக் கொள்ளக்கூடியதா என்பது, இவர் முதல் முதல் எழுப்புகிற ஐயம். தமிழரில் அந்தணர், பார்ப்பார், வேதியர் என்ற பாகுபாடு இருந்தது. இவர்கள் பிராமணர் அல்லர்.

இன்றும் பிராமணரும் தமிழ் மக்களும் கலந்து ஒன்றாக வாழ வில்லை. ஆதலால் ஆசிரியர் இரண்டும் வெவ்வேறு இனம் என்று சொல்வதை மறுக்க முடியாது. (அந்தணர் சிலர் தமிழைப் போற்று வதால் இந்தக் கருத்து மாறிவிடாது) பிராமணர்கள் பொதுவாக தமிழைப் போற்றுவதில்லை. அவர்கள் வேறு இனமாகவே பிரிந்து நிற்கிறார்கள். அவர்கள் வேதம் என்று சொல்லுவதை தமிழர் தங்களுடைய வேதம் என்று கண்ணை மூடிக்கொண்டு சொல்லிக் கொண்டிருப்பது பொருந்தாது.

ஆதியில் மக்கள் மரத்தடியில் இறைவனை வழிபட்டார்கள். பின்னர் மண்ணால் உருவம் செய்து கோயிலில் வைத்து வழிபட் டார்கள். பின்னர் சுட்ட மண்ணாலும் கோயில்கள் உருவாயின. காலக்கிரமத்தில் இவை வளர்ச்சி அடைந்தன. பெரும் பாறை களைக் குடைந்து குடைவரைக் கோயில் எனப்பெயர் பெறுகின்ற கோயில்கள் உருவாயின. அதன் பின்னர் கற்களை உடைத்து அளவாக்கி அவற்றைக்கொண்டு அடுக்கிக் கட்டப்பட்ட கோயில் கள், இராசராசனுக்குப் பிறகு ஏராளமாகக் கட்டப்பட்டன. இவற் றையெல்லாம் தொகுத்து அப்பர் சுவாமிகள் பின்வரும் தேவாரப் பாசுரத்தில் பாடுகிறார்.

''பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோடெட்டும் மற்றும்
கரக்கோயில் கடிபொழில் சூழ் ஞாழற் கோயில்
கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்தும்
இளங்கோயில், மணிக்கோயில், ஆலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து
தாழ்ந் திறைஞ்சத் தீவினைகள் தீரும் அன்றே''

இதையடுத்து, ஆசிரியர் இந்தக் கோயில்கள் என்னென்ன என்று விளக்கம சொல்லுகிறார். அவற்றுள் 'திருநறையூர் மணி மாடம்' என்ற திவ்வியப்பிரபந்தப் பாசுரத்திலும், 'தில்லை தன்னுள் செற்றரு மாமணிக் கோயில்' என்ற நம்பியாண்டார் நம்பியின் கோயில் திருப்பண்ணியர் திருவிருத்தம்-67-ஆம் பாடலிலும் இது குறிப்பிடப்பட்டிருப்பதை, ஆசிரியர் எடுத்துக்காட்டியிருப்பது குறிப் பிடத்தகும்.

கோயில்என்றால் சைவர்களுக்கு சிதம்பரம் நடராசர் கோயி லும், வைணவர்களுக்கு ஸ்ரீரங்கம் கோயிலும் என்று பொருளாகும்.

மதுரகவி ஆழ்வார் நம்மாழ்வாரையே பாடியவர், திருமாலைப் பாட வில்லை. மற்ற அனைவராலும் மங்களாசாசனம் செய்யப்பட்ட பெருமையுடையது ஸ்ரீரங்கம். சிதம்பரம் சமயாசாரியர் நால்வராலும் பாடப்பெற்றது. இந்தவிதமாக, இரண்டும், 'கோயில்' என்ற தனிச் சிறப்பு உடையன.

தமிழருடைய கோயில் கட்டிடக்கலை இன்னும் தொடர்ந்து வருகிறது என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு. 16-ஆம் நூற்றாண்டில் விஜய நகர மன்னர் அச்சுதராயர் ஸ்ரீரங்கம் கோயிலின் தெற்கு வெளி மதில் சுவரில் இராஜகோபுரம் கட்டும் பணியைத் தொடங் கினார். ஆனால் விஜயநகர ஆட்சி, போரினால் முடிவு அடைந்த படியால், அந்தப்பணியும் முடிவடையாமல் அதன் கல்காரம் கட் டப்பட்டதோடு நின்றுவிட்டது. இது "இராயர் மொட்டைக் கோபுரம்" என்று பேச்சுவாக்கில் எல்லோரும் சொல்லுவார்கள். ஆனால் அதன் மேல் அகோபில மடத்தின் 44-ஆவது ஜீயர் சுவாமிகள் ஸ்ரீமத் அழகியசிங்கர் அவர்கள் 13 நிலைக் கோபுரம் கட்ட 1979- இல் தொடங்கி 1987-இல் நிறைவு செய்தார் கள் இத்திருப்பணி தமிழகக் கோயில் கட்டிடக்கலை மரபு 1500 ஆண்டுகளுக்கு மேலாகத் தொடர்ந்து நடந்து வருகிறது என்பதற்கு தக்க உதாரணம்.

சிதம்பரம் தீட்சிதர்கள் சேர்ந்து, சிதம்பரம் நடராஜர் கோயில் அவர்களுக்குச் சொந்தமான கோயில் என்றும், பொதுக் கோயில் அல்ல என்றும் ஒரு வழக்குத் தொடுத்தார்கள். அதன் மேல் 17—3—1890 சென்னை உயர்நீதி மன்றத்தார் ஒரு தீர்ப்பு வழங்கியி ருக்கிறார்கள். இதைப் புனர் விசாரணை செய்த நீதிபதி வேங்கடர மணராவும், நீதிபதி நியூசமும் இந்தக் கோயில் தீட்சிதர்களுடைய சொந்தக் கோயில் அல்ல என்றும், பொதுக் கோயில்தான் என்றும் தீர்ப்புக் கூறியிருக்கிறார்கள்.

பாண்டியரும் பல்லவரும் ஜைனம், வைணவம் அன்றிச் சைவம் சைவம் முதலான பல சமயங்களையும் சார்ந்திருக்க, தமிழ் நாட்டில் முடி மன்னரான சோழர் மட்டும் தொன்மைக்காலம் முதல் சைவம் ஒன்றையே சார்ந்திருந்தார்கள். இது சோழருக்கு உரிய சிறப்பு. இதை நம்பியாண்டார் நம்பி "சைவநெறியன்றி மற்றோர் நெறி யறியா தெய்வக்குடிச் சோழன்" என்று பாராட்டியிருக்கிறார்.

ஆசிரியருடைய சிறப்பான கருத்து தமிழ் வேதம், வடமொழி வேதம் என்று பிரித்துக் காட்டுதலில் அமைந்துள்ளது. வேதத்தில் பூஜையோ வழிபாடோ சிறப்பாக இடம் பெறவில்லை. இவை

தமிழருக்கே உரிய சடங்குகள். இதை ஆசிரியர் நிறுவியுள்ளது போற்றுதற்குரியது.

பிற்காலச் சோழர்களின் ஆட்சிக் காலத்தில், தமிழகக் கோயில்களின் வளர்ச்சி மிக்க சிறப்பாக இருந்தது கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த ஆதித்த சோழன் காவிரியின் இரு கரைகளிலும் கற்கோயிலாகவே அமைத்திருக்கிறான் என்று ஆதித்த சோழனின் வடமொழிப் பிரசஸ்தி சொல்லுகிறது. இதிலிருந்து கி.பி. 13-ஆம் நூற்றாண்டின் மத்திய காலம் வரையிலுள்ள, சோழர் ஆட்சிக் காலம், கோயில்கட்டிடக்கலைக்கும் கல்சிற்பக்கலைக்கும் உலோகச்சிற்பக் கலைக்கும் ஒரு பொற்காலமாக கருதப்படுகிறது. உலகிலேயே கோயில் அமைப்பாளர்களில் தலைசிறந்தவர்கள் என்ற பெயரையும் தமிழர் இனத்திற்கு இச்சோழர்கள் பெற்றுத் தந்தனர். இக்காலத்தில் ஓவியக் கலையும் இசைக்கலையும் நடனக்கலையும் உன்னத வளர்ச்சி பெற்றிருந்தன. இவை ஒருபுறமிருக்க, உத்திரமேரூர்க் கல்வெட்டு முதலாம் பராந்தக சோழன் காலத்தில் ஊர் மன்ற அமைப்பு முறையையும் வாக்களிக்கும் முறையையும் திட்டமாக விவரிக்கிறது. தவிர, இராசராசனுடைய பெரிய பாட்டியார் (முடி தரித்து ஆட்சிபுரிந்த கண்டராதித்தருடைய மனைவியார் செம்பியன் மாதேவியார்) பத்துக் கோயில்களைக் கற்றளிகளாகக் கட்டினார், பல கோயில்களுக்கு எண்ணற்ற நிபந்தங்களை அளித்திருக்கிறார், திருநல்லத்தில் தம்முடைய கணவர் கண்டராதித்தர் சிவ பூஜை செய்கின்ற நிலையில் சிலை அமைத்திருக்கிறார்.

முதலாம் இரசராசராசன் காலத்திலிருந்து முதற்குலோத்துங்கன் ஆட்சியின் தொடக்கம் வரை உள்ள காலம், தமிழக வரலாற்றில். எல்லா வகைகளிலும் சிறந்த பொற்காலமெனக் கருதப்படுகிறது, இக்காலச் சோழ மன்னர்கள் பல வெற்றிகளைப் பெற்று, அரும் பெரும் சாதனைகளை நிகழ்த்தித் தமிழகத்தின் புகழைப் பரவச் செய்தனர். அவர்களின் ஆட்சியில் தமிழகக் கலைகளும் தமிழ்ப் பண்பாடும் சிறந்து விளங்கின, ஆலயக் கட்டிடக் கலையின் சிறப்பும் உச்ச நிலையை அடைந்தது எனக் கூறலாம்.

முடிவாகச் சொல்லுமிடத்து, தொடக்கத்தில் மரத்தடியில் ஒரு சிறு கல் அளவில் வைத்து வழிபடப்பட்ட திருவுருவம் இன்றைக்கு மிகப் பெரிய திருவுருவமாக வளர்ந்து அதற்குரிய சகல அங்கங்களோடு விரிவடைந்துள்ளதற்கு ஏற்ப பூசைக்கிரியைகளும் துதிப் பாடல்களும் ஏராளமாகப் பெருகி உலகத்திலேயே எங்கும் காண்பதற்கு அரிய வழிபாட்டு முறையாக இன்று காணப்படுகிறது. ஆரிய வேதம் என்று சொல்லும் போதும், நாம் செய்யும் எந்த

பூஜையையும், வழிபாட்டையும் தமிழருக்குரிய சடங்குகளாகவே நாம் காண்கிறோம். ஆதலால் இவை ஆரிய வேதத்துக்கு உரியவை என்று சொல்வது இழுக்காகும். இவை தமிழ் மக்களுடைய தனி துதி முறையாகும். இதற்கு வேதம் என்று சொல்லி, அது ஆரியத் தொடர்புடையது என்று நினைப்பது பொருத்தமுடையது அன்று. பிராமணருக்குரிய ஆரிய வேதம் வேறு, தமிழருக்குரிய தமிழ் வேதம் வேறு. பிற்காலத்தில் தமிழ் வேதம் காணப்படாமையால் தமிழ் அருட்பாசுரங்களை வேதம் என்று சொல்லும் மரபு வேறுபட்டிருக்கிறது.

மு. அருணாசலம்

பேராசிரியர்

அ. ச. ஞானசம்பந்தன் எம். ஏ.,

சென்னை.

19-8-90

# அணிந்துரை

சகோதரர் யு. சிப்பிரமணியன் அவர்களை நீண்ட காலமாக அறியும் எனக்கு அவருடைய 'தமிழர் சமயம், வேதம், கோயில்கள்' என்ற நூல் பெரு வியப்பைத் தந்தது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். நானறிந்த யு. எஸ்ஸிடம் உள்ளே இதுவரை நானறியாத ஓர் யு எஸ். மறைந்து இருந்துள்ளார் என்பதை அறியும் பொழுது பெரு மகிழ்ச்சியும் பெருமிதமும் அடைகின்றேன்.

தமிழருடைய சமயம், வேதம், கோயில்கள் என்ற மூன்று மிகப் பெரிய கருத்துக்களை மிகச் சுருங்கிய நூலாக யாத்துள்ளார். இந் நூலின் ஒவ்வொரு பக்கமும், பத்து அல்லது பதினைந்து பக்கங்க ளாக விரித்து எழுதப்படவேண்டியவையாகும். இந்நூலின் தனிச் சிறப்பு ஒன்று உண்டு சங்க இலக்கியம் தொடங்கிக் குமரகுருபரர் (17 ஆம் நூற்றாண்டு) வரை இந்த ஆசிரியர் எந்த நூலையும் விட்டுவைக்கவில்லை. சமயம், வேதம், கோயில் என்பவை பற்றி மேலே கூறியுள்ள நூல்களில் காணப்பெறும் எந்த ஓர் அடியையும் எந்த ஓர் சொல்லையும் இவர் விட்டார் இல்லை

தாம் கூறவந்த கருத்தை, ஏனையோர் போலப் பலப்பல சொற்களால் இவர் வலியுறுத்துவதில்லை. அதற்குப்பதிலாக இவ் வாசிரியர் புதிய ஒரு முறையைக் கையாண்டுள்ளார். உதாரணமாக 7வது பக்கத்தில் நெறி' என்ற சொல் சமயம் என்ற பொருளில் விளங்கிற்று என்று கூற வரும் இவ்வாசிரியர், 'நம் முன்னோர் சமயத்தை நெறி என்ற சொல்லாலும் குறித்தனர்' என்று ஒரே வாக்கியத்தில் இதைக் கூறுவதுடன் நிறுத்தாமல், தம் கருத்தை வலியுறுத்தும் வகையில் புறநானூறு, அற்புதத்திருவந்தாதி, குறள் திருமந்திரம், வள்ளலார் அருட்பா ஆகிய நூல்களிலிருந்து மேற் கோள் காட்டுகிறார். அதாவது கி. மு. 2ஆம் நூற்றாண்டு (புறம்) முதல் 19-ஆம் நூற்றாண்டு வரை (வள்ளலார்) எடுத்துக்காட்டு களை அடுக்குவதன் மூலம் தம் கருத்து எத்துணை வலிமையுடை யது என்பதை அழகாக நிறுவுகிறார்.

இதைப்போலப் பக்கம் 9 முதல் 34 முடியப் பழந்தமிழர் கடவுள் நம்பிக்கை, அவர்கள் சமயம் என்பவைபற்றி எடுத்துக் கூறுகிறார். இதில் ஒரு வேடிக்கையும் சிறப்பும் அமைந்துள்ளன. தமிழ் இலக்கியத்தில் நமக்குப் பயிற்சி உண்டு என்று கூறித்திரியும் அரைவேக்காட்டுப் புலவர்கள் சிலர், கடவுட் கொள்கை சங்ககாலத்தில் இல்லை என்று இன்றும் பேசுகிறார்கள். இதனை மனத்துட் கொண்ட இவ்வாசிரியர், தொல்காப்பியம், புறம், அகம், ஐங்குறுநூறு, நற்றிணை, கலித்தொகை, பதிற்றுப்பத்து, குறுந்தொகை, பரிபாடல், பத்துப்பாட்டு ஆகிய எல்லாச் சங்க இலக்கிய நூல்களிலும் காணப்பெறும் தெய்வம், கடவுள் என்பனபற்றி அத்தனை வரிகளையும் ஒன்று விடாமல் எடுத்துக்காட்டியுள்ளார்.

திருவள்ளுவரைக் கடவுள்பற்றிப் பாடாதவர் என்று நிறுவ முயலும் இக்காலத்தார் சிலர், முதற் குறளில் வரும் 'ஆதிபகவன்' என்ற சொல்லை விதவிதமாகப் பொருள் விரிக்கப்பயன்படுத்துவர். இவ்வாசிரியர் 17வது பக்கத்தில் அச்சொல் இறைவனைக் குறிக்கிறது என்பதைத் திருமந்திரம், தேவாரம் என்பவை கொண்டு நிறுவுகிறார். இவருடைய பயிற்சி சங்கப்பாடல்களில் மட்டும் ஆழ்ந்து சென்றுள்ளதோ என்று கருதுபவர் ஐயத்தைப் போக்கும் முறையில், பனிரண்டு திருமுறைகளிலிருந்து எடுத்தெழுதும் மேற்கோள்கள் வியப்பை அளிக்கின்றன.

'நாம் கடவுளுடனேயே ஒன்றியிருக்கிறோம். வேறாகத்தனித்து நிற்கவில்லை' என்பதுதான் தமிழர் சமயத்தின் சாரம் (பக்கம் 22) என்று கூறும் இவ்வாசிரியர் அக்கருத்தை நிலை நிறுத்த திருமந்திரத்திலிருந்து 21 இடங்கள், காரைக்காலம்மை 42 இடங்கள், திருஞானசம்பந்தர் 43 நாவரசர் 14, சுந்தரர் 3, மாணிக்கவாசகர் 14 என்றமுறையில் மேற்கோள் காட்டுவதுடன் அமையாமல், திருவிசைப்பா, ஆழ்வார்கள் பாடல்களில் 6 இடங்கள் என்று எடுத்துக் காட்டுக்கள் தருவது வியப்பையும் அச்சத்தையும் தருகின்றன.

சமய இலக்கியப் பயிற்சியை மிகுதியாக உடையவர்கள் கூட இவ்வாறு எடுத்தெண்ணிப் படித்து இவற்றைக் கோவை செயது கூறியுள்ளார்களா என்றால் இல்லை என்றுதான் விடை கூறமுடியும். அதனாலேயே இவ்வாசிரியரைப் படிக்கும் பொழுது அச்சம் உண்டாகிறது.

அடுத்துத் தமிழகக் கோயில்கள் தோன்றிய வரலாற்றை இலக்கிய அடிப்படையில் ஆய்ந்துள்ளார். கோயில், கோட்டம், அம்பலம், பொதியில் என்ற சொற்கள் எவ்வாறு தோன்றின (பக்.37) என ஆய்ந்துள்ளார். கி.பி. 6 ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு கோயில்

கள் வளர்ச்சி பற்றியும் எத்தனை வகையான கோயில்கள் கட்டப் பெற்றன என்பது பற்றியும் முறையே ஆயப்பெற்றுள்ளன.

தமிழகத்துச் சைவ சித்தாந்தம் என்ற கட்டுரை, சிவ வழிபாடு சங்க காலத்துக்கும் முற்பட்டே இத்தமிழ் நாட்டில் வழங்கி வந்துள் ளது என நிறுவுகிறது. சிவம் என்ற சொல் சங்கப் பாடல்களில் காணப்படவில்லை. இதற்குரிய காரணம் பெரிய புராணம்—ஓர் ஆய்வு' (தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு) என்ற நூலில் பக்-83 முதல் 85 வரையுள்ள பகுதிகளில் ஆயப்பெற்றுள்ளது. வைதிகர்களின் வேத வழக்கொடுபட்ட வைதிக சமயத்தின் முற் பகுதியில் இந்திரன், வருணன் போன்றோர் தவிர இதர கடவுளர் யாரும் குறிக்கப்படவில்லை. பின்னர் தமிழ்நாடு புகுந்த வைதிகர் (வேத வழியினர்), தமிழகத்துத் தெய்வங்களுடன் தம காலத்திய வைதிக சமய, புராணக் கதைகளில் வரும் தெய்வங்களுடன் ஒன்றாக்கினர் என்ற கருத்தை ஆசிரியர் (பக் 67) விளக்குகிறார்.

தமிழ் பக்தி இயக்க நூல்களிலும் சங்கப் பாடல்களிலும் காணப் பெறும் வேதம் என்ற சொல் இன்று வழக்கிலுள்ள நான்கு வேதங் களைத்தான் குறிக்கிறதா என்ற வினாவை எழுப்பி விடை காண முற்படுகிறார் (பக். 80, 86) ஆசிரியர் பக்கம் 83ல் காட்டப் பெறும் மேற்கோள்களுள் பரிபாடல் பகுதி ஆய்வுக்குரியது புராண கால வரலாறுகளை வேதம் என்ற பெயரில் அவை கூறுகின்றன.

ஸ்ரீருத்திரத்தின் நடுவில் வரும் 'நமஹசிவாய, சிவதாரயச' என்ற மந்திரம் தமிழர் கூறும் ஐந்தெழுத்தின் வேறானது என்று இவ்வாசிரியர் கூறுவது (பக் 102) சற்று வியப்பைத் தந்தாலும் உண்மையேயாகும் என்பதை மறத்தலாகாது. தமிழர் கண்ட சிவன், வேதத்தில் காணப்பெறும் ருத்திரனின் மாறுபட்டவன் என்பதை ஆசிரியர் (பக். 113, 117) விளக்குகிறார்.

தமிழ் நூல்களில் பொதுவாகவும், தேவாரம், திருமந்திரம் என்ப வற்றில் சிறப்பாகவும் வரும் வேதம் என்ற சொல் ஆரிய வேதங் களைக் குறிக்கவில்லை;இவை ஒரு காலத்து இந்நாட்டில் வழங்கிய தமிழ் வேதங்களையே குறிக்கின்றன என்ற கருத்தை பக்.124 முதல் 132 முடிய எழுதுவது ஆராய்வதற்குரியது. தமிழ்ப் பாடல் களே கூட இருக்கு, சாமம் என்று இவற்றின் பெயர்களைக் குறிக் கின்றன. எனவே இவற்றை ஒதுக்குவது அவ்வளவு எளிதான தல்ல. 'பெரிய புராணம்'-ஓர் ஆய்வு' என்ற என்னுடைய நூலில் முதல் 58 பக்கங்களில் இது பற்றி விரிவாக ஆராயப்பட்டுள்ளது. அறிஞர்கள் மேலும் ஆய்வு செய்து தக்க முடிவுக்கு வருதல் சாலப் பொருத்தமாகும்.

நூலைப் படித்து முடித்தவுடன் என்னுடைய பழைய நண்பர் யு. எஸ்ஸுக்குள் மறைந்திருந்து இன்று இமயம் போல் வளர்ந்து நிற்கும் நண்பரைக் காணமுடிகிறது. பலர் கூடிப் பல்லாண்டுகள் முயன்று சேகரிக்கக்கூடிய மேற்கோள்களைத் தாம் ஒருவராகவே சேகரித்துத் தம் கொள்கையை கருத்தை நிலைநாட்டி இருக்கும் ஆசிரியர் நம் பெருமதிப்புக்கு உரியவராகிறார். இந்த மேற்கோள் களை இன்ன இடத்திலிருந்து எடுக்கப்பெற்ற இத்தனாவது பாடல் என்று கொடுத்திருப்பின் பின்னர் வரும் ஆராய்ச்சியாளருக்குப் பேருதவியாய் இருந்திருக்கும்.

'தமிழர் சமயம் ...... ..' என்ற பெயரில் 143 பக்கங்களில் ஒரு நூலை எழுதியுள்ளார் என்று கூறுவது தவறாகும். தமிழர் சமயம் பற்றி ஒரு களஞ்சியத்தைத் (Encyclopedia) தந்துள்ளார் என்பதே பொருந்தும். பத்து ஆராய்ச்சி மாணவர்கள் முனைவர் பட்டத் துக்கு இந்த ஒரு நூலை ஆய எடுத்துக்கொள்ளலாம். இவ்வாசிரி யர் தமிழர் அனைவரின் நல்வாழ்த்துக்கு உரியவராவர்.

பேராசிரியர் **அ. ச. ஞானசம்பந்தன்**

'சக்தி இல்லம்'
18, டாக்டர் நடேசன் ரோடு,
அசோக் நகர்,
சென்னை-83

---

*ஆசிரியர் குறிப்பு :* இந்நூலின் முதல் பதிப்பில் உள்ள பக்கங்கள் இவ்வணிந்துரையில் குறிக்கப்பட்டுள்ளன.

வித்துவான் கோ. மு. முத்துசாமிபிள்ளை
ஐ. ஏ. எஸ்., (ஓய்வு)
(முன்னாள் தலைவர். சைவ சித்தாந்தப் பெருமன்றம், திருமயிலை,
சென்னை-4,

# அணிந்துரை

வருவாய்த்துறைப் பதவிகளில் வளர்ந்து, மாவட்ட ஆட்சியராக உயர்ந்து, பின்னர் இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையில் ஆணையாளராக நான்காண்டுகள் விளங்கி, ஓய்வுப்பெற்றுத் தற்போது தமிழாக்கப் பணியில் தம்மைத் தகைமைப்படுத்திக் கொண்டு திகழும் திருவாளர் யு. சுப்ரமணியன் இயற்றியுள்ள "தமிழர் சமயம், தமிழர் வேதம், தமிழகத்துக் கோயில்கள்" என்னும் நூலுக்கு இவ்வணிந்துரை எழுதுவதில் மகிழ்வு எய்துகிறேன்.

இந்நூலில் தமிழர் சமயம் என்னும் தலைப்பின் கீழ்ப் பண்டைக்காலம் முதல் இந்நாள் வரையில் இந்நாட்டில் நிலவி வரும் கடவுள் கொள்கையைத் தமிழ் இலக்கியங்கள், வரலாற்று நூல்கள் ஆகியவற்றையும், ஆன்றோர் ஆற்றிய அணிதிகழ் வாக்குகளையும் கொண்டு நிலைப்படுத்திப் பொருளாதாரம் மட்டும் மனித வாழ்க்கையை மேன்மைப்படுத்தாது எனவும், வாழ்க்கையில் நிகழ்கின்ற இன்ப துன்பங்களை அனுபவிக்கும்முறையில் தக்க வழிகாட்டியாக அமைவது சமயம் எனவும், அது மக்களை நல்வழிப் படுத்தி அவர்களின் ஒழுக்கத்தைச் சீராக்குகிறது எனவும், இந்நூலாசிரியர் எடுத்துக்கூறியது இக்காலச் சூழ்நிலையில் மிக மிக வரவேற்கத் தக்கதாகும்.

அடுத்துத் தமிழகத்துக் கோயில்களின் சிறப்பை எடுத்துக் கூறி, இக்கோயில்களின் வளர்ச்சியைக் காலமுறையில் குறிப்பிட்டு, உலகினிலே பெரிய கோயில் அமைப்பாளர்கள் என்ற பெயரையும் பெருமையையும் தமிழினத்திற்குச் சோழர்கள் பெற்றுத் தந்துள்ளார் என்பதை இந்நூலாசிரியர் சுட்டிக் காட்டியிருப்பது இத்தகைய கோயில்கள் சீர்குலையாது பாதுகாக்கப்படவேண்டும் என்பதற்குத் துணைசெய்கிறது. மேலும் குறிப்பிடப்பட்ட பூசைகள் திருகோயில்கள் எல்லாவற்றிலும் செய்யப்படவில்லை எனில், 'மழை பெய்யாத நிலையில் வாரி வளம் குன்றும்' எனவும், 'நோயும் களவும் மிகும்' எனவும்

'அரசின் போர் ஆற்றலும் குறையும்', எனவும் அறிவுரை கூறும் திருமந்திரப் பாடல்களை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இவ்வறிவுரை திருக்கோயில்கள் அழிவுறாமல் பாதுகாக்கப்படுவதையும் அவற்றில் பூசைகள் ஒழுங்காகச் செய்யப்படுவதையும் கவனிப்பது அரசின் பொறுப்பாக மட்டும் அமையாமல் அவ்வப்பகுதிகளில் வாழும் மக்கள் இனத்தாரையும் சாரும் எனக் கொள்ளுதல் வேண்டும்.

திருவாரூரில் தியாகராசர் கோயில், திருவரங்கத்தில் திருவரங்க நாதர் கோயில், சிதம்பரத்தில் தில்லைச் சிற்றம்பலவனார் கோயில் ஆகியவற்றைக் குறிப்பிட்டுத் தில்லைக் கோயில் தீட்சிதர்களின் சொத்து அன்று; அது ஒரு பொதுக் கோயில் என்பதற்கு ஆதாரமாக இந்நூலாசிரியர் சென்னை உயர்நீதிமன்றத்தின் தீர்ப்புக்களை எடுத்துக்காட்டியுள்ளார்.

மூன்றாவதாகவுள்ள "தமிழகத்துச் சைவ சித்தாந்தம்" என்னும் தலைப்பின் கீழ்க் கூறப்பட்டவற்றுள், இந்நூலின் உயிர்ப்பு அடங்கியுள்ளது.

சிவபெருமானை முழுமுதற்கடவுளாகக் கொண்டு வழிபடும் தமிழகத்துச் சைவ சமயம் தமிழர்களின் நுண்ணிய அறிவிலே மலர்ந்தது எனவும், இதில் அடங்கிய சமயக் கோட்பாடு சைவசித்தாந்தம் என்னும் பெயரில் திருமந்திரம் அருளிய திருமூலரால் முதலில் குறிப்பிடப்பட்டது எனவும், இது பின்னர்ச் சைவத்திருமுறைகளிலும் சைவ சித்தாந்தசாத்திரங்களிலும் விளக்கம்பெற்றது எனவும் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய இந்நான்கும் உறுப்திபொருள்கள் எனவும் இவற்றின் அடிப்படையில் சரியை, கிரியை, யோகம், ஞானம், என்னும் நான்கு நெறிகளில் ஈடுபடுகிற வகையினருக்குச் சிவபெருமான் வேதத்தை அருளினார் எனக்கொள்ளுதல் பொருத்தம் எனவும், இவையே நான்கு வேதம், நான்மறை என்னும் பெயர்களில் அமைகின்றன எனவும், இந்நான்கு வகையினர் அந்தணர் என்னும் பெயரில் விளங்குகிறார்கள் எனவும், இந்நூலாசிரியர் பல ஆதாரங்களைக் கொண்டு விளக்கியுள்ளார். ஆனால், சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொள்ளாது. பிராமணர், க்ஷத்திரியர். வைசியர், சூத்திரர் என்னும் நான்கு வருணத்தினரை வகுத்து, இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களைக் கொண்டு, தென்னாடு எய்திய ஆரியர் வேதம் பிற்பட்ட காலத்திற்குரியதென்பது இந்நூலாசிரியர் கூறுவதிலிருந்து தெரியவருகிறது.

திருமந்திரத்தில் திருமூலர் காட்டும் வேதாந்த சித்தாந்தம், சித்தாந்த வேதாந்தம் ஆகியவற்றை இந்நூலாசிரியர் நன்கு

விளக்கியுள்ளார். இவ்விளக்கத்திற்கு ஆதாரமாக குறிப்பிடப் பட்டுள்ள திருமந்திரப்பாடல்களில் ஒன்று.

"நித்தம் பரனோடு உயிர் உற்று நீள்மனஞ்
சத்த முதல் ஐந்துத் தத்துவத்தால் நீங்கிச்
சித்த மசுத்தந் தொடரா வகை நினைந்
தத்தன் பரன்பால் அடைதல் சித்தாந்தமே"என்பது.

மனம், சித்தம், புத்தி, அகங்காரம் முதலிய அந்தக்கரணங் களும் சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் முதலிய தன் மாத்தி ரைகளும் மற்றும் மூலப்பிரகிருதி தத்துவங்களும், சுத்தமாயை. அசுத்தமாயை ஆகியவையும் கழியச் சோகம் பாவனை வழி யாகச் சிவபெருமானுடன் கலப்பது சித்தாந்தமாகும். "நினைந்து" எனக் கூறப்பட்டது சோகம் பாவனையாகும். வேதாந்தம் சிவோகம் பாவனை வரையிலும் செல்லச் சித்தாந்தம் அவ் வுணர்வும் கெட்டுச் சிவன்பால் நிற்ப உதவுகிறது என்பது இதன் விளக்கமாகும்,

சைவசித்தாந்தம் பற்றி முதல் முதலில் குறிப்பிட்டுள்ளவர் திருமூலர் என்பதால், சைவ சித்தாந்தத்தின் காலம் திருமூலர் காலத்திலிருந்து தொடங்குகிறது என்னும் கொள்கை, தோன்றக் கூடும்.

திருமூலர் காலம் கி.மு. 6000-ஆம் ஆண்டுக்கும் கிமு.3000 ஆம் ஆண்டுக்கும் இடைபட்ட காலம் எனப் பேராசிரியர் க. வெள்ளை வாரணார் கணக்கிட்டுள்ளார். (பன்னிரு திருமுறை வரலாறு 1969-இரண்டாம் பகுதி பக்கம் 421) திருமூலர் காலம் உச்ச வரம்பில் கி.மு.6000 எனக் கொண்டாலும், ஆரியர்கள் கி.மு. பத்தாம் நூற்றாண்டில் (கி.மு. 10000) தென்னாடு வந்து சேர்ந்தார்கள் எனப் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் கூறுவதால், ஆரியர்கள் கொணர்ந்த வேதம் திருமூலர் சைவ சித்தாந்தத்திற்கு முற்பட்டது எனக் கொள்ள வழியுண்டு, ஆனால் ஆரியர்கள் வருமுன்னர் இந்நாட்டில் சிவ வழிபாடு இருந்து வந்தது என்பதை ஆசிரியர் ரகோசின் தாம் இயற்றிய "வேத இந்தியா" நூலில் குறிப்பிட்டுள்ளார். சிவ என்னும் சொல்லில் உள்ள சகர ஒலி வடமொழியில் இல்லாத கபால ஒலி என்கிறார் ஆசிரியர் ராப்சன். சிவன் தமிழர் கடவுள் எனவும் இவரைப் படிப்படியாக

ஆரியக் கடவுளோடு சேர்த்துக் கொண்டார்கள் எனவும் சுதர்க்க சட்டோபாத்தியாய தெரிவித்துள்ளார். *

மேலும், ஆரியர்கள் இந்நாட்டிற்கு வருமுன்னர், இங்கு நிலவியிருந்த மொழி தொன்மைத் தமிழ். அது நன்கமைந்த இலக்கணம் பெற்றிருந்தது. அவ்விலக்கணத்திலே சைவ சித்தாந்தக் கோட்பாடுகள் பல அடங்கியிருந்தன.

"வினை எனப்படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங்காலைக் காலமொடு தோன்றும்",

"காலம் உலகம் உயிரே உடம்பே
பால்வரை தெய்வம் வினை"

என்னும் இவ்விரு தொல்காப்பியச் சூத்திரங்கள் வினைப்பயனை எய்துவிப்பர் பால்வரை தெய்வம் என்கின்றன. இக்கோட்பாடுகள் சைவ சித்தாந்தத்தில் இடம் பெற்றுள்ளன. உயிர் எழுத்துக்கள், உடல் எழுத்துகள் எனப்பெறும் மெய்யெழுத்துக்கள் சைவ சித்தாந்தத்தில் சிறப்பிடம் பெற்றுள்ளன. வினையின் பெயரில்வினை முற்று, சஞ்சிதம் எனப்படும் முன்வினையாகிய இறந்தகால வினையெச்சம் பிராரத்துவம் எனப்பெறும் நிகழ்கால வினையெச்சம், ஆரம்யம் எனப்படும் வருவினையாகிய எதிர்கால வினையெச்சம் ஆகியவை போன்ற பல சொற்றொடர்கள் சைவ சித்தாந்தத்தின் கோட்பாடுகளைக் கொண்டுள்ளன. ஆதலால் சைவசித்தாந்தம் தமிழ்மொழியுடன் இணைந்துள்ள இலக்கணத்தில் பண்புற அமைந்துள்ளது. இவ்வகையில் சைவ சித்தாந்தம் ஆரியர்கள் வேதத்திற்கு முற்பட்டது என்பது விளங்குகிறது.

சைவ சித்தாந்தம் தனிப்பட்ட முறையில் சைவர்களுக்கு உரியது என்பதை மறைமலை அடிகள், கா. சுப்பிரமணியபிள்ளை ஆகியோர் போன்ற பேரறிஞர்கள் எடுத்துக்காட்டியுள்ளார்கள். சைவத்திருமுறைகள், சைவசித்தாந்த சாத்திரங்கள் ஆகியவற்றிற்கு முரணாகவுள்ளவை களையப்படவேண்டும் எனக் கா. சுப்பிரமணிய பிள்ளை தாம் 'செந்தமிழ்ச் செல்வி'யின் எழுதிய கட்டுரை ஒன்றில் குறிப்பிட்டுள்ளார். நான்கு வருணங்களைக் கொண்ட ஆரியமதம் எவ்வாறு வேளாளர் பெருமக்களை சூத்திரர் இனத்தில் சேர்த்துள்ளது என்பதைக் கோவை சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார், "வேளாளர் பெருமக்களைச் சூத்திரர் என்று பாகுபடுத்தி

* "Indeed there have been many advocates of the theory that Siva was Originally a Dravidian god and he gradually found his way into the Aryan Pantheon" Sudharka Chattopadhyaya ."Rise of Hindu Sects upto Sankaracharia"...

அவர்களுக்குப் பிற மூவரிடம் ஏவல் செய்யும் தொழிலே தொழிலாகக் கூறுபவர், இதனை ஊன்று நோக்குவார்களாகுக..... ... தமிழ் நாட்டுக் குடிமக்கள் பிறப்பில் வேளாளர் என்ற பகுப்பினர் வேறு ஆரியர் கொண்ட நால் வகைச் சாதியிலே சூத்திரர் என்ற தொழுதூண் குலத்தார் வேறு என்பது வெளிப்படை. ஆனால் காலக்கிரமத்தில் ஆரியர் வகுப்பும் தமிழர் வகுப்பும் ஒன்றுபட்டு விரவி வாழத் தலைப்பட்ட பின்னாளிலே அவ்விரு வகுப்பும் ஒன்றாக எண்ணப் பட்டு வேளாளர்களை, ஆரியச் சூத்திரரோடு மயங்கிப் பிறழப் பேசும் வழக்கம் எழுந்தது என்று துணியப்படுகிறது'' எனத் தெரிவித்துள்ளார். (சேக்கிழார், கோவை சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணிய முதலியார் நான்காம் பதிப்பு 1954 பக்கங்கள் 62-63)

''சூத்திரர்'' என்னும் சொல் எந்த அளவில் பொருத்தமின்றிப் பயன்படுத்தப்பட்டது என்பதைப் பெரியபுராணமே காட்டுகிறது. பெரியபுராணத்துள் வாயிலார் நாயனார் ''தொன்மை நீடிய சூத்திரத் தொல்குடிக் குல''த்தினர் எனக் குறிக்கப்பெறுகிறார். இந்நாயனாரை இவ்வாறு குறிப்பிட்டுள்ள ஒரே அடியில் ஒரே பொருளுடைய ''தொன்மை நீடிய'' என்னும் தொடரும் ''தொல்குடி'' என்னும் தொடரும் காணப்படுகின்றன. மாபெரும் புலவராகிய தெய்வச் சேக்கிழார் கூறியது கூறல் என்னும் குற்றம் புரிவதற்கு இடமே இல்லை. ஆதலினால் இது ஒரு இடைச்செருகல் எனப் பேரறிஞர் கா. சுப்பிரமணியபிள்ளை கருதுகிறார்.

தமிழகத்துச் சைவ சித்தாந்தம் ஆரியரின் வேதாந்த சமயத்தைச் சார்ந்தது என்னும் கருத்து ஏறத்தாழ இதுவரையில் மறுக்கப்படாதநிலையில் இருந்துவந்துள்ளது. ஆனால், ''தமிழர் என்னும் இனமுண்டு; அவர்களுக்கு ஒப்பற்ற தனிச் சைவ சித்தாந்தம் உளது, அதை உணர வாரீர்'' என்னும் முறையில் தட்டி எழுப்புகிறது திரு.யு. சுப்பிரமணியன் தற்போது இயற்றியுள்ள இந்நூல். அன்னாரைச் சைவ சித்தாந்தப் பேருலகம் பாராட்டும் என நம்பலாம்.

**கோ. மு. முத்துசாமி**

10—3—90

முன்னாள் கல்லூரி முதல்வர்
பேராசிரியர் மேஜர் அ. கிருஷ்ணமூர்த்தி (ஓய்வு)
எம். ஏ., பி. எல்., பி. ஓ. எல் (ஆனர்ச(

# அணிந்துரை

சிலகாலம் முன்பு தஞ்சைத் தமிழ்ச் சங்கத்தில் ஒரு சிறப்புக் கூட்டம் நிகழ்ந்தது. சங்கத் தலைவர் திரு. யு. சுப்பிரமணியன் அவர்கள் தமிழ்ப் பண்பாடு பற்றிய பல்வேறு செய்திகளில் தெளிவில்லாத சில நிலைகளும் இருந்து வருகின்றன, இவற்றையெல்லாம் ஆராய்ந்து தெளிவு செய்தல் பற்றி விவாதிக்க வேண்டும் என்று அறிஞர்களை அழைத்து, இக்கூட்டத்தை கூட்டினார்கள்.

தமிழ் மொழி, இலக்கணம், இலக்கியம். வரலாறு, சமயம், தத்துவம், பல்வேறு கலைகள் முதலானவற்றில் ஒவ்வொன்று பற்றியும் தனித்தனித் தெளிவு பெறாத பல செய்திகள் இருந்தும் அவை தெளிவுபடுத்தப் பெறாமலே நெடுங்காலமாகவே திருப்பித் திருப்பிச் சொல்லப்பட்டு வருகின்றன. முன்னைக் காலங்கள் அவ்வாறு சென்றிருந்தாலும் ஆராய்ச்சிகளும், துல் லியமான ஆராய்ச்சிச் சான்றுகளும் கருவிகளும் பெருகியுள்ள இக்காலத்திலும் தெளிவு பெறாத அக்குழப்பங்கள் குழப்பங்களாகவே ஏன் நீடிக்கவேண்டும்? இவற்றைத் தனித்தனியே ஆராய்ந்து, உண்மைப் பொருள் இது, முடிவு இது என்று தெளிவு செய்தல் வேண்டும்; இவை அறிஞர் கடன் என்றெல்லாம் அக்கூட்டத்தில் விவாதித்து கருத்துக் கூறப்பட்டது. ஆனால் முயற்சிகள் தொடரவில்லை.

இந்நிலையில், அறிஞர் சுப்பிரமணியன் அவர்கள் 'தமிழர் சமயம்' பற்றி தாம் பல்லாண்டுகளாகப் படித்தும் கேட்டும் சிந்தித்தும் தெளிந்த கருத்துக்களைத் தாமே ஒரு நூலாக ஆக்கி, ''தமிழர் சமயம், தமிழர் வேதம், தமிழகத்துக் கோயில்கள்'' எனும் பெயரால் இந்நூலைத் தாமே வெளியிட்டிருக்கிறார்கள்.

தமிழ் நூல்களை பயில்வதிலும் ஆராயவதிலும், சிக்கலுக்குத் தீர்வு காண்பதிலும் அறிஞர் அவர்கள் தணியாத ஆர்வம் உடையவர்கள். தம் ஓய்வு காலத்திலும் தாம் ஈட்டிய பொருளின் பெரும் பகுதியைத் தமிழை ஆராய்வார்க்கும், அறக்கட்டளைகள் நிறுவவும் தமிழ் நூல்களை வெளியிடுவதற்கும் செலவிட்டு மகிழும் தகைமையாளர், தஞ்சையில் தமிழ்ச் சங்கம் நிறுவித் தேர்ந்த

அறிஞர்கள் திங்கள்தோறும் ஆய்வுரைகள் வழங்க, அவ்வாறு இதுகாறும் 49 விரிவுரைகள் நிகழச்செய்த செம்மலோர். மேலும் தஞ்சையில் சைவ சித்தாந்தப் பெருமன்றத்தின் கிளையை நிறுவி, திங்கள் தோறும் சிவப்பேருரை நிகழச் செய்துவரும் சிவத் தொண்டர். தமிழ் ஆய்வுகளை வெளியிட்டு அன்பளிப்பாகவும் அடக்க விலைக்கும் குறைந்த விலைக்கும் வழங்கி அந்த நெறியில் இந்த நூலையும் தாமே வெளியிடுகின்றார் ஆசிரியர் சுப்பிரமணியன் அவர்கள்.

இந்நூல் தமிழர் சமயம்பற்றிய பல்வேறு செய்திகளைத் தெளிவு செய்கின்றது; அல்லது தெளிவு செய்யத்தூண்டி, தெளிவான முடிவுகளைச் சுட்டிச் சிந்திக்கச் செய்கிறது.

இந்நூலில் சொல்லப்பட்டுள்ள உண்மைகளில் மூலாதாரமாக ஆராயப்பட்ட ஒரு பெரும்பொருள் தமிழ் நூல்களில் மறைகள், நான்மறை நால்வேதம் எனவரும் வழக்குகள் பற்றியது. இப் பொருள் பற்றி ஆசிரியர் தரும் ஆய்வு முடிபைத் தெளிவு செய்து கொண்டால், ஏனைய கருத்துக்கள் எளிதில் புலப்படும்.

ஆசிரியரின் முடிபு வருமாறு :

தொல்காப்பியம், சங்க நூல்கள், அற நூல்கள், இலக்கணங் கள், சமயப் பாசுரங்கள் முதலியவற்றில் அக்காலத்தில் குறிப்பிடப் பட்ட மறை, நான்மறை, வேதம் என்பன அறம், பொருள், இன்பம் வீடுபேறு பற்றிய நான்கு நெறிகளின் கீழ் கூறுகின்ற நான்மறை களே; இவையே மறைகள் எனப்பட்டன; இருக்கு, யசுர் முதலான ஆரியரின் வேதங்களை அவை குறிக்கவில்லை; இந்நான்மறை களையும் ஆலின் கீழ் அமர்ந்து சிவபெருமான் குருவருளாக உல கோர்க்கு வழங்கினான் ; தமிழரின் தத்துவத்தில் சிவன் எல்லாத் தெய்வங்களுக்கும் ஆதியானவன்; சக்தியும் திருமாலும் அவனுள் ஒடுக்கம்; ஆக தமிழர் மரபில் நான்மறை என்பன அறம் உரைப் பன, அந்தணர் என்போர் அவ்வறங்களைக் கற்றல், கற்பித்தல், ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல் என அறுவகைத் தொழிலும் புரிவா

ஆசிரியர் கூற்றுப்படி அந்தணர் என்போர் பிறகுத் தோன்றிய பிராமணர் அல்லர் பிராமணர்கள் ஆதாரமாகக் கொள்வன, ஓதுவன வடமொழி வேதங்கள். சிவன் ஆலின்கீழ் அமர்ந்து அறம் உரைத்த இடம் ஆலயம். ஆலயம் பற்றிய தத்துவங்கள் சிவாக மங்களில் ஓதப்பெற்றன. ''மன்னுமாமலை மகேந்திரத்திருந்து சொன்ன ஆகமம் தோற்றுவித்தருளி'' என்றது இவ் ஆகமங் களை.

வேதம் என்னும் சொல்லைப்பற்றி ஒரு குறிப்புச் சொல்லுகிறேன். வேதம், மறை என்பன ஒரே பொருளாவன; வேதம் தமிழ்ச் சொல். 'வேய்' என்பது 'மறைவுநிலை' எனப் பொருள்படும். மறைந்து நின்று அம்பெய்பவன் வேடன்; வீட்டை மூடிக்கூரை போடுவதைக் கூரை வேய்தல் என்பர். பானையில் ஒன்றைஇட்டு, மேலே சுற்றி மறைத்து மூடுவதை வேடு சுட்டுதல் என்பர். மறைந்திருந்து ஒற்று அறிவதை 'வேய்' என்பர் புறத்திணையில். இவ்வாறு இன்னும் பல. இவற்றைச்சுட்டி, 'வேய்' என்னும் தமிழ்ச் சொல்லே 'வேதம்' என்பதன் வேர் என்பர் ஆசிரியர் மறைமலையடிகள். இருப்பினும் ஆரியர் வழக்கில் 'வேதம்' என்பது நிலைத்துப் பரவி, தமிழர்களும் ஆரியர்களும் கலந்து வாழ்ந்த சூழல்களில் 'மறை' என்பது அருகிய வழக்காகவும் மாறின. மொழிகளின் வரலாற்றில் இவ்வகை மாற்றங்கள் இயற்கையே; மேற்கோள்கள் ஏராளம் உண்டு.

சங்க நூல்களிலும் அற நூல்களிலும் தெய்வப் பாசுரங்களிலும் திருமந்திரத்திலும் தமிழ் மறைகள் வேதம் என்ற சொல்லாலும் குறிப்பிடப்பெற்றன. ஆனால் பிந்தியகாலங்களில் சரித்திரச் சூழலில் வடமொழிக்கும் வடமொழியாளர்க்கும் ஆதிக்கம் பெருகிய காலத்தில் 'வேதம்' என்று குறிப்பிடும் இடத்திலெல்லாம் தமிழ் மறைகளை மறந்து, அவை வடமொழி வேதங்களைக் குறித்தன என்று பிழைபடக் கருதிக் கொண்டனர் என்கிறார் நூலாசிரியர். இக்கருத்து ஏற்கதக்கதே.

ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறுவது : தொல்காப்பியம் கூறும் மறைகள் மிகப்பழைமையானவை ; வியாசர் வகுத்த வடமொழி நால்வேதங்கள், தொல்காப்பியத்திற்குப் பிந்தியவை என்றார்.

சிலருக்கு ஓர் ஐயம் எழும். வடமொழி வேதங்கள் மிகவும் தொன்மையானவை ; அவற்றுக்கும் முந்தித் தமிழ் மறைகள் இருந்திருக்குமா ? மெய்தானா ? என்று பலர் ஐயுறுவார்கள். இங்குத் தமிழ்ப் பண்பாட்டின் தொல்பழங்கால வரலாற்றுச் சின்னங்களைக் காணவேண்டும்.

உரோம, கிரேக்க நாகரிகத்திற்கும் முந்தியது எகிப்து நாகரிகம்; அதற்கு முந்தியது சுமேரிய நாகரிகம்; அதனோடு ஒத்தும் அதற்கு முந்தியும் விளங்கியது மொஹஞ்சதரோ நாகரிகம். அதற்கு முன்பிருந்து வளர்ந்து வருவது தமிழ் நாகரிகம் (திராவிட

நாகரிகம்). வரலாறு, புதைபொருள் முதலான ஆராய்ச்சியாளர் கூற்றுப்படி, இந்தக் காலக்கணக்கு முறையில் தமிழ் நாகரிகத்தின் தொல்பழங்காலம் 8,9,10- ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்துகிறது. ஆரியர்தம் இந்திய வருகை மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்; அவர்கள் வேதங்கள் வகுத்தது இன்னும் பிந்திய காலத்தில். அவர்களுக்கு முன்பு பல பல்லாயிரம் ஆண்டுகளாக வளர்ந்தும் பரிணமித்தும் வந்தது தமிழர் நாகரிகம். இந்திய வரலாற்றில் இந்த உண்மை சொல்லப்படவில்லை.

தமிழில் எண்கள் எழுத்துக்கள், இலக்கணம், இலக்கியம், அறநூல்கள், தமிழ் இசை, பரதம், ஓவியம், சிற்பம், மனையியல் மருத்துவம், வானியல், தெய்வ வழிபாடு, ஊரமைப்பு, நகரமைப்பு, அகழி அரண்கள், அரசியல், கோயிற்கலை, கட்டிடக்கலைகள் முதலான வாழ்வின் எல்லா அம்சங்களிலும் அநுபவமுதிர்ச்சியும் வளர்ச்சியுமுற்ற பண்பட்ட ஒரு தொல்பழம் சமுதாயம், வாழ்வின் உறுதிப்பொருட்களையும் சித்தாந்தங்களையும் அமைத்துக் கொள்வதில் வியப்பிருக்க இடமில்லை. தமிழ்ப் பண்பாட்டின் உயிர் நிலையே அறம் முதலான உறுதிப் பொருட்களை அநுபவபூர்வமாக வகுத்துக் கொண்டமைதான். எனவே, நூலாசிரியர் அறம் முதல் நான்குமே பண்டைத் தமிழர்தம் நான்மறைக்கு அடிப்படை என்று எடுத்துக்காட்டியது முற்றிலும் பொருந்திய வரலாற்று உண்மையாகும்.

இந்த நூலிற்காட்டிய முடிவுகள், சிக்கலான சில குழப்பங்களுக்குத் தெளிவான தீர்வுகளை தருகின்றன'

தம் கூற்றுகளுக்கஞக்கு ஆதாரமாகத் தொல்காப்பியம் முதல் சங்க நூல்கள், அறநூல்கள் திருமுறைகள், சிவதத்துவ நூல்கள் வரை வந்த நூல்களிருந்து ஏறத்தாழ 2000 ஆண்டுகளில் வளர்ந்த மரபுகளை-அந்த மரபுகளின் ஒருமைப்பாட்டை - தொடர்ச்சியை-செம்மை நிலையை அடுக்கடுக்கான மேற்கோள்களால் அசிரியர் காட்டியிருப்பதை நான் படித்துப்படித்து அனுபவித்தேன். ஒரு கூற்றுக்கு 2,3 ஆதாரங்கள் போதுமே, 10, 20, 30, என்று அடுக்க வேண்டியதில்லையே எனச்சிலர் நினைக்கலாம். தொடர்ந்து அடுக்கடுக்கான அந்த மேற்கோள்களில் 2000 ஆண்டுகளாகத் தொடர்ந்து வந்த சிந்தனையொருமை, வாசக ஒருமை சொல்லின்பம், பொருளின்பம், இவ்வெல்லாவற்றையும் கோத்து, உள்ளால் உணர்வுகுழைய இழையோடியிருக்கும் அன்பும் அருளும் அறனும் ஆகிய தமிழ்மறைத் தத்துவங்கள், படிப்பவர் உணர்வைத் தொட்டு அவரைத் தெய்விக எல்லைக்கு உயர்த்துவன.

இம்மேற்கோள்களையெல்லாம் பல நிலைகளில் பலபடியாக நான் படித்திருப்பினும், ஆசிரியர் அவற்றைத் தமக்கே உரிய பாணியில் ஆங்காங்குத் தொகுத்தளிக்க அந்தத் தொகுப்பை, அந்தத் தமிழைப் பலகாலும் படித்துப் படித்து ஆனந்தித்தேன்; மேற்கோள்களைப் படிப்பவர்களை இந்த உணர்வோடு படிக்க வேண்டுகிறேன்.

நூலாசிரியர் திரு. சுப்பிரமணியன் அவர்கள் இந்து சமய, அற நிலைய ஆணையராக இருந்தவர். தில்லைத் திருக்கோயில் தீட்சதர்களின் சொத்து எனக்கருதப்பட்டிருந்த நிலையை மாற்றி, அது தீட்சதர்களின் சொத்தன்று என்பதை ஜஸ்டிஸ் எஸ். முத்துசாமி ஐயர் காலம் முதலாகவுள்ள தீர்ப்புக்களின் மூலம், தக்க ஆதாரங்களுடன் நிறுவியிருக்கின்றார். தில்லையம்பலம் மக்களுக்குரியது என்பது நீதிமன்றம் முடிபு. இவரையன்றிப் பிறர் யாராயிருப்பினும் இதனை நிறுவியிருக்கமாட்டார்கள்.

கோவில்கள் பற்றிக் கூறும் பொழுது தஞ்சை பெரியகோவில் நந்தி நாயக்க மன்னர் காலத்தது என்று சிலரால் கூறப்படுவதைக் குறிப்பிட்டு, அது இராசராசன் அமைத்ததே எனக்கொள்ளலாம் எனச் சுருக்க விளக்கமாகக் காட்டியிருக்கும் குறிப்புப் போற்றத் தக்கது

இறுதியில், சைவ சித்தாந்தம் பற்றி டாக்டர் ஜி.யு. போப் அவர்கள் கூற்று ஒன்றினை ஆங்கில வாசகத்தில் தந்திருப்பதை வாசகர்கள்தப்பாது படிக்கவேண்டும். இந்த நூலின் 'கருப்பொருள்' அத்துணையும் டாக்டர் போப் அவர்களின் வாசகத்தில் இரத்தினச் சுருக்கமாகத் தொக்கிக்கிடக்கின்றன.

அறிஞர் திரு. சுப்பிரமணியன் அவர்கள் இந்த அரிய நூலை ஆக்கியமைக்கும், அதன் வழிச் சிறந்த பல உண்மைகளை நிறுவி மேலும் சிந்திக்க வைத்தமைக்கும், இதற்கோர் அணிந்துரையான் எழுத நேர்ந்தமைக்கும் ஆசிரியர்க்கு என் நன்றிகள் பல, வாழியர்.

தஞ்சை
5—3—1990

பேராசிரியர் **அ. கிருஷ்ணமூர்த்தி**

பேராசிரியர் கி. கோதண்டபாணி, எம். ஏ., பி.ஓ.எல்.

# அணிந்துரை

'தமிழர் சமயம், தமிழர் வேதம், தமிழகத்துக் கோயில்கள்' என்ற தலைப்பில் முன்னாள் மாவட்ட ஆட்சியரும், தமிழக அரசின் முன்னாள் இந்து சமய அறநிலையத்துறை ஆணையரும் ஆகிய அன்பிற்கும் மரியாதைக்கும் உரிய உயர்திரு யு. சுப்பிரமணியனார் இ. ஆ. ப. (ஓய்வு) அவர்கள் எழுதிய நூலைப் படிக்கும் வாய்ப்பினைப் பெற்றேன். இவர்கள் இந்நூலில் எடுத்துக்காட்டியுள்ள இலக்கிய மேற்கோள் பட்டியலை நோக்கும்போது இந்நூலாசிரியரின் பரந்துபட்ட இலக்கிய அறிவினையும் இலக்கியத் தெளிவினையும் உணர முடிகிறது.

தன் முதல் கட்டுரையாகிய 'தமிழர் சமய உணர்வு' என்ற பகுதியில் சமயத் தோற்றம், சமயம் நெறியாக வளர்ந்த தன்மை, அறவாழ்க்கையே அடிப்படைச் சமய வாழ்க்கை, சிவனை ஆதி என வழங்கிய வழக்குண்மை, உரு, அரு ஆகிய இறைத்தன்மை, ஐம்பெரும்பூத இயக்கமாய் விளங்கும் இறைநிலை, கந்தன் என்ற சொல்லாட்சி இலக்கிய வழக்கில் வேரூன்றிய நிலை, தமிழர்களின் ஒரே கடவுட் கொள்கை, ஆவின் அருமைப்பாடு, இறையின் உரு, நிறம் ஆகிய சிறப்புக்களை விளக்கும் இலக்கியச் சான்றுகளைத் திரட்டி நம் சிந்தைக் கினிய விருந்தாக இவ்வாசிரியர் அளித்துள்ளார்கள்.

அடுத்து இதனைச் சார்ந்த 'தமிழகக் கோயில் கட்டிடக்கலை என்ற ஆய்வுக் கட்டுரைக்கண் நம் நாட்டுக் கோயிற் கலை, சிற்பக் கலை, ஓவியக்கலை, கோயில் வகைகள் பற்றி அகன்ற ஆய்வுக் கருவூலத்தையே திரட்டித் தந்துள்ளார்கள். பலரும் வியக்குமாறு அரிய, புதிய செய்திகளை இக்கட்டுரைக்கண் திரட்டியளிந்துள்ள திறம் போற்றுதற்குரியதாகும்.

நிறைவாக 'தமிழகத்துச் சைவ சித்தாந்தம்' என்ற கட்டுரையில் ஆரிய வேதாந்தக் கருத்துக்களையும், தமிழர் வழக்கில் நிலவிய வேதாந்த சித்தாந்தக் கருத்துக்களையும் சிறந்த ஆய்வின் மூலம் இலக்கிய எடுத்துக்காட்டுக்களோடு, சிறப்பாக திருமூலர், சேக்கிழார், தேவார முதல்கள் முதலியோர் வாக்கின் துணைக்கொண்டு ஒரு விழுமிய ஆய்வினை மேற்

கொண்டுள்ளார். 'வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத் துறை விளங்க' எனத் திருஞானசம்பந்தர் பெருமானைப்பற்றி அருளிய வேதநெறி வடமொழி வேதநெறியல்ல, தமிழகத்து நெறி என அலசி ஆய்ந்துள்ள திறம் பாராட்டிற்குரியதாகும். ஒவ்வாத இருதுறைகளை, முரணிய இரு கொள்கைகளை இணைத்தே சிந்தித்த தமிழினம் இந்த ஆய்வுத் தெளிவினால் நல்ல அறிவொளியும், தெளிவும் பெறும் என்பது உறுதி. இந் நூலாசிரியரின் பட்டறிவு ஆங்காங்கே பளிச்சிடுவதனை இவர் எழுதிய எடுத்தாண்ட உரை, மேற்கோள் பகுதியால் உணரலாம். பண்டுதொட்டு விளக்கம் பெறாதிருந்த வேதநெறிக் கொள்கை இந் நூல் மூலம் சிறப்பாக விளக்கம் பெறுகிறது. இவர்களது சிறந்த ஆய்வுத் தொண்டு வாழ்க வளர்க என வாழ்த்துகின்றேன். இவர் களது கருத்துரை தமிழக மக்கட்குத் தெளிவினையும், சிந்திக்கும் ஆற்றலையும் மேலும் வளர்க்குமாக.

இவர்களது ஆய்வு எதிர்காலச் சமுதாயத்தின் பாராட்டினை யும் இன்றையச் சமுதாயத்தின் வரவேற்பினையும் பெறும் என் பதில் ஐயமில்லை. இந்நூலைத் தமிழகம் பயன்படுத்திப் போற்றுவ தாக.

பேராசிரியர் **கி. கோதண்டபாணி**

*'திருமகள் இல்லம்'*
*13, பிரதாப சிம்மபுரம்,*
*தஞ்சாவூர் - 613 009*
13–3–90.

பாவலரேறு, பேராசிரியர் ச. பாலசுந்தரம்

# அணிந்துரை

அயல் மொழி, நாகரிகம், பண்பாடுகளுக்கு அடிமையாகி அவ் அடிமைத்தனத்திலே சுவை கண்டு மாழ்கிய தமிழ் மக்களின் நிலைமைக்கு இரங்கி 'என்று மடியும் எங்கள் அடிமையில் மோகம்' என 20ஆம் நூற்றாண்டில் குருதிக் கண்ணீருகுத்தான் பாரதி. இந்நிலை 2500 ஆண்டுகளுக்குமேலாகத் தொடர்ந்து வரும் நிலை என்பதை பலர் அறியார்,

தென்னாடு வழகாட்டப் பாரத நாடு மு ழுதும் பரவிக்கிடந்த மக்களின் நாகரிகப் பண்பாட்டினையும், அறிவாற்றலையும், ஆன் மிகச் சிந்தனையையும் அக்காலை வந்து வடபுலத்தில் நிலை பெற்ற ஆரியர் நன்குணர்ந்து அம்மக்களோடு கலப்புற்றுத் தமிழக மேதையரின் துணையோடு சமற்கிருத மொழியைப் படைத்துக் கொண்டு நாடாள்வோரின் பாது காவலொடு தமிழர்களின் உயர்ந்த சிந்தனையெல்லாம் சமற்கிருதத்தில் ஆக்கிக்கொண்டு பழங்குடி யினரைத் தம் வயப்படுத்த முற்பட்டு, அவர்தம் மறை நூல், அற நூல், முறை நூல் (இலக்கணம்) பிற கலைநூல்கள் யாவற்றையும் தாம் விரும்பிய திருத்தங்களொடு மொழிபெயர்த்துக் கொண்டமை யோடு அவற்றிற்கு இணையாகப் பல நூல்களையும் படைத்துக் கொண்டனர் என்பது மறைக்கப்பட்ட வரலாற்றுண்மையாகும்.

மேலும் அவர்கள் தமது வளர்ச்சியும் மேலாண் மையும் நிலை பெற அறிவியலுக்கு முரண்படாத பகுத்தறிவு சான்ற பல பைந் தமிழ் நூல்களை மெல்லமெல்லச் சிதைத்து அழித்து வந்தனர். அந்நிலையை ஊன்றியறிந்த சான்றோர் சிலர், பழந்தமிம் நூல் மரபுகளை ஒரளவு காத்தல்வேண்டுமென்னும் கடப்பாட்டினராய் அவற்றைத் தொகுத்துச் சுருக்கமாகப் பல நூல்களைச் செய்தனர். அவற்றுள் சமயச் சார்பு காரணமாக அழிவுறாமல் தப்பிய நூல்கள் தொல்காப்பியமும் திருக்குறளும் மட்டுமே என்பது எனது கருத்து எனினும் பழந்தமிழ் நூற்சிந்தனைகள் முற்றும் அழிந்துபடாமல் இருக்க சான்றோர் பலரான் வழிவழியாகப் பேணப்பட்டு வந்தன. அச்சிந்தனைக் கூறுகளே சங்க இலக்கியங்களிலும் திருமுறை நூல்களிலும் இலைமறை கனிகளாக அமைந்துள்ளன. தொல்காப் பியத்துள் தெளிவாகவே காணப்படுகின்றன.

தமிழ் மரபிற்கே உரிய மறைநூல்கள் ஆன்மீக நெறி விளக்கும் நூல்கள், வானியல், கோளியல், கணக்கியல், மருந்தியல், அரசியல் முதலாய பல நூல்கள் வழக்கிலிருந்தமையைத் தொல்காப்பியம் நுண்மையாகச் சுட்டுவதனைப் பிறழ உணர்ந்த பிற்கால உரையாசிரியர்களான் படிந்த மாசினைத்துடைத்து, தமிழ்—தமிழ் மக்களின் பண்டைய நிலையை உள்ளவாறு காட்டவேண்டுமென்னும் வேட்கையான் எழுந்ததே எனது தொல்காப்பிய ஆராய்ச்சிக் காண்டிகையுரை. அந்நூற் பாயிரத்துள் வரும் நான்மறை, நூலுள் வரும் மறையோர் தேம் ஒத்து, அந்தணர், ஐயர், கரணம், மந்திரம், வேள்வி, நாற்பாலார், கடவுள், தெய்வம் முதலியவற்றிற்குத் தனித் தமிழ் மரபினை எண்ணியே உரை வரையலானேன் எனினும் அவற்றிற்கு விரிவான சான்றுகள் காட்டி நிறுவக் காண்டிகையுரையில் இடமில்லை. அக்குறையைப் போக்குவதோடு மட்டுமன்றி மேலும் பலவற்றைத் தமிழர்க்கே உரியவை என எண்ணற்ற சான்றுகளைக்காட்டி நிறுவியுள்ள "தமிழர் சமயம், தமிழர் வேதம், தமிழகத்துக் கோயில்கள்" என்ற இந்நூலை படித்த போது எல்லையில்லா உவப்பும் வியப்பும் எய்தினேன். தென்னாடுடைய சிவனருளால் காலத்தால் இந்நூலை வரைந்தளித்த பெருமகனாரின் சீரிய சிந்தனையை எண்ணி இறுமாந்து வாழ்த்துகின்றேன்.

இந்நூலைப் படைத்துள்ள பெருமகனார் ஒரு பெரும் புலவரோ மெய்யியல் நூற்பேராசிரியரோ இல்லை. இவ்வரிய செயல் இவர்க்கு எங்ஙனம் கைகூடிற்று ? ஆம் இவர் ஒரு தமிழ் ஆர்வலர், சைவநெறிப் பற்றினர், அந்நெறி பிறழாதொழுகுபவர், தமிழ் இலக்கியத்தொண்டர். பொதுநலத் தொண்டர், உயர்ந்த பண்பாளர், நிறைந்த சால்பினர்; அவை எல்லாம் இந்நூல் எழுதற்குக் காரணமே. காரியத்திற்கு அடிப்படை பல்லாண்டுகள் மாவட்ட ஆட்சித் தலைவராகப் பணிபுரிந்ததோடு, ஆணையராகவும் விளங்கியமை, நேர்மை, ஒழுங்கு, உண்மை கண்டு வற்புறுத்தல் என்னும் நெறியும், இந்து சமய அறநிலையத் துறை ஆணையராக அமர்ந்து பன்னூறு திருக்கோயில்கள் மடாலயங்கள் முதலியவற்றையும் பேணி நெறிப்படுத்திய துப்பறிவும், சான்றோபலரின் கூட்டுறவும், சைவ சித்தாந்தக் கோட்பாடு பற்றிய ஆய்வுச் சிந்தனையும் திருமுறைகளின்பால் மேவிய பற்றும் பயிற்சியும் காரணமாதலைத் தெளிந்தேன். இந்நூலால் அவர்தம் கடமையுணர்வும் கல்விப் பயிற்சியும் தமிழ் மக்கள்பால் கொண்டுள்ள ஆன்மீக நேயமும் விளக்க முறுதலைக் காணலாம். இந்நூலமைப்பையும் கருத்துக்களையுக் திறனாய்வு செய்ய முற்படின் சில நூறு பக்கங்களாவது செல்லும். நூலாசிரியர் தன் ஆய்வு முடிபுகளுக்குப்

பிற ஆய்வாளர்தம் கருத்துக்களைச் சான்றாகக் காட்டாமல் அனைத்திற்கும் மூல நூற்பகுதிகளையே எடுத்துக் காட்டியிருத்தல் இவர்தம் பரந்த நூற் பயிற்சிக்கும் தெளிவான சிந்தனைக்கும் சான்றாகும்.

மேற்கோள் பகுதிகளுக்குப் பட்டியலிட்டால் நூறு பக்கங் களுக்குமேற் செல்லும். தொல்காப்பியம் முதல் வள்ளலார் வரை புரட்சிப் பாவேந்தர் பாரதிதாசன் உட்படச் செம்பொருள் கண்டோர் அருளிய சங்க இலக்கியம், திருமுறை, திவ்வியப் பிரபந்தம், மெய்கண்ட சாத்திரங்கள், சிற்றிலக்கியங்கள், காப்பியங் கள், பட்டினத்தார், தாயுமானவர் பாடல்கள் யாவும் மேற்கோள் களாக அமைந்து ஒளி வீசுகின்றன. இன்றியமையாத இடங்களில் மேற்புலவாணர் கருத்துக்கள் அணி செய்கின்றன. நூலாக்கம் தேர்ந்த சொற்களொடு ஆற்றொழுக்காகச் செல்லும் இனிய எளிய ஆழமான நடையொடு செப்பும் வினாவுமாகத் திகழ்கின்றது. இவ் வணிந்துறையில் நூல் நுதலும் பொருளை மட்டுமே மிகச் சுருக்க மாக வரைகிறேன்.

### முதற்க்கட்டுரை-தமிழர் சமய உணர்வு :

இதன்கண் தமிழக மாந்தரின் தொன்மை, நாகரிகம், பண் பாடு, தமிழ் மக்களின் சீர்மை சான்ற செம்மை, தமிழர் தம் கடவுட் கொள்கை, சமய நெறி, வழிப்பாட்டு முறைமை, அருவ உருவ அருவுருவப் படிமங்களின் இன்றியமையாமைப் பற்றி கூறப்ப்டு கின்றது.

### இரண்டாவது தமிழகக் கோயிற் கட்டிடக்கலை ;

இதன்கண் தமிழர் கடவுள் வழிப்பாட்டிற்காகத் தேர்ந்து அமைத்துக் கொண்ட இடம், அமைத்துக் கொண்ட முறைமை தெய்வப் படிவங்களை மன்றங்களிலும் மரங்களின் கீழ் அமைந் துள்ள பொதியில்களிலும் நாட்டி வழிபட்ட நிலை, படிப்படியாகச் செம்மண் சுடுமண் மாடங்களாகவும் மரக் கோட்டங்களாகவும் வளர்ந்து பின் கருவறையின் முன் பலவாக அமைந்த மண்டபங்கள் கருவறையைச் சூழ்ந்து கோலப்பட்ட திருச்சுற்றுக்கள், பரிவாரத் தெய்வங்கள் அமைந்த கற் கோயில்களாக எழுப்பப்பட்ட நிலைகள் யாவும் அகச்சான்றுகளோடு காட்டிக் கல்வெட்டுச் சான்றுகளால் நிறுவப்பட்டுள்ளன. மாடக்கோயில்களின் வகைப்பாடுகள் சுட்டப் பட்டுள்ளன. கோயிற் கட்டிடக்கலையும் சிற்ப நுட்பங்களும்

தமிழ்க்கணிவரர்லும் கலைஞர்களாலும் உருவாக்கப்பட்டவையே என்பது சான்றுகளால் வலியுறுத்தப்படுகிறது, திருக்கோயிலை மையமாகக் கொண்ட ஓவியக்கலை, இசைக்கலை முதலியனவும் தமிழர் வகுத்துக் கொண்டவையே என்பதும், பெருவுடையார் கோயிலின் சிறப்பும் விளக்கப் பட்டுள்ளன,

மூன்றாவது கட்டுரை தமிழகத்து சைவ சித்தாந்தம்

இக்கட்டுரை இந்நூலாக்கத்தின் தலையாய குறிக்கோளாக அமைந்துள்ளது. இது பழந்தமிழ் மக்களின் நாகரிகப் பண்பாட்டினையும் கலைஞானத்தையும் சிந்தனைத் தெளிவையும் குறிக்கோளையும் நுட்பமாகத் தெரிவிக்கின்றது. தமிழரின் கடவுட் கொள்கை, சமய நெறி, ஒழுக்கம், பண்பாடுபற்றிச் சிறிது விளக்கமாக ஆராய்கிறது. இன்றைய வழக்கில் வரலாற்று ஆசிரியர் ஆய்வாளர் பலரின் கரவானும் காரறிவாண்மையானும் பிறழ உணர்ந்து பேதித்து இன்னும் தமிழ் மக்கள் தெளிவிறாத நிலையில் உள்ள வேதம், வேதாங்கம், நால் வருணம், யாகம், மந்திரம், அறுவகைச் சமயம் பற்றிய பிழையான கருத்துக்களை நுணுகி நோக்கித் தமிழர் வேதமாகிய நான்மறை வேறு, நால்வருணம் வேறு, தமிழர் கூறும் மந்திரம் வேறு ஆரியர் கூறும் மந்திரம் வேறு, அவ்வாறே வேள்வி வேறு, யாகம் வேறு என்பதைத் தெளிவுபடுத்துகிறது. ஆகமங்கள் தமிழ் மெய்யறிவாளர்களால் பகரப்பெற்றவை, அந்தணர், ஆதிசைவர் என்போர் தமிழ்ச் சான்றோர்களே என நிறுவுகின்றது. இன்றைக்குள்ள சிதம்பரம் தீக்கிதர்களே சுந்தரர் கூறும் தில்லைவாழ் அந்தணர் என்று கொள்வதற்கு நூல்கள் இடந்தரவில்லை என்பதை எடுத்துக்காட்டுகிறது.

சைவ சித்தாந்தம், ஐந்தெழுத்து மந்திரம், ஐந்தொழில், நால்வகை நெறி முதலியவை தமிழகத்து மெய்யறிவாளர்களால் நவிலப் பெற்றவையே; வேதாந்த சித்தாந்தம் என்பது இருபெயரொட்டாக ஒன்றையே குறிக்கும்; சங்கரர், இராமனுசர், மாத்துவர் ஆகியோரால் சுட்டப்பெறும் வேதம் வேறு; பிரம்ம சூத்திரத்தின் விளககமாக அவர்கள் கூறும் மதங்கள் வேறு; தமிழகத்துச் சிவநெறி திருமால் நெறி வேறு என்பதைத் தருக்க முறையாற் கூறி நிறுவுகின்றது. கடவுள் - வேதம் - சிவம், சமயம், மந்திரம், வேந்தன், அந்தணர், கோபுரம் என்றாற் போன்ற சொற்களின் நுண்பொருள் விளக்கங் கள் இனிமையும் வாய்மையுமாக உள்ளன.

ஒரு தொடரிற் கூறின், இந்நூல் தமிழர்தம் சமயமும் சமயக் கோட்பாடுகளும் ஆரியவழிப்பட்டன அல்ல, தமிழரால் தமிழருக் காகத் தமிழ் மொழியில் உருவானவையே என்பதாகும். இத்தகைய தொரு அரிய நூலைப் படைத்தருளிய ஆசிரியர் உலக சுப்பிரமணி யானார் அவர்களுக்குத் தமிழுலகம் நன்றிக் கடப்பாடுடையதாகும். மேலும் இவர்தம் ஆய்ந்து தெளிந்துள்ள கருத்துக்களையெல்லாம் உலக நலங்கருதி நூலுருவத்தில் தரல்வேண்டுமென வேண்டிக் கொள்கிறேன். இவர்தம் தொண்டு சிறக்கப் பல்லாண்டு பல் லாண்டு எலலா நலத்தொடும் வலத்தொடும் வாழ இறையருள் புரிக என வேண்டுகிறேன்.

வாழ்க சிவம் - வளர்க தமிழ்

தஞ்சாவூர்
7—3—90

அன்பன்
ச. பாலசுந்தரம்

முனைவர் சோ. ந. கந்தசாமி
தலைவர், மொழிப்புலம்.
பேராசிரியர் & தலைவர்,
இலக்கியத்துறை,
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர்,

தஞ்சாவூர்
6—3—1990

# அணிந்துரை

தமிழர் சமயம், தமிழகத்துக் கோயில்கள், தமிழர் வேதம் என்ற தொடர்புடைய பொருள் குறித்து ஆழ்ந்து சிந்தித்து, அனுபவத்தின் பயனாக எழுதப் பெற்றிருக்கும் இந்நூலினை முழுமையாகப் படித்துப் பார்த்தேன். தெளிந்த சிந்தனையும், வரையறை பெற்ற எண்ணமும், கூற எடுத்துக்கொண்ட கருத்திற்கு அரண் தரும் வகையில் விழுமிய மேற்கோள்களை எடுத்துக்காட்டும் நுட்பமும் இந்நூலாசிரியரிடம் விளங்குதல் காணலாம். உலகத்தின் தொன்மை நாகரிகங்களின் தொட்டிலாகக் கருதப்படும் தமிழர் நாகரிகம் பற்றிய சிந்தனைகள் சமய நோக்கில் இந்நூலில் அலசி ஆராயப் பெற்றுள்ளன. வடமொழியில் வழங்கும் இதிகாசங்கள், புராணங்கள் ஆகியவற்றில் தமிழகம், தமிழ்வேந்தர் பற்றிய குறிப்புக்கள் இடம் பெறும் பாங்கும், சங்க இலக்கியங்களில் நந்தர், மோரியர் முதலிய வடநாட்டு அரச மரபினர் சுட்டப்பெறும் பாங்கும் முதற் கட்டுரையின் தொடக்கத்தில் எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன. முதல் திருக்குறளில் சுட்டப்பெறும் 'ஆதி' என்ற சொல் சிவனைக் குறிக்கும் என்பதற்கு இந்நூலாசிரியர் எடுத்துக்காட்டும் சான்றுகள், எண்ணத்தகுவன. சங்க இலக்கியம், காப்பியங்கள், திருமுறைகள் நாலாயிரத்திவ்விய பிரபந்தம் ஆகியவற்றிலும், பட்டினத்தார் தாயுமானவர், வள்ளலார் ஆகியோர் பாடல்களிலும் இக்காலத்தில் சிறந்த கவிஞர்களாக விளங்கிய பாரதியார், பாரதிதாசன் பாடல்களிலும் கட்டப்பெற்றுள்ள இறைபற்றிய இலக்கணத்தைப் போதிய ஆதாரங்களோடு நிறுவியுள்ளார். ஒளிமயமாகவே பண்டைத் தமிழ் மக்கள் இறைவனை ஏத்திய சிறப்பும் இந்நூலில் குறிக்கப்பெற்றுள்ளது.

தமிழகத்தில் விளங்கும் கோயில்கள் பற்றிய இரண்டாவது ஆய்வுக் கட்டுரையில், தமிழர்தம் கட்டடக்கலை வரலாறு சுருக்கமாகவும் விளக்கமாகவும் சொல்லப்பட்டுள்ளது. பல்லவர்

காலத்துக்கு முற்பட்ட கோயில் அமைப்பினையும் சங்கம் மருவிய காலத்தில் வாழ்ந்த கோச்செங்கணான் என்ற சோழவேந்தன் எடுந்த மாடக் கோயில்களின் அமைப்பினையும் இந்நூலார் விரிவாகக் குறித்துள்ளார். கி. பி. 6-ஆம் நூற்றாண்டு முதல் பல்லவ வேந்தர்களால் எடுப்பிக்கப்பெற்ற குடவரைக்கோயில்சள், கற்கோயில்கள் பற்றியும் பிற்காலச் சோழவேந்தர்கள். பாண்டிய அரசர்கள், விசயநகர வேந்தர்கள், நாயக்க மன்னர்கள் ஆகியோர் பக்திப்பெருக்கினால் பரம்பொருளுக்கு நிறுவிய கலைக்கோயில்கள் பற்றியும் இந்நூலில் கூறப்பெற்றுள்ள கருத்துக்கள் கோயிற்கலையில் இவர்க்குள்ள பயிற்சியையும் தேர்ச்சியையும் தெள்ளத்தெளிவாகப் புலப்படுத்தும். முதலாம் மகேந்திரவர்மன், முதலாம் நரசிம்மவர்மன், ஆகிய பல்லவ வேந்தர்களும், முதலாம் இராசராசன் அவன் புதல்வன் இராசேந்திரன், இரண்டாம் இராசராசன், அவன் புதல்வன் மூன்றாம் குலோத்துங்கன் ஆகிய சோழ வேந்தர்களும் பாண்டியன் மாறன் சேந்தன், பராந்தகன் முதலிய பாண்டியவேந்தர்களும் கோயிற் கட்டடக் கலையில் தனி முத்திரைகளைப் பதித்தவர்கள். பிற்காலத்தில் விசய நகர மன்னர்கள் கோயில் அமைப்பில் பல புதுமைகளைப் படைத்தவர்கள் என்ற உண்மையை இந்நூல் தெளிவாக விளக்குகின்றது. கோயில்களுக்கெல்லாம் அரசாகத் திகழும் தஞ்சைப் பெரிய கோயிலின் அமைப்பினைப்பற்றி இவர் வரைந்திருக்கும் பகுதிகள் படிந்து மகிழத்தக்கவை. தமிழ் வேந்தர்களால் உருவாக்கப்பெற்றுப் பொதுமக்களால் பல்லாண்டு காலமாகப் பரவப்பெற்று வரும் தில்லை நடராசர் திருக்கோயிலைத் தீட்சதர்களின் சொத்து என்று உரிமை கொண்டாடிய காலம் உண்டு. எனினும் அக்கோயில் தீட்சதர்களின் சொத்து அன்று என்று உயர்நீதிமன்ற நீதிபதிகள் சென்ற நூற்றாண்டு முதலே வழங்கியுள்ள தீர்ப்புக்களைப் போதிய ஆதாரங்களுடன் நூலாசிரியர் எடுத்துக் கூறுதல் ஒரு புதிய, ஆனால் உண்மையான வரலாற்றுச் செய்தியாகவே திகழ்கின்றது. தமிழர்கள் கோயிலை அடிப்படையாகக் கொண்டே ஆடல், பாடல், ஓவியம், சிற்பம் முதலிய பல கலைகளையும் வளர்த்து வந்துள்ளனர். எனவே தமிழர்தம் நாகரிகம், பண்பாடு ஆகியவற்றை அறிந்து கொள்வதற்குத் தமிழகத்தில் பல்வேறு காலங்களில் எழுப்பப்பெற்ற கோயில்களும் அவற்றில் பொறிக்கப்பெற்றுள்ள வரலாற்று முக்கியத்துவம் மிக்க கல்வெட்டுக்களும் சிறந்த ஆவணங்களாகப் போற்றத்தகுவன.

தமிழகத்துச் சைவசித்தாந்தம் என்ற தலைப்பில் எழுதப்பெற்றுள்ள மூன்றாவது கட்டுரை சிவ வழிபாடு மிகவும் தொன்மை வாய்ந்தது என்ற உண்மையும், அது தமிழர்களுக்கு உரியது என்ற கருத்தும் சங்க இலக்கியச் சான்றுகளினாலும் திருமுறைக் குறிப்புக்

களாலும், நிறுவப்பெற்றுள்ளன. தொல்காப்பியம், சங்க இலக்கியம், திருமுறைகள் முதலியவற்றில் சுட்டப்பெறும் நால்வேதம், அந்தணர் முதலிய சொற்கள் முறையே தமிழ் மொழியில் வழங்கி வந்த அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப் பொருள்களைக் கூறும் பனுவல்களையும், எவ்வுயிர்க்கும் இரக்கம் காட்டும் அன்புள்ளம் கொண்ட அருட்செல்வர்களையும் சுட்டுவன என்றும், இவ்விரு குறியீடுகளும் முறையே வடமொழில் காணப்படும் நான்கு வேதங்களையோ பிராமணர்களையோ சுட்டவில்லை என்றும் இந்நூலாசிரியர் சிந்தித்துக் கூறியுள்ளார். தம் கருத்தை வலியுறுத்தும் வகையில் எண்ணற்ற இலக்கியச் சான்றுகளை இவர் வழங்கியிருத்தல் நோக்கத்தக்கது. சங்க இலக்கியம், திருமுறைகள் ஆகியவற்றில் காணப்பெறும் இறை, உயிர், உலகு பற்றிய கருத்துக்களின் தொகுப்பே தமிழர்களின் மெய்ப்பொருட் கோட்பாடாகிய சைவ சித்தாந்தமாக உருப்பெற்றுள்ளது என்ற உண்மையைத் தக்க ஆதாரங்களுடன் நிலைநாட்டியுள்ளார். சைவசித்தாந்தம் தமிழர்களின் மெய்ப்பொருட் சிந்தனையில் கனிந்த முடிந்த முடிவான அறிவுப்படைப்பு என்பதை மேலைநாட்டறிஞர்கள் ஆராய்ந்து உணர்த்திய குறிப்புகளைக் கொண்டு தெளிவுறுத்தியுள்ளார்.

இந்நூலின் ஆசிரியர் சிறந்த தமிழ்ச்சான்றோர், ஆரவாரமற்ற அன்புள்ளம் கொண்டவர், தமிழ்ப் பணியும் சமயப் பணியுமே கடமையாகக் கொண்டவர்; இந்திய ஆட்சிப் பணியில் பல்லாண்டு காலம் பணியாற்றி மாவட்ட ஆட்சித் தலைவராகவும், இந்து சமய அறநிலையத் துறையின் ஆனையராகவும் விளங்கி, மொழி சமயம், இனம் ஆகிய பல நிலைகளில் பெரும் பணியாற்றிய பெரியார்; தஞ்சைத் தமிழ்ச் சங்கத்தின் தலைவர்; தென்கிழக்காசிய நாடுகளுக்குப் பயணம் சென்று அந்நாடுகளில் நமது கலை, சமயம் எவ்வாறு பரவி வளர்ந்துள்ளன என்பதைக் கள ஆய்வு செய்து கண்டவர். இத்தகைய பெருந்தகையார் இயற்றியுள்ள இந்த அரிய ஆராய்ச்சி நூல் தமிழர்தம் சமய வாழ்வியலைத் தெளிவாக விளக்குதலின், இந்நூலினை அனைவரும் பயின்று பயன் பெறுதல் வேண்டும் என்பது என் வேண்டுகோள்.

**சோ. ந. கந்தசாமி**

சித்தாந்தச் செம்மல், சைவசித்தாந்தமணி,
சிவநெறித் தமிழ்மணி,

வித்துவான் அம்பை **இரா. சங்கரன்**

பெருஞ்சொல் அகராதித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

# பாராட்டுரை

திரு.யு. சுப்பிரமணியன், இ.ஆ.ப (ஓய்வு), முன்னாள் மாவட்ட ஆட்சித்தலைவர், தமிழ்நாடு இந்து சமய அறநிலையத்துறை ஆணையர் அவர்கள் 'தமிழர் சமயம், தமிழர் வேதம் தமிழகத்துக் கோயில்கள்'' என்னும் தலைப்பில் இந்நூலை எழுதியுள்ளார்கள். அவர்கள் தமிழக இந்து சமய அறநிலையத்துறை ஆணையரா யிருந்ததால் எல்லா இந்து சமய நிறுவனங்களைப் பற்றியும் அறியும் வாய்ப்பு அவர்களுக்கு இயல்பாகவே ஏற்பட்டுள்ளது. அவ்வப்பொழுது கிடைத்த குறிப்புக்களையெல்லாம் கவனத்துடன் குறித்து வைத்திருக்கிறார்கள். அக்குறிப்புகள் இந்நூல் எழுத மிகவும் பயன்பட்டுள்ளன தமிழர்களுக்குரிய சமயம் சைவம்; அது மிகத் தொன்மைவாய்ந்தது; தமிழர்களுக்குரிய வேதம் சிவபெருமானால் ஆன்றாலின் கீழிருந்து அருளிய நான்மறை; அவற்றின் பிழிவே பன்னிரு திருமுறைள்; இவற்றின் நெறிமுறையைப் பின் பற்றியே தமிழகக் கோயில்கள் வழிபாடுகள் இலங்குகின்றன என்பதே இவர்கள் இந்நூலில் கொண்ட முடிவு. இம்முடிவுக்கு ஆதாரங்களாக இவர்கள் மேற்கொண்ட நூல்கள் தொலகாப்பியம், சங்க இலக்கியங்கள், பன்னிரு திருமுறைகளேயாம். இந்நூல்களிலிருந்து தாம் குறிப்பிடும் செய்திகளுக்கெல்லாம் மேற்கோள்களை அள்ளி விசிபிருக்கின்றார்கள் வரலாற்றாசிரியர்கள் முடிவுகளையும் அவ்வவ்விடங்களில் ஒப்பு நோக்கித் தள்ளுவன தள்ளி, கொள்ளுவனவற்றைத் தக்க சான்றுகள் காட்டியும் நிறுவியுள்ளார்கள். மதம், மதி என்னும் சொல்லிலிருந்து தோன்றியது; வேதம் வித்து என்னும் அடிப்படைச் சொல்லிலிருந்து வந்தது; வேது, வேதித்தல், வேதன். வேதா, வேதியன், வேதாந்தம் என்பவையையும் காண்க என்று இவ்வாசிரியர் குறிப்பிட்டிருப்பது மிகவும் அறிவுக்கு கந்ததாயுள்ளது. இவ்வாறு பல சொல்லாட்சிகளையும் ஆய்ந்து படிப்போரின் சிந்தனையைத் தூண்டி விட்டிருப்பது மிகவும் பாராட்டுக்குரியதாம்.

நாத்திகம் இன்றெழுந்ததன்று, பண்டையதே. இருப்பினும் அந்நாத்திகத்தையும் மீறி கடவுட்கொள்கை மேலோங்கியிருக்கிறது என்பதற்குரிய சான்றுகளை பக்கம் 9 முதல் நிறையாகக் காண லாம். அப்பால் கோயில்கள் எழுந்த சூழ்நிலையும் நன்கு விளக்கப் பட்டுள்ளது. அந்தணர்கள். வேதியர்கள், வேதம், இருக்கு முதலியவையெல்லாம் தமிழர்களையும் அவர்களின் நூல்களையும் குறிப்பிட்டுள்ளனவே என்பதற்குச் சான்றுகள் இந்நூலில் பல உள்ளன. சுருங்கக்கூறின், ஆரிய பிராமணர் வேறு, தமிழக அந்தணர் வேறு, இவ்விருவகையாரின் நடை, உடை, பாவனை கள் வேறு, வேதம் முதலியனவும் வேறுபட்டனவே, ஆரியர்களுக்கு இறைவன் நாராயணன், அக்கினி, இந்திரன், வருணன் போன்றவை களாகும், தமிழர்கள்தான் சிவனைப் போற்றி வழிபட்டனர், தமிழர் களின் சமயக் கொள்கைதான் சைவ சித்தாந்தம், அது மிகப் பழங் காலத்தியது, அக்கொள்கைகள் பல நூல்களிலும் பலவாறு சிதறலாகக் காணப்பட்டதை வரன்முறைப்படுத்தியது தோத்திர ரூபமாகவும் சாத்திர ரூபமாகவும் பிற்காலத்து ஆகும் என்பதை ஆணித்தரமாக இவ்வாசிரியர் இந்நூலில் நன்கு விளக்கிக் கூறி யுள்ளார். திருமூலர் திருமந்திரத்திலிருந்து ஆசிரியர் காட்டும் சானறுகள் அளப்பில. திரு. கா. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் திருநான்மறை விளக்கம் என ஒரு நூலியற்றினார்கள். அதில் தமிழர்களுக்கு நான்மறை தனியேயிருந்தது என்று குறிப்பிட்டிருந் தார்கள். அந்நூல் தற்போது கிடைப்பது அருமை. அறிஞர் களுக்கு ஒத்த எண்ணங்கள் எழுவது இயற்கை. அம்முறைப்படி இந்நூலாசிரியர் தம் கருத்துக்களை தொல்காப்பியம், சங்க இலக் கியம், திருமுறைகள் முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டு சான்றுகளைச் காட்டி விளக்குவது மிகச் சிறப்பாகும் மேலும் இந் நூலில் தில்லைவாழ் அந்தணர் யார் ? வேதாந்த சித்தாந்தச் சொற் பிரயோகம் முதலிய பல செய்திகளைப் பரக்கக் காணலாம். தமிழர்கள் யாவரும் தம்பெருமை தாமறியாத் தம்பிரான்களாகயிருக் கின்றனர். அவ்வாறு இருக்காது எழுச்சி யூட்டத்தக்க நிலையில் சிறந்த தூண்டு கோலாய் இந்நூல் அமைந்துள்ளது என்பது

ஒருதலை, யாவரும் இந்நூலை வாங்கிப்படித்துத் தாமும் பயன் பெறுவதோடு பிறரையும் ஆற்றுப்படுத்த இந்நூல் சிறந்த சாதன மாய் அமையுமென்று நம்புகின்றேன். இந்நூலாசிரியரின் பெரு முயற்சியை எவ்வளவு பாராட்டினாலும் தகும். இன்னும் இத்தகைய தொண்டுகள் பல இயற்றி திரு. யு சுப்ரமணியன் அவர்கள் நீடு வாழ்வார்களாக. அதற்குத் திருச்செந்திலாதிபன் திருவருள் துணை செய்ய அவன் திருவடியாணைக்ளையே துதித்து அமைகின்றேன்.

வாழ்க உலகெலாம்.

தஞ்சாவூர்,
9 3—90.

இரா. சங்கரன்

# ஆசிரியர் முன்னுரை

கல்லூரிப் பட்டபடிப்பு முடியும் வரை வரலாறு, அரசு இயல், ஆங்கிலம், தமிழ் ஆகியவற்றைக் கற்ற மாணவன், தமிழன்-என்ற நிலையில், தமிழகத்து வரலாற்றிலும் தமிழ் மொழியிலும் தமிழ் இலக்கியத்திலும் பற்றுடன் ஈடுபட்டு வந்துள்ளேன். நாற்பது ஆண்டு அரசுப் பணிக்காலத்தில் பல்வேறு துறைகளின் நடவடிக்கைகளிலும் நிகழ்ச்சிகளிலும் பங்குகொண்டு தமிழரின் பண்டைய இலக்கியம், சமூகம், சமயம் ஆகியவைபற்றிப் பல உண்மைகளை அறிந்துகொள்ள முடிந்தது. மேலும், மாணவப் பருவத்திலிருந்து இன்றுவரைத் தமிழ்ச் சான்றோர்கள் பலரோடு தொடர்பு வைத்துக் கொள்வதற்குக் கிடைக்கும் வாய்ப்பினை ஆர்வத்துடன் பயன் படுத்திக்கொண்டும் வருகிறேன். இவை காரணமாகத் தமிழகத்தின் வரலாறு, தமிழ்ச் சமூகம், தமிழர் சமயம், தமிழ்க் கலைகள் ஆகியவைபற்றிப் பலவகைச் சிந்தனைகள் அவ்வப்போது உருப்பெற்றன. அதே சமயத்தில், சங்க நூல்களிலும் திருமுறைகள் போன்ற சமய இலக்கியத்திலும் குறிப்பிடப்படுகிற வேதம், நான்மறை, அந்தணர் முதலியனபற்றித் தெளிவின்றி ஒருவிதக் குழப்பம் உள்ளதே என்ற உணர்வும் தோன்றலாயிற்று. இம்மன நிலையில் தொல்காப்பியம், சங்க நூல்கள், திருமுறைகள் ஆகியவற்றைச் சற்று நுணுக்கமாகப் பல ஆண்டுகளாகப் படித்துவந்தேன். இந்நூல்கள் தெரிவிக்கும் கருத்துக்கள், தமிழரின் பண்டைய சமயக் கொள்கைகளின் தனித்தன்மையைத் தெளிவுடன் விளக்குவதாக உள்ளதை அறிய முடிந்தது. இந்நூல்களில் வரும் 'வேதம்' என்ற சொல் ஆரிய வேதத்திற்கு வேறான தமிழினத்தாரின் வேதத்தைத்தான் குறிக்கிறது என்பதும் தெளிவாகப் புலனாகிறது. 'அந்தணர்' என்ற சொல்லும், அதுபோன்ற இதர சொற்களும் பிராமணர்களைக் குறிக்கவில்லை என்பதும் விளங்கிற்று.

தமிழர்கள் 'தனித்தெய்வம்' எனக் கருதி வணங்கிய சிவனின் அருமை பெருமைகளைச் சங்க இலக்கியமும் திருமுறைகளும் கூறுகின்றன.

உய்யவல் லார்கட் குயிர் சிவஞானமே
உய்யவல் லார்கட்குயிர் சிவ தெய்வமே
உய்யவல் லார்கட் கொடுக்கம் பிரணவம்
உய்யவல் லாரறி வுள்ளறி வாமே

என்ற திருமந்திரத்தில் தமிழரின் சிவநெறித் தத்துவம் அடங்கியுள்ளது.

இந்நூல்கள் தெரிவிக்கும் இத்தகைய கருத்துக்களை இச்சிறிய நூலில் தொகுத்துக் கொடுத்துள்ளேன். இவைகள் தமிழக வரலாற்றின் முக்கியமானதொரு பகுதியை நன்கு அறிவதற்கு டயன்படும் என்பது எனது தாழ்மையான நம்பிக்கை.

ஆதியில், சிவநெறியே செந்நெறி என சிவவழிபாட்டை முதன்மையாகக் கொண்டு தனித்தன்மையுடனிருந்த தமிழரின் சைவ சமயம், பிற்காலத்தில் வடமொழி வேத மதத்தின் கோட்பாடுகள் சிலவற்றைச் சேர்த்துக்கொண்டு, ஒரு கலப்புச் சமயமாகச் சில நூற்றாண்டுகளாக இருந்துவருகிற நிலையில், தமிழினத்துச் சைவ சமயத்தின் கூறுகள் எவை எவை என்று வரலாற்றுக் கண்ணோட்ட அடிப்படையில் தமிழர்கள் ஆராய்ந்து அறிந்து கொள்ளல் மிகவும் வேண்டப்பட்டதாகும். பல்வேறு கலாச்சாரங்களுக்குரிய பலதிறப்பட்ட மக்களைக் கொண்டுள்ள நாட்டில், ஒவ்வொரு கலாச்சாரத்தின் உண்மை நிலையையும் சிறப்பையும் உணர்ந்து, ஏற்று, மதிக்கும்போதுதான் கலாச்சாரங்களுகிடையே இயற்கையாக உள்ள வேறுபாடுகளினால் பிளவுகள் ஏற்படுவதற்கான சூழ்நிலை தோன்றாமலிருக்கும். இச்சமூகவியல் உண்மையை மறந்து, கலாச்சராங்களுக்கிடையே உயர்வு, தாழ்வு வலியுறுத்தப்படுவது நிறுத்தப்படாமல், ஏதாவது ஒரு கலாச்சாரத்திற்குத் தனிப்பட்ட உயரிய இடமும், முக்கியத்துவமும் வலியுறுத்தும் நிலை தொடர்வதால், சமூகத்தில் ஒற்றுமையையும் ஒருமைப்பாட்டையும் உருவாக்கும் முயற்சி தடைப்படுகிறது. நம் மக்கள் இச்சூழலை உணர்ந்து, ஒவ்வொரு கலாச்சாரத்திற்கும் அதற்குரிய இடத்தை அளித்து, வேற்றுமையில் ஒற்றுமையைக் காணவேண்டும் எனப் பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன்.

இந்நூலின்கண் உள்ள பல்வேறு பொருள்களில் தனிப்புலமை உள்ளவர்களின் மதிப்புமிக்க கருத்துக்களைப் பெற வேண்டுமென்ற விருப்பத்தினால், அவ்வாறான ஆன்றோர்களின் அணிந்துரைகளை நாடினேன். தமிழ் மொழி, வடமொழிப் பேரறிஞர் மு. அருணாசலம், பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன், வித்துவான் கோ. மு. முத்துசாமி பிள்ளை (ஐ.ஏ.எஸ், ஓய்வு) பேராசிரியர் மேஜர் அ. கிருஷ்ணமூர்த்தி, பேராசிரியர் கி. கோதண்டபாணி, பாவலரேறு, பேராசிரியர் ச. பாலசுந்தரம், பேராசிரியர் டாக்டர் சோ. ந. கந்தசாமி, வித்துவான் அம்பை இரா. சங்கரன் ஆகிய அறிஞர் பெருமக்கள் இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ளார்கள். அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியை வணக்கத்துடன் தெரிவித்து மகிழ்ச்சியடைகிறேன்.

இந்நூலை அச்சிட்ட மாணிக்கம் பிரிண்டர்ஸ் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தாம் இன்புறுவது உலகு இன்புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந்தார்.

யு. சுப்ரமணியன்

தஞ்சாவூர்.

23—3—90

# ஆசிரியர் பதிப்புரை

இவ்வாண்டு மார்ச் திங்கள் வெளியிடப்பெற்ற 'தமிழர் சமயம் தமிழர் வேதம், தமிழகத்துக் கோயில்கள்' எனும் நூலில் எழுதப்பட்டுள்ள பொருள்களைப் பற்றி மேலும் விரிவாக நூல் எழுத வேண்டும் என்ற எண்ணம் தோன்றியதால் இந்நூலை எழுதியுள்ளேன். முந்தைய நூல் அச்சடிக்கப் பெற்ற உடனேயே இப்பணியில் ஈடுபட்டேன்.

முந்தைய நூலைவிட விரிவாக அமைந்துள்ள இந்நூலில், மூன்றாம்பகுதியின் தலைப்பைப் பெரிதாக்கியும், தமிழர் சமயம், தமிழர் வேதம் ஆகியவைபற்றி புதிய விவரங்களையும் அதிக மேற்கோள்களையும் சேர்த்துள்ளேன். தமிழர் சைவ சமயம்பற்றித் தமிழர் தெரிந்துகொள்ள வேண்டிய பொதுவான விவரங்களில் பெரும்பாலானவை இந்நூலில் குறிக்கப்பெற்றுள்ளன. தமிழரின் சைவ சமயத்திற்குத் தொடர்பாக உள்ளவை சிலவற்றில் பிழையான கருத்துக்கள் வெகுகாலமாக இருந்துவருகின்றன. இதனால் தமிழரின் சிவ நெறிக்கே உரிய மேன்மை மறையலாயிற்று. இவ்வுண்மை, மரபுவழி வரும் கருத்துக்களை மறந்து, தொல்காப்பியம், சங்க இலக்கியம், திருமந்திரம், தேவாரம், திருவாசகம், பெரிய புராணம் ஆகியவற்றை கூர்ந்தும் நுட்பமாகவும் ஆராயும்போது புலனாகிறது இந்நூல்கள் தெரிவிப்பதை ஆதாரமாகக் கொண்டு, நம் சைவ சமயம் விளககப்பட வேண்டியது மிகவும் இன்றியமையாததாகும்.

தமிழரின் ஆர்வம் தமிழ்மொழிபற்றியதோடு மட்டும்நின்றுவிடக் கூடாது. தமிழினத்தின் தொன்மைச் சிறப்பு, தமிழ் மொழி, தமிழர் சமயம் ஆகிய இரண்டின் அடிப்படையிலானது என்பது மறுக்கக் கூடியதல்ல. தமிழ் மொழியில், சமய இலக்கியம் முக்கியமான

பகுதியாகும். தமிழரின் சமயத் தத்துவங்கள் உன்னதமானவை, தனித்தன்மையுடையவை. தமிழ் மொழி சிறப்புற்று விளங்குவதில், இலக்கிய வளமும் பெருமைக்குரிய சமயத் தத்துவமும் கொண்டுள்ள பழைய சமய நூல்களுக்குப் பெரும் பங்குண்டு. அதனால், நாமெல்லோரும் தமிழரின் சைவ சமயம் பற்றியும் தமிழ்ச் சமய இலக்கியம் பற்றியும், முறையான, தெளிவான கருத்துக்களைப் பெற்று, அக்கருத்துக்களை எங்கும் பரவச் செய்து, நீண்ட காலமாக இருந்து வருகிற தவறான கருத்துக்களை அகற்றி, நம் சைவ சமயத்தின் அரிய சிறப்புக்களை மீண்டும் நிலைபெறச் செய்ய வேண்டும். எங்கும் ஆன்றோர்கள் அவரவர் மதத்தின் கோட்பாடுகளைப் பெருமிதத்துடன் விளக்கிப் பாராட்டும்போது, தமிழரும் தம் சைவசமயத்தின் தொன்மைச்சிறப்பையும் தனித்தன்மையையும் தத்துவ உயர்வையும் தமிழ் இலக்கியச் சான்றோடு எடுத்துக் கூறுவது பொருந்தமான பணியாகவே ஏற்றுக்கொள்ளப்பெறும். மொழி, இலக்கியம், சமயம், கலைகள், பண்பாடு ஆகியவை எல்லாம் பாதுகாக்கப்படும் வரையில் அவற்றுக்குரிய இனம் நீடிக்கும்.

இந்நூலைத் திறந்த மனதுடனும் நடுநிலை உள்ளத்துடனும் படித்து, தமிழரின் சைவ சமயத்திற்குத் தொடர்பான அனைத்திலும் உண்மை நிலையைக் காணுமாறு வேண்டுகிறேன். இந்நூலில் முந்திய நூலின் அணிந்துரைகளோடு உள்ளதும், புதியனவும் சேர்க்கப்பட்டுள்ளன. முந்திய நூலைவிட இது விரிவாக அமைந்துள்ளதால், இந்நூலை முந்திய நூலின் இரண்டாம் பதிப்பு என்று கூறுவதற்கில்லை. எனினும், இரண்டு நூல்களின் தலைப்பு ஒன்றாக இருப்பதால், எதிர்காலத்தில் குழப்பம் ஏற்படாமலிருக்க, இந்நூல் மாற்றுப்பதிப்பு' (Revised Edition) எனக் குறிப்பிடப்படுகிறது. இந்நூலில் வருகின்ற திருமந்திரங்களுக்கு ஜி. வரதராஜன், பி. ஏ. அவர்களின் 'திருமந்திரம்' (பழனியப்பா பிரதர்ஸ் பதிப்பு) நூலில் உள்ளவாறு எண்கள் குறிக்கப்பட்டுள்ளன.

இந்நூலை நல்ல முறையில் விரைவாக அச்சடித்துக் கொடுத்து உதவிய ஜே. வி. பிரிண்ட்டர்ஸ் அவர்களுக்கு எனது உளமார்ந்த நன்றியை அன்புடனும் வாழ்த்துடனும் தெரிவித்துக்கொள்கிறேன்

தஞ்சாவூர்
24–12–90

**யு. சுப்ரமணியன்**

*தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத்து ஊறும் அறிவு.*

## உள்ளுறை

# தமிழர் சமய உணர்வு

உலகில் பெரும்பாலான மக்கள் தெய்வ நம்பிக்கை உள்ளவர் களாக இருந்து வருகின்றனர். தெய்வ நம்பிக்கை அல்லது தெய்வ உணர்வு, தெய்வ வழிபாடு ஆகியவையும், இவ்விரண்டின் காரண மாகக் கடைபிடிக்கப்படுகிற ஆன்மீகக்கொள்கைகளும் இணைந்து, அவ்விணைப்பின் அடிப்படையில் உலகத்தில் பல்வேறு மதங்கள் (Religions) வெகு காலத்திற்கு முன்பே தோன்றியுள்ளன.

காட்சிக்கும் கருத்துக்கும் வருகிற பொருள்களைப் பற்றி ஆராயவும் அந்த ஆய்வின் விளைவாகத் தக்க முடிவு எடுக்கவும், எடுத்த முடிவைத் துணைக்கொண்டு வாழ்வின் பல்வேறு நிலை களில் ஒழுங்காக நிற்கவுமுள்ள வாய்ப்பு மனிதனுக்கு மட்டுந்தான் கிடைத்திருக்கிறது. அந்த வாய்ப்பினை ஏற்ற முறையில் பயன் படுத்தி நலமும், இன்பமும் பெற முயற்சிப்பவன் மனிதன்.

'நான் யார்? என்னைச் சுற்றிலும் உள்ள உலகம் யாது? என்னையும் உலகையும் இயக்கி வரும் பொருள் யாது? இவை களுக்குள் உள்ள தொடர்பு என்ன?'' என்றெல்லாம் வினாக்களை எழுப்பிச் சிந்திக்கிறான் மனிதன். இவ்வினாக்களுக்கு ஆங்காங்கே சான்றோர்கள் கண்ட விடைகளின் தாக்கமாகத் தெய்வ உணர்வு, தெய்வ நம்பிக்கை, தெய்வ வழிபாடு, ஆன்மீக நெறி, ஆன்மீக வாழ்க்கை ஆகியவை உலகெங்கும் வளர்ந்தன.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ரோம் நாட்டிலிருந்த அறிஞர் சிசரோ, "மனிதன் தன் அறிவு ஆற்றல் ஆராய்ச்சி என்பவற்றால் செய்ய இயலாத ஒன்று இயற்கை நிலையில் காணப் படுகிறது. இதை, மனிதனை விடச் சிறந்த ஒன்றால்தான் தோற்று விக்க முடியும், அது கடவுளையன்றி வேறு எதுவாக இருக்க முடியும்'' என்று கூறியுள்ளார். ("There is something in the nature of things which the mind of man, which reason, which human power cannot effect and certainly that which produces this must be better than man. What this can be but God?'' – Cicero).

மனிதனின் உடல் நயப்படுவதற்கு உணவும், மனம் நயப் படுவதற்குக் கல்வியும் வேண்டப்படுவதுபோல மனிதன் உயிர் (ஆன்மா-soul) நயப்படுவதற்கு மதக்கோட்பாடு வேண்டப்படுகிறது என்பது எல்லா மதத்தினர்களின் முடிவு. கடவுள் நம்பிக்கையும்,

அதன் பயனாகிய சமய நெறியுமே மனிதனைப் பிற உயிரினங்களி லிருந்து வேறுபடுத்தி, அவனை உயரிய தனிப்பண்புடையவனாகச் செய்கின்றன.

வரலாறு, மொழி இலக்கியம், கலை, நாகரிகம், பண்பாடு முதலியவற்றில் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகத் தனித்தன்மை களுடன் உலகத்தின் தொன்மையான நாடுகளில் ஒன்றாகச் சிறந்து விளங்குவது தமிழ்நாடு. இதன் ஆதிப்பெயர் "தமிழகம்". "அருவி ஆர்க்கும்" என்று தொடங்கும் புறநானூற்றுப் பாடலில் "வையக வரைப்பில் தமிழகம் கேட்ப" என்றுள்ளது. பதிற்றுப் பத்து இரண்டாம்பத்துப் பதிகத்தில் "அமைவரல் அருவி இமையம் விற்பொறித்து இமிழ் கடல் வேலித் தமிழகம் விளங்கத் தன்கோல் நிறீஇ" என்றுள்ளது. சிலப்பதிகாரத்தில், "இமிழ் கடல் வரைப்பின் தமிழகம் அறிய........" என உள்ளது.

வான்மீகியின் வடமொழி இராமாயணத்தில் பாண்டியர் குறிப் பிடப்படுகின்றனர். வியாசரின் வடமொழி மகாபாரதத்திலும், பாண்டிய அரசர்கள் பற்றியும் தமிழகத்தின் சிறப்புப் பற்றியும் குறிப்புக்கள் உள்ளன.* வால்மீகி இராமாயணம், வியாசர் பாரதம் ஆகிய வடமொழி நூல்களில் வரும் கதைகளும் நிகழ்ச்சிகளும் சங்க நூல்களில் குறிப்பிடப்படுகின்றன. மகாபாரதத்தில் குறிப்பிடப்படு கின்ற போரில் இருதிறத்துப் படையினருக்கும் சேரமான் பெருஞ் சோற்று உதியஞ்சேரலாதன் பெருஞ்சோறு வரையாது கொடுத்தான் என்பதைப் புறநானூற்றுப் பாடல் தெரிவிக்கிறது. (பா. 2) இதே நிகழ்ச்சி சிலப்பதிகாரத்திலும் குறிப்பிடப்படுகிறது.

"ஓர்ஐவர் ஈரைம் பதின்மர் உடன்றெழுந்த
போரில் பெருஞ்சோறு போற்றாது தானளித்த
சேரன், பொறையன், மலையன் திறம்பாடி"
(வாழ்த்துக் கதை)

---

* P.T. Srinivasa Iyengar's "History of the Tamils"
K.N. Nilakanta Sastri's "A History of South India"
Dr. V.M. Krishnamurti's "History of Tamil Nadu"
M.N. Venkata Ramanappa's "Outlines of South Indian History"
N. Subrahmanian's "History of Tamil Nadu"
பி. கோமதிநாயகம் "தென்னிந்திய வரலாறு"

வடமொழி வேதங்களைத் தொகுத்தவரும், பதினெட்டு வட மொழிப் புராணங்களை இயற்றியவரும் வியாசரே. இதே வியாசர் எழுதிய பிரம்ம சூத்திரத்துக்குத்தான் (வேத சூத்திரம்) சங்கரர், இராமானுஜர், மாதவாச்சாரியார் ஆகியோர் பாஷ்யம் எழுதியுள் ளார்கள். ஆக, வடமொழி வேதங்கள் தொகுக்கப்பட்ட காலத் திலேயே, வால்மீகி, வியாசர் ஆகியோர் வாழ்ந்த காலத்திலேயே, வடமொழி இராமாயணமும், மகாபாரதமும் தோன்றியகாலத் திலேயே, தமிழகம் சிறப்பான நிலையில் இருந்தது என்பது தெளிவா கிறது. சங்ககாலம் ஏறத்தாழக் கி.மு. 5–ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 3–ஆம் நூற்றாண்டு வரை என்பதும், கடைச் சங்கத்தின் இறுதிக்காலம் கி.பி. 250-க்கு முற்பட்டது என்பதும், சங்க இலக்கியங்கள் கி.பி. 3–ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவை அல்ல என்பதும் பெரும்பாலான அறிஞர்களால் ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ள தமிழக வரலாற்று உண்மைகளாகும். சங்க காலத்தில் தமிழகத்திற்குக் கிழக்கே உள்ள கடாரத்தோடும் சாவகம் முதலிய தீவுகளோடும், சீனத்தோடும், மேற்கே உள்ள அரபு, யவனம் (கிரேக்க நாடு) முதலிய நாடுகளோடும் அரசியல், வாணிபத் தொடர்பு இருந்தது. சங்க நூல்களின் தமிழ் மொழி, நன்றாக வளர்ந்து செப்பமடைந்த மொழியாகும். தமிழ் மொழி, அக்காலத் திலேயே இலக்கியக் கருத்துக்களைச் சொல்வதற்கு ஏற்ற சொல் வளமும், ஆற்றலும், எழிலும் பெற்றிருந்தது. தொல்காப்பியக் காலத்திலும், சங்க காலத்திலும் சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந்தர்களின் ஆட்சி தமிழகத்திலிருந்தது. தொல்காப்பியம் "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்" எனக் கூறுகிறது. அக்காலத்தில் சிறு சிறு நிலப் பகுதிகள் சிறு குறுநில மன்னர் களாலும்(வேளிர்) ஆளப்பட்டன. மூவேந்தர்களுக்கு முடியிருந்தது; வேளிர்களுக்கு முடியில்லை. சங்ககாலத்தில் தமிழகத்தில் பல்லவர் ஆட்சி தோன்றவில்லை. தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியத் திலும் பல்லவர் பற்றிய குறிப்பு ஒன்றும் இல்லை. சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காவியங்களில் காஞ்சியைப் பற்றிக் குறிப்புக் கள் பல இடங்களிலிருந்தாலும், பல்லவ அரசர் யாரும் குறிப்பிடப் படவில்லை.

அகநானூற்றுப் பாடல் 265ல் "பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர் சீர்மிகு பாடலிக் குழீஇ" எனக் குறிப்பிடப்படும் 'நந்தர்' பரம்பரை, வட இந்தியாவில் பாடலிபுத்திரத்தைத் தலைநகராகக் கொண்ட மகத நாட்டைக் கி.மு. 4-ஆம் நூற்றாண்டில் ஆண்ட னர். புறநானூற்றுப் பாடலில் "வென்வேல் விண்பொரு நெடுங் குடைக் கொடித்தேர் மோரியர்" என்றும் (பா.175), அகநானூற்றுப் பாடலில் "விண்பொரு நெடுங்குடை இயல் தேர் மோரியர்"(பா.69)

என்றும் உள்ளன. இப்பாடல்களில் குறிப்பிடப்படும் மோரியர் பரம்பரை, மேலே குறிப்பிடப்பட்டுள்ள அதே மகத நாட்டில், கி.மு. 4-ஆம் நூற்றாண்டிலிருந்து கி.மு.2-ஆம் நூற்றாண்டு இறுதிவரை ஆட்சி (மௌரியர் ஆட்சி) நடத்தினர்.கி.மு. 4-ஆம் நூற்றாண்டின் இறுதிக்காலத்தில், சந்திரகுப்த மௌரியரின் ஆட்சியில் பாடலிபுத்திரத்தில் கிரேக்க மன்னன் செலுகசின் தூதுவராக இருந்த கிரேக்கர் மெகஸ்தனிஸ், தாம் எழுதிய நூலில் தமிழ்நாட்டைக் குறிப்பிட்டுள்ளார். இச்சந்திரகுப்தனுக்கு அமைச்சராக இருந்த கௌடில்யரும் (அர்த்த சாஸ்திரம் எழுதியவர்) பாண்டியநாட்டைக் குறிப்பிட்டு எழுதியுள்ளார். வட இந்தியாவில் மௌரியப் பேரரசன் அசோகன் ஆட்சி செய்த கி.மு. 3-ஆம் நூற்றாண்டுக் காலத்தில் தெற்கே தமிழகத்தில் சேர, சோழ, பாண்டிய மூவேந்தர்கள் தன்னாட்சி நடத்தி வந்துள்ளனர். அசோகனின் இரண்டாவது கல்தூணில் பொறிக்கப்பட்டுள்ள கட்டளையில் (edict) தமிழக மூவேந்தர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர். இம்மூவேந்தர்களுடன் அசோகன் நட்புறவு கொண்டிருந்திருக்கிறான். அசோகன் கட்டளைத்தூண் ஒன்றும் தமிழகத்தில் இல்லாதது குறிப்பிடத்தக்கது.

சங்க காலத்துத் தமிழர்கள் வட இந்தியா பற்றியும் ஆரியர் என்ற இனம் பற்றியும் அறிந்திருந்தார்கள்.

அகநானூறு :

| | |
|---|---|
| "ஆரியர் பிடி பயின்று தருஉம்" | பா. 276 |
| "ஆரியர் படையின் உடைக" | 336 |
| ' ஆரியர் அலறத் தாக்கி" | 396 |
| "ஆரியர் பொன்படு நெடுவரை" | 388 |

பதிற்றுப்பத்து:

"ஆரியர் துவன்றிய பேர் இசை இமயம்" 11

குறுந்தொகை:

"ஆரியர் கயிறு ஆடு பறையின்" 7

நற்றிணை:

"ஆரியர் துவன்றிய பேர் இசை முள்ளூர்" 170

சங்ககாலத்தில் "ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்" என்ற பெயர் கொண்ட பாண்டிய மன்னனும் இருந்திருக்கிறான்.

சிலப்பதிகாரக் காப்பியத்திலும் ஆரியர் குறிப்பிடப்படுகிறார்கள் :

"வட ஆரியர் படை கடந்து"

"வட ஆரியரொடு......"

"ஆரியமன்னர் ஈர் ஐந்நூற்றுவர்க்கு"

"அரும் தேர்த்தானை ஆரிய அரசர்"

"அறியாது மலைந்த ஆரிய மன்னரை"

"ஆரிய மன்னர் அழகுற அமைத்த
தெள்ளு நீர் கங்கைத்தென்கரை"

பண்டைய தமிழர்களுக்கு இமயமலையும் வடஇந்தியாவில் ஓடும் கங்கை ஆறும் தெரிந்திருந்தன. சங்க இலக்கியத்தில் இமயமும், கங்கையும் குறிப்பிடப்படுகின்றன.

சங்கப் பாடல்களில், "வடுகர், வடவடுகர், வடவர், வடபுல மன்னர்,' என்றெல்லாம் வருகின்றன.

அகநானூறு:

"வடவர் தந்த வான் கேழ் வட்டம்" 340

"முரண் மிகு வடுகர் முன்னுற, மோரியர் தென்திசை
மாதிரம் முன்னியவரவிற்கு" 281

புறநானூறு

"வட வடுகர் வாள் ஒட்டிய" 378

"வடபுல மன்னர் வாட" 52

நெடுநல்வாடை :

"வடவர் தந்த வான்கேழ் வட்டம்" வரி-51

தமிழ் மொழியை ஆதியிலிருந்து தாய்மொழியாகவும் தமிழகத்தைத் தாய்நாடாகவும் கொண்டுள்ளவர்கள் தமிழர்கள். தமிழர்கள், வரலாறு, மொழி, சமயம், கலாச்சாரம், பண்பாடு, வாழ்க்கை முறை ஆகியவற்றால் ஒரு தனி இனத்தவர். தனித்தமிழ்

மொழி பேசித் தனி நாகரிகத்துடன் வாழ்ந்தனர். இத்தகைய தொன்மைச் சிறப்பும் நாகரிக வளமும் கொண்ட தமிழர் இனத்தார் பழங்காலத்திலிருந்தே தெய்வ உணர்வு, தெய்வ நம்பிக்கை உள்ள வர்களாக வாழ்ந்து வருகின்றனர். தமிழ் இனத்தினரின், சமூக வாழ்க்கை, சமய வாழ்க்கை, கலாச்சாரம், பண்பாடு, கலை ஆகிய எல்லாவற்றிற்கும் அடிப்படையாக உள்ளவை தமிழ் மொழியின் இலக்கண இலக்கியமும், தமிழர்களின் சமய நூல்களுமாகும். சமய உணர்வின் காரனமாக நம் முன்னோர்கள் மனித வாழ்வில். ஒழுங்கு, மன நிறைவு, அறம், இன்பம், அன்பு ஆகியவை இருத்தல் வேண்டு மென்ற ஆர்வம் கொண்டிருந்தனர்.

முன்பு கூறியுள்ளதுபோல்,தெய்வ நம்பிக்கை,தெய்வ வழிபாடு, ஆன்மீக நெறி ஆகியவைகள் இணைந்து சேர்ந்துள்ள உணர்வு நிலையைக் குறிப்பிடும் ஆங்கிலச் சொல் 'Religion'. 'Religion' என்ற ஆங்கிலச் சொல் குறிப்பிடுவதைக் குறிப்பிடுவதற்குத் தமிழர் களாகிய நாம், 'சமயம்', 'மதம்' என்ற இரு சொற்களையும் பயன் படுத்துகிறோம்.

'சமயம்' என்ற சொல் நம் தமிழ்நாட்டில் வெகுகாலமாக வழக் கத்திலிருந்து வருகிறது.

**மணிமேகலை :**

"ஐவகைச் சமயமும் அறிந்தனன் ஆங்கு"

"தம்-தம் இயல்பினின் காட்டும் சமயக் கணக்கரும்"

',சமயக் கணக்கர் தம் திறம் சார்ந்து'

"ஒட்டிய சமயத்து உறுபொருள்வாதிகள்"

"........... .................. சமய ஆசிரியர்"

**திருமந்திரம் :**

1467—'ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று'

1567—'சைவ சமயத் தனிநாயகன் நந்தி'

1550—'தேவர்கள் ஆறு சமயங்கள் பெற்றனர்'

1584—'அவமல்ல தில்லை அறுசமயங்கள்'

247—'தத்தஞ் சமயத் தகுதி நில்லாதாரை'

1733 'அத்திசைக்குள்ளே அமர்ந்த சமயம்'

1545—'ஆன சமயம் அது இது நன்றெனும்'

சமை, ; மைத்தல் எனும் சொற்கள் உணவாக்குவதை, பக்குவப் படுத்தலைக் குறிக்கும் சொற்கள். அரிசியைச் சோறாகவும், நாம் உட்கொள்ளும் இதரப் பொருள்களை உணவாகவும் சமைத்தல் (செய்தல்) சமையல் எனப்படுவது போல், மனிதனின் வாழ்க்கையை இறைவனிடத்தில் ஒருமுகப்படுத்தி நல்வழிகளில் ஈடுபடச் செய்து பண்படுத்திப் பக்குவமாக்கும் நெறிக்குச் 'சமயம்' என்ற இனிய அழகிய பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. சமையம் 'சமயம்' என்றாயிற்று.

திருமந்திரம் :

1557—''சமையங்களாறுந்தன் தாளிணை நாட''

2838—'சமையச் சுவடுந் தனையறியாமல்'

நாம் பயன்படுத்தும் 'மதம்' என்னும் சொல் மதி என்னும் பகுதியிலிருந்து தோன்றியுள்ளது. மதி = அறிவு, மதித்தல், ஆராய்தல், அளவிடுதல். மனிதன் தன் அறிவினால் உலகத்தையும் உலகப் பொருள்களையும் அவற்றின் இயக்கத்தையும் வாழ்க்கையின் இன்ப துன்பங்களையும் உணர்ந்து, ஆராய்ந்து கண்டவற்றையும், இவை மூலம் அனுபவத்தில் பெற்ற முடிவுகளையும் இம்முடிவுகள் காரணமாக வாழ்க்கையில் கடைபிடிக்கப்படுகிற நெறியும் அடக்கியது மதம், சமயம்.

நம் முன்னோர்கள் சமயத்தை நெறி என்ற சொல்லாலும் குறித்தனர் ; சைவ நெறி, வைணவ நெறி.

புறநானூறு

'நாஅல் வேத நெறி திரியினும்' —2

காரைக்காலம்மையார்

'பிரானவனை நோக்கும் பெருநெறியே பேணிப்

பிரானவன்தன் பேரருள் வேண்டி......'

திருக்குறள்

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க

நெறி நின்றார் நீடுவாழ்வார்.

திருமந்திரம்

1568—'தேர்ந்த அரனை அடைந்த சிவநெறி'

2102—'சிறந்த சிவநெறி சிந்தை செய்யிரே''

1478,1567—'தெய்வச் சிவநெறி'

247—'அத்தன் சிவன்சொன்ன ஆகம நூல் நெறி......'

132,227—'......பெருநெறி'

திருஞானசம்பந்தர்

அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர் மேய
பெருநெறிய பிரமாபுரமேவிய பெம்மானிவன்றன்னை
ஒருநெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன் னுரை செய்த
திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தலெளிதாமே.

இராமலிங்க சுவாமிகள்

'பெருமை பெறுநினது புகழ்பேச வேண்டும் பொய்மை
பேசாதிருக்க வேண்டும்
பெரு நெறி பிடித் தொழுக வேண்டும் மதமான பேய்
பிடியாதிருக்க வேண்டும்.......................
.................................. உனை
மறவாதிருக்க வேண்டும்''

உடல் நலத்தோடு அறிவு விளக்கம் பெற்று ஆன்ம நலத்தையும் பெற்று, பெருவாழ்வு வாழத்தூண்டும் வாழ்க்கை நெறி தான் தமிழர் சமயம். ஆக, வாழ்க்கையைச் செம்மைப்படுத்துவது சமயம். சமயம், மதம் என்பனவற்றிற்கு ஆங்கிலச் சொல் "Religion" என்று முன்பே விளக்கப்பட்டுள்ளது. சமயம் என்ற சொல்லை, நமது மதத்தின் அதாவது நமது சமயத்தின் கோட்பாட்டை, தத்துவத்தைக் (Philosophy) குறிப்பிடுவதற்கும் நாம் பயன்படுத்துகிறோம். 'தத்துவம்' என்ற சொல்லிற்குக் கொள்கை, உண்மை, உண்மைப் பொருள், உண்மை நிலை, மெய்ப்பொருள் என்பவை பொருளாகும். நம தமிழ் மொழியில் பயன்படுத்துகின்ற 'சித்தாந்தம்' பொதுவாகத் தத்துவத்தை (Philosophy), அதாவது

கொள்கையைக் குறிக்கும் சொல்லாகும். உதாரணம்: சைவ சித்தாந்தம், அத்வைத சித்தாந்தம், விசிஷ்டாத்துவைத (விசிஷ்டா அத்துவைத) சித்தாந்தம், துவைத சித்தாந்தம் முதலியன.

சைவ நெறியையே 'சித்தாந்தம்' என்ற சொல்லால் குறிப்படுவதும் தமிழ் மரபு.

பொருளாதார வளம் மட்டும் மனித வாழ்க்கையை மேன்மைப் படுத்தாது. வாழ்க்கையில் நிகழ்கின்ற இன்ப துன்பங்களை அனுபவிக்கும் முறையில் தக்க வழிகாட்டியாக இருப்பது சமயம். தமிழகத்தில் ஆதி காலத்திலிருந்தே சமயமும் வாழ்க்கையும் இணைந்து இருந்துவருகின்றன. சமயம் தமிழர் வாழ்க்கையின் ஒரு கூறாகும். ஒருவனுடைய உடல் (ஐம்புலன்களுடன்), உள்ளம், அறிவு, ஆன்மா ஆகிய நான்கையும் ஒன்றுபடுத்தி அவனை நல் வழியில் வாழச் செய்கிறது சமயம். சமயம் மக்களை நல்வழியில் செலுத்தும் கருவியாகும்; அதாவது ஒருவனுடைய ஒழுக்கத்தைச் சீராக்கும் கருவியாகும்.

'எவ்வழி நல்லவர் ஆடவர்

அவ்வழி நல்லை, வாழிய நிலனே' என்பது புறநானூறு (பா.187)

சமயம் அறவாழ்க்கையை, நல்வாழ்க்கையை அமைத்துக் கொடுக்கிறது. நம் சமய நெறியை அறம், அறநெறி என்றே பண்டையத் தமிழ்ச் சான்றோர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

புறநானூறு:

'அறம் புரி கொள்கை நான்மறை முதல்வர்' —93

நக்கீரர்:

'ஆல நீழல் அன்றிருந்து அறநெறி
நால்வர் கேட்க நன்கு இனிதுரைத்தனை'
(திருஎழுகூற்றிருக்கை)

திருமூலர்:

திருமந்திரம் 59—'அண்ட முதலான் அறஞ் சொன்ன வாறே'

" 1544—'அரிதவன் வைத்த அறநெறிதானே'

" 51—'வேதத்தை விட்ட அறம் இல்லை வேதத்தின்
ஓதத் தகும் அறம் எல்லாம் உள'.

சம்பந்தர் :

'ஆலி நீழற்கீழிருந்தறஞ் சொன்ன வழகன்'

'ஆலின் கீழறமோர் நால்வருக் கருளி'

'அன்று நால்வர் முன்கேட்க நன்னெறி
நீதியால நீழலுரைக்கின் நீர்மையதென்
சோதியே சுடரே'

திருநாவுக்கரசர் :

'ஆலினிழ லறம் பகர்ந்தார்'

'நாலுவேதம் சரித்தது நன்னெறி'

'அன்றாலின் கீழிருத்தங் கறஞ் சொன்னானை'

சுந்தரர் :

'அன்று ஆலின் நிழற்கீழற நால்வர்க் கருள்புரிந்து'

மாணிக்கவாசகர் :

'நன்றாக நால்வர்க்கும் நான் மறையின் உட்பொருளை
அன்று ஆலின்கீழிருந்து அங்கு அறம் உரைத்தான்'

நம் திருமூலர் திருமந்திரத்தின் முதல் தந்திரமே அறவாழ்க்கையைத் தான் கூறுகிறது.

தொல்காப்பியத்திலும் சங்க நூல்களிலும் கடவுள், தெய்வம் ஆகிய சொற்கள் பல இடங்களில் வருகின்றன. இவைகளுக்கு ஆங்கிலச் சொல் 'God'. இந்நூல்களில் தெய்வ உணர்வு வெகுவாகக் குறிப்பிடப்படுகிறது தெய்வ வழிபாடும், பூசையும் விளக்கப்பட்டுள்ளன. மேலும், சங்க காலத்தில் சிவன், ஆடலன் (கூத்தன்), முருகன், திருமால் (மாயோன்), வணக்கம் சிறப்புற்றிருந்தது. சங்கப் பாடல்களில் முருகு, முருகன், வேலன், நெடுவேள், செவ்வேள், சேயோன் என வருகின்றன. சங்க காலத்தில், வழிபாடு செய்யத் தனி இடங்களுமிருந்து அங்கே தமிழர்கள் நெல், மலர் முதலியன தூவிக் கடவுளைத் தொழுதுள்ளனர். தொல்காப்பியத்திலோ, சங்க இலக்கியத்திலோ பிள்ளையார் (விநாயகர்)குறிப்பிடப் படவில்லை. இந்நூல்களில் 'அகத்தியர்' என்று யாரும் குறிப்பிடப் படவில்லை. 'அகத்தியர்' கதைகள் பிற்காலக் கற்பனை எனத் தோன்றுகினறன. சிவன் — பார்வதி திருமணத்தன்று அகத்தியரும்

மற்றவர்களும் வடக்கே கூடியதால், வட பாகம் தாழ்ந்து' தென் பாகம் உயர, சிவபெருமான் சொல்லி அகத்தியர் தெற்கே வர, தென் திசையும் வட திசையும் சம நிலைக்கு வந்தன என்பதும், அகத்தியரின் கமண்டலத்தைக் காக்கை சாய்த்து விட காவிரி நதி தோன்றிற்று என்பதும் அகத்தியருக்குச் சிவன் தமிழ் மொழியைப் போதிக்க, அகத்தியர் தமிழ் மொழிக்கு மூலமானார் என்பதும் உண்மை நிகழ்ச்சிகள் என எடுத்துக்கொள்ள முடியுமா? ஒரு மொழி தனி ஒருவராலா உருவாகும் ?

தொல்காப்பியத்திலும், சங்க நூல்களிலும் 'கடவுள்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருப்பதிலிருந்து, எங்கும் நிறைந்தும் எல்லாவற்றையும் கடந்தும் உள்ள கடவுளைப் பற்றிய நுண்ணிய கோட்பாட்டினைத் தமிழர்கள் ஆதிகாலத்திலேயே உணர்ந் திருந்தனர் என்ற உண்மை புலனாகிறது. அதனால், தமிழர்கள் ஆதிகாலத்திலிருந்தே தத்துவ ரீதியில் சமயக் கொள்கைகளைக் கொண்டிருந்தனர் என்பதும் தெளிவு. இவற்றிற்கு ஆதாராமாக உள்ளவையாவன :

**தொல்காப்பியம் :**

"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடு நீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"

"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கரு' என மொழிப" (தொல்காப்பியர்
தெய்வத்திற்கு முதலிடம் கொடுத்திருப்பது
கவனத்திற்குரியது)

"உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலன் எனக்
கொள்ளும் என்ப குறி அறிந்தோரே'
"வழிபடு தெய்வம் நிற்புறங்காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து"
"தெய்வம் அஞ்சல்..........."

"அற்றம் இல்லாக் கிழவோன் கட்டிய தெய்வக்
கடத்தினும்"
"காலம் உலகம் உயிரே உடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்"
"ஏமுறு கடவுள் ஏத்திய மருங்கினும்"
"காமப்பகுதி கடவுளும் வரையார்"

புறநானூறு :

கடவுள் வாழ்த்துப் பாடல் சிவன்பேரில் உள்ளது.
"இரு பெருந் தெய்வமும் உடன் நின்றாஅங்கு" பா. 58
"கலிகெழு கடவுள் கந்தம் கைவிடப் பலி .........." 52
".......... உடையவை கடவுள் பேணேம் என்னா" 106
"கடவுள் சான்ற கற்பின்.........." 198
"நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே" 335
"ஆல் அமர் கடவுள்........." 198
"கடவுள் ஆலத்துத் தடவுச் சினைப் பல்பழம்" 199

அகநானூறு :

கடவுள் வாழ்த்துப்பாடல் சிவனுக்குரியது.
"நிலை பெறு கடவுள் ஆக்கிய" 209
"வான் கோட்டுக் கடவுள் ஓங்குவரைக்கு ஓக்கி" 348
"கடவுட் கற்பொடு ..........' 184
"கடவுட் காந்தளுள்ளும்.........." 152
"தெறலருங் கடவுள் முன்னர்த் தேற்றி" 396
"கடிநகர் புனைந்து கடவுட் பேணி" 136
"நிலத்துறை கடவுட்கு உளப்பட ஓச்சி" 156
"அருந்தெறல் மரபின் கடவுள் காப்ப" 372

| | |
|---|---|
| ''கைதொழு மரபின் கடவுள் சான்ற செய்வினை'' | 125 |
| ''இல்லுறை கடவுட்கு ஆக்குதும் பலியே'' | 282 |
| அருந்திறற் கடவுள் செல்லூர்க் குணா அது'' | 90 |
| ''மரம் சோர் மாடத்து எழுது அணி கடவுள் போகலின்'' | 167 |

**ஐங்குறுநூறு :**

கடவுள் வாழ்த்துப் பாடல் சிவன்பேரில் உள்ளது.

| | |
|---|---|
| ''குன்றக் குறவன் கடவுள் பேண'' | 257 |
| ''மலை உறை கடவுள் குலமுதல் வழுத்தி'' | 259 |
| ''அருந்திறற் கடவுள் அல்லன்'' | 182 |
| ''அந்தர மகளிர்க்குத் தெய்வமும் போன்றே'' | 76 |

**நற்றிணை :**

| | |
|---|---|
| ''வழிபடு தெய்வம் கண் கண்டாங்கு'' | 9 |
| ''கடவுள் ஓங்குவரை பேண்மார் வேட்டு எழுந்து'' | 165 |
| ''பல் நாள் எவ்வ நெஞ்சமொடு தெய்வம் பேணி'' | 351 |
| ''தேனுடை நெடுவரை தெய்வம் எழுதிய வினைமாண் பாவை'' | 185 |
| ''கடவுட் கற்சுனை அடை இறந்து அவிழ்ந்த'' | 34 |

**கலித்தொகை :**

கடவுள் வாழ்த்து சிவனுக்குரியது.

| | |
|---|---|
| 'பெருங்கடல் தெய்வம்.......'' | 131 |
| ''வழிபட்ட தெய்வம்தான் வலி எனச் சார்ந்தார் கண்'' | 132 |
| ''வரை உறை தெய்வம் உவப்ப'' | 39 |
| ''தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுதும்......'' | 103 |
| ''உடன் உறை வாழ்க்கைக்கு உதவிஉறையும் கடவுளர்கண் தங்கினேன்'' | 93 |
| ''நீ பூப்பலிவிட்ட கடவுளைக் கண்டாயோ'' | ,, |
| ''நீ கடவுண்மை கொண்டு ஒழுகுவார்'' | ,, |

"நெட்டிருங் கூந்தற் கடவுளர் எல்லார்க்கும் முட்டுப்பாடு ஆகலும் உண்டு" 93

"நிலை உயர் கடவுட்குக் கடம்பூண்டு" 46

பதிற்றுப்பத்து :

கடவுள் வாழ்த்துப்பாடல் சிவன்பேரில் உள்ளது. இதில் சிவன் 'ஆடியஆடலன்' என்று குறிப்பிடப்படுகிறார்.

"தெய்வம் செப்ப... ..." 82

"தெய்வம் தரூஉ நெஞ்சத்து ஆன்றோர்" 73

"கடவுள் நிலைய கல் ஓங்கு நெடுவரை" 43

"உருகெழு மரபின் கடவுட் பேணியர்" 21

"...முழங்கும் மந்திரத்து அருந்திறல் மரபின் கடவுட் பேணியர் " 30

"கடவுள் அஞ்சி........' 31

"வானத்து நிலைபெறு கடவுளும் விழை தகப் பேணி" 21

"கைவல் இளையர் கடவுள் பழிச்ச" 41

குறுந்தொகை :

கடவுள் வாழ்த்துப் பாடல் முருகன் பேரில் உள்ளது.

"கருங்கட் தெய்வம் குடவரை எழுதிய" 89

"வேற்றுப் பெருந் தெய்வம் பல உடன் வாழ்த்தி" 263

"கடவுட் கற்பின் அவன்எதிர் பேணி" 252

"மன்ற மராஅத்த பேஎம் முதிர் கடவுள் கொடியோர்த் தெறூஉம்" 87

பரிபாடல் :

பரிபாடல் பாடல்களில் திருமாலும் (மாஅல், மாயோயே) முருகனும் போற்றப்படுகிறார்கள்.

திருமுருகாற்றுப்படை :

நக்கீரனார் இயற்றிய இந்நூல் செந்தமிழ்த் தெய்வமாகிய முருகப் பெருமானைப் பற்றியதாகும். இந்நூலில் முருகனின் ஆறு படை விடுகளின் சிறப்புப் போற்றப்பட்டுள்ளது.

"தெய்வஞ் சான்ற திறல் விளங்குருவின்"

"பெரியோர் ஏத்தும் பெரும்பெயர் இயவுள்"

"ஆல் கெழு கடவுட் புதல்வ"

சங்கப் பத்துப்பாட்டு நூல்களில் ஒன்றாகிய திருமுருகாற்றுப் படை சைவ சமயத் தோத்திர நூல்களாகிய பன்னிரண்டு திருமுறை களில் ஒன்றாகிய பதினோராம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளது கவனத்திற்குரியது

பொருநராற்றுப்படை :

"காடுறை கடவுட் கடன் கழிப்பிய பின்றை' வரி 53

"முருகன் சீற்றத்து.........." 131

பெரும்பாணாற்றுப் படை :

"தீப்பட மலர்ந்த கடவுள் ஒண் பூ அடைதல் ஓம்பி" 289,290

தெய்வ மடையின் தேக்கிலைக் குவைஇ" 104

"அருந்திறற் கடவுள் வாழ்த்தி" 391

முல்லைப்பாட்டு :

"நீர் செல நிமிர்ந்த மாஅல் போல" 3

"முல்லை அரும்பவிழ் அலரி தூஉய்க் கைதொழுது" 9, 10

மதுரைக்காஞ்சி :

'கடவுள் வழங்கும் கையறு கங்குலும்" 651

"கடவுள் கயத்து அமன்ற சுடர் இதழ்த் தாமரை......" 710

"தொல்முது கடவுள் பின்னர் மேய" 41

நெடுநல்வாடை :

"தேஎங் கொண்டு தெய்வம் நோக்கி" 77

"நெல்லும் மலருந் தூஉய்க் கைதொழுது" 43

குறிஞ்சிப்பாட்டு :

"பரவியுந் தொழுதும் விரவு மலர் தூவியும்
வேறுபல உருவிற் கடவுட் பேணி" 5, 6

"பிறங்குமலை மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழுது"
208, 209

"........நெடுவேள் அணங்குறு மகளிர்" 174, 175

"இன்னிசை முரசிற் சுடர்பூட் சேஎய்" 51

பட்டினப்பாலை

"செறிதொடி முன்கை கூப்பிச் செவ்வேள்
வெறியாடு மகளி ரொடு........" 154, 155

"மை யறு சிறப்பின் தெய்வம் சேர்த்திய
மலரணி வாயில் ......." 159, 160

மலைபடுகடாம்

"........ மூத்த புரிசைப்
பராவு அருமரபின் கடவுட் காணின்" 229, 230

"காரி உண்டிக் கடவுளது இயற்கையும்" 83

"அருந்திறல் கடவுள் பழிச்சிய பின்றை விருந்தின்
பாணி கழிப்பி" 538, 539

சங்கப்பாடல்களில், 'அணங்கு' என்ற சொல்லாலும் தெய்வம் குறிப்பிடப்பட்டுள்ளது.

தமிழ் வேந்தர்கள் இறைவழிபாடாக வேள்வியும் செய்தனர் என்பதைச் சங்க நூல்களிலிருந்து அறிகிறோம்.

'தெய்வம் தெளிமின், தெளிந்தோர்ப் பேணுமின்" என்கிறது சிலப்பதிகாரம்.

திருக்குறளில் பல இடங்களில் தெய்வம் குறிப்பிடப் பட்டுள்ளது ; தெய்வத்தைக் குறிக்கும் இறை, இறைவன் ஆகியச் சொற்களும் திருக்குறளில் வருகின்றன. இறை என்னும் சொல், இருத்தலையும், எல்லா இடத்திலும் நீக்கமற நிறைந்திருத் தலையும் குறிக்கிறது. 'இறை' நிலையில் உள்ளவன் இறைவன். திருமூலர் சிவனை 'இறை', 'இறைவன்' என்று குறிப்பிடுகிறார்.

திருமந்திரம் 9—"என்னால் தொழப்படும் எம் இறை"
" 2068—'நேசத்துளே நின்ற நின்மலன் எம்மிறை"
" 2109—'கூடியும் நின்றுந் தொழுதெம் மிறைவனை'

இளங்கோவடிகளும் சிவனை 'இறைவன்' இறையோன்' எனக் குறிப்பிடுகிறார் :

'இறைவனை ஆடல் கண்டருளிய அணங்கு'
'நுதல் விழி நாட்டத்து இறையோன்'

மணிமேகலையிலும் சிவன் 'இறையோன். எனக் குறிப்பிடப் படுகிறான் :

'நுதல் விழி நாட்டத்து இறையோன் முதலா'

தெய்வ நெறி, தெய்வக் கொள்கை திருக்குறள் நெறிக்கு எதிரானது அல்ல, ஒவ்வாதது அல்ல என்பதற்குச் சான்றாக உள்ள சில குறள்களாவன :

குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான் முந்துறும்.

தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல்தான் என்றாங்கு
ஐம்புலத்து ஆறு ஓம்பல்தலை.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

ஐயப்படாது அகத்தது உணர் வானைத்
தெய்வத்தோடு ஒப்பக் கொளல்.

தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை.

இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகு இயற்றியான்.

இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடி சேராதார்.

கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.

3

மலர்மிசை ஏகினான் மாண்அடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார்.

நமது சமய இலக்கியத்தில், இறைவனுக்கு விளக்கம் கொடுத்துள்ளது போலவே, அவற்றுக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே, 'வாலறிவன்'. 'வேண்டுதல் வேண்டாமை இலான்.' தனக்குவமை இல்லாதான்'. 'எண்குணத்தான்,' என்றெல்லாம் குறள்களில் வருவதைக் காண்கிறோம்.

"அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிற ஆழி நீந்தல் அரிது" என்ற குறளில்

உள்ள அந்தணன் என்ற சொல், அதே சொல் கீழ்க்காணும் பாடல்களில் எதைக் குறிக்கின்றதோ அதையே குறிப்பதாக ஏன் எடுத்துக் கொள்ளக் கூடாது ?

அகநானூறு :

கடவுள் வாழ்த்து- 'யாழ்கெழுமணிமிடற்று அந்தணன்"

கலித்தொகை :

"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்" 38

திருமந்திரம் :

1808—பிறவா நெறி தந்த பேரருளாளன்
மறவா அருள்தந்த மாதவன் நந்தி
அறவாழி அந்தணன் ஆதிப் பராபரன்
உறவாகி வந்தென் உளம் புகுந்தானே.

408—நின்றது தானாய் நிறைந்த மகேசுரன்
சென்றங் கியங்கும் அரன் திருமாலவன்
மன்றது செய்யும் மலர்மிசை மேலயன்
என்றிவ ராக இசைந்திருந்தானே

காரைக்காலம்மையார் :

"சடைச் செம்பொன் நீள் முடி அந்தணனே"
"அந்தணனைத் தஞ்சமென் றாட்பட்டார் ஆழாமே
வந்தணைத்து காத்தளிக்கும் வல்லாளன்........."

சம்பந்தர் :

'அரவச் சடை அந்தணன் மேய'
'அரவஞ் சேர்சடை யந்தணன்'

அப்பரடிகள் :

'இமையோர் போற்றும் அந்தணனை'
'புரி வெண்ணூ றிகழப் பூண்ட அந்தணனை'

சுந்தரர் :

'அந்தணனே யருளாய்'
'திருவாவடுதுறையுள் அந்தணா'

மாணிக்கவாசகர் :

''அந்தணனாகி ஆண்டு கொண்டருளி''
' அங்கணன் அந்தணனாய் அறைகூவி வீடருளும்''

அறநூலாகிய திருக்குறளில் சமயக் கொள்கைகள், கருத்துக்கள் விளக்கப்படும் என்று எதிர்பார்க்கலாகாது. 'கடவுள்' என்ற சொல் தமிழர் சமயத்தில் பயன்படுத்தப்பட்ட ஒரு சொல், எனவே,எல்லாச் சமயங்களுக்கும் பொதுவான திருக்குறள் நூலில், பொதுப் பெயர்களான இறைவன், தெய்வம் ஆகிய சொற்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன என்று எடுத்துக்கொள்ளலாமே.

''சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே'' என்றுள்ள தொல்காப்பியச் சூத்திரமும் ''பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும் செம்பொருள் காண்பது அறிவு'என்றகுறளும் கவனத்துக் குரியவை. ''சிறப்பொடு பூசனை செல்லாது'' என்ற குறளடி மூலம் திருவள்ளுவர் அக்காலத்தில் தெய்வ வழிபாட்டு இடத்தில் செய்யப் பட்டு வந்த பூசனைக்கு இருந்த முக்கியத்தை உணர்த்தவில்லையா? கோயிலில் பூசை நடைபெறாவிட்டால் அது ஒரு இழிவு என்று கூறி. 'திருக்கோயிலிழிவு' என்ற தலைப்பிலே திருமூலர் ஐந்து திருமந்திரங்கள் அருளியுள்ளார்.அவைகளில் இரண்டு கீழே கொடுக் கப்பட்டுள்ளன,

517—' ஆற்றரு நோய்மிக்கு அவனி மழையின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலிகுன்றுவர்
கூற்றுதைத் தான்திருக்கோயில்கள் எல்லாம்
சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே''

518 –"முன்னவனார் கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
கன்னம் களவம் மிகுத்திடும் காசினி
என்னரு நந்தி எடுத்துரைத்தானே"

சிலப்பதிகாரத்தில்,

"பிறவா யாக்கைப் பெரியோன் கோயில்"
"அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயில்"
"வால்வளை மேனி வாலியோன் கோயில்"
"நீலமேனி நெடியோன் கோயில்"

எனச் சிவன், முருகன், பலராமன், திருமால் ஆகிய தெய்வங்களின் கோயில்கள் குறிப்பிடப்பட்டுள்ளதைக் காண்கிறோம்.

நம் அருளாளர்கள் சிவனை 'ஆதி' என்ற பெயரிலும் குறிப்பிடுகிறார்கள்.

**திருமூலர் :**

திருமந்திரம் 626—'நம்பனை ஆதியை நான்மறை ஓதியை'
" 11—'அயலும் புடையும் எம் ஆதியை நோக்கில்
இயலும் பெருந்தெய்வம் யாதுமொன்றில்லை'
" 2543—'ஆதி பராபரமாகும்'
" 2646—'ஆதிப்பிரான்'
" 555—'ஆதியை வேதத்தின் அப்பொருளானை'
" 447—'ஆதி படைத்தனன் ஐம்பெருப்பூதம்'
" 2787—'ஆதி நடஞ்செய்தான்'

**காரைக்காலம்மையார் :**

'வேதியனை வேதப் பொருளானை வேதத்துக்கு
ஆதியனை'
'.......... .................... காண்பார்க்குச்
சோதியாய்ச் சிந்தையுளே தோன்றுமே தொல்லுலகுக்
காதியாய் நின்ற அரன்'

சம்பந்தர் :

'தென் ஆலவாயில் உறையும் எம் ஆதியே'
'அந்தண் சோற்றுத்துறை யெம் ஆதியை'

அப்பர் :

'அலைபுனல் சேர் செஞ்சடை எம் ஆதி'
'ஐய நீ யருளிச்செய்யா யாதியே யாதிமூர்த்தி'
'ஆதியே அமரர் கோவே'

சுந்தரர் :

'ஆதியே அற்புதனே'
'திருவாவடுதுறையுள் ஆதியே'
'ஆலந்தானுகந் தமுதுசெய் தானை
ஆதியை ...........'

மாணிக்கவாசகர் :

'ஆணிமுடி ஆதி அமரர் கோமான்'
'அருந்தவர்க் கருளும் ஆதி வாழ்க'
'ஆதி எனக்கு அருளியவார்'
'ஆதி போற்றி அறிவே போற்றி'
'ஆதியனே'

சேக்கிழார் :

'ஆதியார் அருளாதலின்'

தாயுமானவர் :

'அளப்பரும் சோதியே ஆதியே'

மேலே குறிப்பிடப்பட்டுள்ள பாடல்களில் வரும் 'ஆதி' சிவனைக் குறிக்கிறது. திருவள்ளுவர் முதற் குறளில் 'ஆதி பகவன் முதற்றே உலகு' என்று கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். பகவன் அல்லது பகவான், திருமாலைச் சிறப்பாகக் குறிக்கும் சொல்லாக வழக்கில் உள்ளதையும் இங்குக் குறிப்பிட வேண்டும். திருவாய்மொழியில் 'அந்தமில் ஆதி அம் பகவன்' என்று வருகிறது.

இந்த முதற் குறளில் உள்ள "அகர முதல எழுத்தெல்லாம்" என்பதைக் கீழே குறிப்பிட்டவற்றோடு ஒத்துப் பார்க்கலாம்.

திருமந்திரம் :

1751—"ஆரும் அறியார் அகார மவனென்று"

1753—"அகர முதலா யனைத்துமாய் நிற்கும்"

ஞானசம்பந்தா:

"அகர முதலானை அணி ஆப்பனூரானை"

அப்பர்:

"ஆனத்து முன்னெழுத்தாய் நின்றார் போலும்"

சுந்தரர்:

"அகரம் முதலின் எழுத்தாகி நன்றாய்"

"வண்மையும் மாண்பும் வளனும் எச்சமும்
தெய்வமும் யாவதும் தவம் உடையோர்க்கு" என்று கூறும் பதிற்றுப்பத்துப் பாடலையும் (74),

'ஏனோர் பெருமைய னாயினும் எம்மிறை
ஊனே சிறுமையுள் உட்கலந் தங்குளன்
வானோர் அறியும் அளவல்லன் மாதேவன்
தானே யறியுந் தவத்தின் அளவே'எனும்
திருமந்திரத்தையும்

'உலகத்தார் உண்டென்பது இல் என்பான் வையத்து
அலகையா வைக்கப் படும்'. என்ற குறளையும் மனத்தில் கொண்டு தமிழர் சமயம்பற்றிச் சிந்திப்பது நன்று.

ஆக, உலகுக்கு ஆதியாய் உள்ள ஒரு பொருள்தான் மெய்ப் பொருளாக, பரம்பொருளாக, ஒரு பேராற்றலாக ஒரு சத்தி (சக்தி) யாகக் கண்ணுக்கு புலப்படாமலும், எட்டி யறியக்கூடாமலும், கடந்து நிற்கும் கடவுளாய், யாண்டும் நிறைந்தியங்கும் இறையாய், எல்லா உயிருள்ளும் இருந்தியங்கும் இயவுளாய் உள்ளது என்று கொள்ளப் படுகிறது.

திருமந்திரம் :

13—"கண்ணளந் தெங்குங் கடந்து நின்றானே"

26—தொடர்ந்து நின்றானைத் தொழுமின் தொழுதால்
படர்ந்து நின்றான் பரி பாரக முற்றுங்
கடந்து நின்றான் கமலம் மலர் மேலே
உடந்திருந்தானடிப் புண்ணிய மாமே.

2586—மெய்வாய்கண் மூக்குச் செவியென்னும் மெய்தோற்றத்
தவ்வாய அந்தக் கரணம் அகிலமும்
எவ்வா யுயிரும் இறையாட்ட ஆடலாற்
கைவாயிலா நிறை எங்குமெய் கண்டதே

3043—பலவுடன் சென்ற அப்பார் முழுதீசன்
செலவறி வாரில்லை சேயன் அணியன்
அலைவிலன் சங்கரன் ஆதிஎம் மாதி
பலவில தாய்நிற்கும் பான்மை வல்லானே.

2639—காவினில் ஊறுங் கரும்பினிற் கட்டியும்
பாவினுள் நெய்யும் பழத்துள் இரதமும்
பூவினுள் நாற்றமும் போலுளன் எம்மிறை
காவலன் எங்குங் கலந்து நின்றானே.

2481—பெருவாய் முதலெண்ணும் பேதமே பேதித்
தருவா யுருவாய் அருவுரு வாகிக்
குருவாய் வருஞ்சத்தி கோனுயிர்ப் பன்மை
உருவாயுடனிருந் தொன்றாயன் றாமே.

416 அன்பும் அறிவும் அடக்கமுமாய் நிற்கும்
இன்பமும் இன்பக் கலவியு மாய்நிற்கும்
முன்புறு காலமும் ஊழியு மாய்நிற்கும்
அன்புற ஐந்தில் அமர்ந்து நின்றானே.

448—அகன்றான் அகலிடம் ஏழுமொன்றாகி
இவன்றா னெனநின் றெளியனும் அல்லன்
சிவன்றான் பலபல சீவனும் ஆகி
நவின்றான் உலகுறு நம்பனு மாமே,

3009—போற்றும் பெருந்தெய்வத்தானே பிறரில்லை
ஊற்றமும் ஓசையும் ஓசை யொடுக்கமும்
வேற்றுடல் தானென் றதுபெருந் தெய்வமாங்
காற்றது ஈசன் கலந்து நின்றானே.

3039—புவனா பதிமிகு புண்ணியன் எந்தை
அவனே உலகில் அடர்பெரும் பாகன்
அவனே அரும்பல சீவனு மாகும்
அவனே இறையென மாலுற்ற வாறே.

2067—கண்காணி யில்லென்று கள்ளம் பலசெய்வார்
கண்காணியில்லா விடமில்லை காணுங்கால்
கண்காணி யாகக் கலந்தெங்கு நின்றானைக்
கண்காணி கண்டார் களவொழிந்தாரே.

2019—அறிவாய் அறியாமை நீங்கி யவனே
பொறிவாய் ஒழிந்தெங்குத் தானான போதன்
அறிவா யவற்றினுட் டானா யறிவன்
செறிவாகி நின்ற அச்சிவனு மாகுமே.

2079—உயிரது வேறா யுணர்வெங்கு மாகும்
உயிரை யறியில் உணர்வறி வாகும்
உயிரன் றுடலை விழுங்கு முணர்வை
அயரும் பெரும்பொரு ளாங்கறியாரே.

சம்பந்தர் :

'வேறாய் உடன் ஆனான்'

அப்பர் :

'உள்ளுமாய்ப் புறமுமாகி'

இவ்வாறான உணர்வுகளின் அடிப்படையிலான கோட்பாடுகளோடு, தத்துவத்தோடு உருவாக்கப்பட்ட தெய்வத்தை, தெய்வ நம்பிக்கையை, ஓர் உண்மையை ஏற்றுக்கொள்ளாதவர்களுமுண்டு. "கடவுள் இல்லை" என்ற கொள்கை புதிதல்ல. இந்த நிலை அண்மையில் தோன்றியதல்ல. ஆதியிலிருந்தே நிலவி வருகிறது.

திருமூலர்:

திரும. 23 —"நீதியுள் ஈசனை இல்லென வேண்டா"

நக்கீரர் :

"இவரல்லர் என்றிருக்க வேண்டாம்"

அப்பரடிகள் :

"நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே"

மாணிக்கவாசகர் :

"ஆத்தம் ஆனார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்".

இக்கொள்கையுள்ளவர்கள் 'கடவுளைக் காட்டு' என்கிறார்கள். 'கடவுளைக் காண்பிப்பேன்' என்று நமது சமய அருளாளர்களோ, மற்றவர்களோ கூறியதில்லை. மாறாக, கடவுளைக் காண்பிக்க முடியாது என்று நம் சமய அருளாளர்களே ஒத்துக்கொண்டிருக்கின்றனர். அதேசமயம், 'கடவுள்' என்ற பொருள் இல்லை என்றும் சொல்லமுடியாது எனவும் அருளாளர்கள் கூறியுள்ளனர்.

நக்கீரர் :

'நின் அளந்து அறிதல் மண்உயிர்க்கு அருமையின்"

—திருமுருகாற்றுப்படை

திருமூலர் :

திரும. 2103—"இல்லையெனினும் பெரிதுளன் எம்மிறை"
1628—'கரந்துங் கரந்திலன் கண்ணுக்குத் தோன்றான்'
2942—"கண்டறிவாரில்லை காயத்தின் நந்தியை"
2210—"உயிர்க்குயிராகி உருவாய் அருவாய்"
2335—"இல்லதும் உள்ளதும் யாவையும் தானாகி"
3015—"இல்லனுமல்லன் உளனல்லன் எம் இறை'
2693—"உண்டு, இல்லை என்னும் உலகத்தியல்வது"

3065—"தேனுக்குள் இன்பம் சிவப்போ கறுப்போ
வானுக்குள் ஈசனைத் தேடு மதியிலீர்"

312—'கல்லாதார் நெஞ்சத்துக் காணவொண்ணாதே'

2600 –"மெய் கலந்தாரொடு மெய்கலந்தான் தன்னை
பொய் கலந்தார்முன் புகுதா ஒருவனை"

1828 – 'எண்ணிலி பாவிகள் எம்மிறை ஈசனை
நன்னறியாமல் நழுவுகின்றாரே'

264—'பரவப்படுவான் பரமனை ஏத்தார்'

2580—அறிவறியாமை இரண்டு மகற்றிச்
செறிவறிவாய் எங்கும் நின்ற சிவனைப்
பிறிவறி யாது பிரானென்று பேணுங்
குறியறி யாதவர் கொள்ளறி யாரே.

காரைக்காலம்மையார் :

"இவரைப் பொருள் உணர மாட்டாதார் எல்லாம்
இவரை இகழ்வதே கண்டீர்"

திருஞானசம்பந்தர் :

ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர் விட்டுளன் எங்கள் சோதி
மாதுக்க நீங்கலுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கண் மிக்கி றிறையேவந்து சார்மின்களே

'நனவினுங் கனவினு நம்பாவுன்னை
மனவினும் வழிபடன் மறவே னம்மான்"

திருநாவுக்கரசர் :

"இல்லானை, எவ்விடத்தும் உள்ளான் தன்னை"

"இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவனிறைவன் என்று எழுதிக் காட்டொணாதே"

"இன்ன உருவென்று அறிவொண்ணாதான்"

"மெய்யானைத் தன்பக்கல் விரும்புவார்க்கு
விரும்பாத வரும்பாவி யவர்கட் கென்றும்
பொய்யானை"

''காதலித்து நினையாத கயவர் நெஞ்சில்
வாரானை மதிப்பவர்தம் மனத்துளானை''

''மறைய நின்றுளன்''

'காப்புறு சிந்தையர் காண்டாற் கரியவன்'

''கல்லாதார் காட்சிக்கு அரியாய்''

''ஒருத்தரால் அறியவொண்ணாத் திருவுருவுடையசோதி''

சுந்தரர் :

''இன்ன தன்மையன் என்றறிவொண்ணா எம்மானை''

''மெய்யனை மெய்யி னின்றுணர் வானை
மெய்யிலாதவர் தங்களுக் கெல்லாம்
பொய்யனை''

மாணிக்கவாசகர் :

''உண்மையுமாய் இன்மையுமாய்''

''யாவையுமாய் அல்லையுமாய்''

''தோன்றாப் பெருமையனே',

''அன்பர்க்கு மெய்யானை அல்லாதார்க்கு அல்லாத
வேதியனை''

''மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினார்க்கு''

''பொய்யர்தம் பொய்யனை மெய்யர் மெய்யை''

''யாவாராயினும் அன்பரன்றி அறியொணா மலர்ச்
சோதியான்''

''வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்டு
ஆழ்கின்றாய் ஆழாமற் காப்பானை ஏத்தாதே''

நம்மாழ்வார் :

''காணலும் ஆகான் உளன் அல்லன் இல்லையல்லன்''

''உளன் என உணர்ந்தார்க்கு உளையும் ஆயினை
இவன் என இகழ்ந்தார்க்கு இல்லையும் ஆயினை''

''எங்கும் மறைந்து உறைவாய்''

திருமங்கையாழ்வார் :

‘‘அறியாதார்க்கு ஆனாயனாகிப் போய்’’

அருணகிரிநாதர் :

‘‘உருவாய் அருவாய் உளதாய் இலதாய் ....’’(கந்தர் அநுபூதி)

நம்மால் காணமுடியாத, உருவமில்லாத வடிவமில்லாத பொருள்கள் பல உலகின்கண் உள. அத்தகைய பொருள்களையும் பெயரிட்டுக் குறிப்பிடுகிறோம். அவையாவன : காற்று, ஒலி, மின்சக்தி (மின்சாரம்), மணம், சுவை முதலியன. இவைகளைக் காட்டமுடிகிறதா? இல்லையே. நம்மையே எடுத்துக்கொள்வோமே. மனிதன் இயங்கிக் கொண்டிருக்கும்போது, அவனை உயிரோடு இருக்கிறான் என்கிறோம். இயக்கநிலை முடிவுற்றபோது உயிர் போய்விட்டது.ஆவி போய்விட்டது,இறந்துவிட்டான் என்கிறோம். இயக்கத்திற்குக் காரணமாக உள்ள ஆவியை, உயிரைக் காட்டவும் என்றால் யாரினாலாவது அதைக் காட்ட முடியுமா ? அதனால் உயிர், அல்லது ஆவி அல்லது ஆன்மா அல்லது சீவன் என்று நாம் பொதுவாக வழக்கத்தில் குறிப்பிடும் பொருள் இல்லை என்று சொல்லமுடியுமா. உடலினுள்ளேயே ஆவி அல்லது உயிருள்ளது. உயிரின் இயக்கம்தான் உடலின் இயக்கம். எனவேதான் உடலை இரு வகையாகப் பிரித்துக் கூறுகின்றனர் ஆன்மீகச் சான்றோர்கள். ஒன்று அனைவரும் காணும் தூலஉடல். மற்றொன்று கண்ணுக்குத் தெரியாத ஆவி உடல். (சூக்கும உடல் .

திருமந்திரம் :

1783—‘கூடும் உடல் பொருள் ஆவி’

1778—‘உடல் பொருள் ஆவி உதகத்தாற் சொண்டு’

1779—‘உயிருஞ் சரீரமும் ஒண்பொருளான’

2148—‘உடம்பும் உடம்பும் உடம்பைத் தழுவி
உடம்பிடை நின்ற உயிரை அறியார்
உடம் பொடுயிரிடை நட்பறி யாதார்
மடம்புகு நாய்போல் மயங்குகின்றாரே

2128– ‘உடம்புக்கும் நாலுக்கும் உயிராய சீவன்’

2078— உயிரது நின்றால் உணர்வெங்கு நிற்கும்
அயரறிவில்லையா லாருடல் வீழும்
உயிரும் உடலும் ஒருங்கிக் கிடக்கும்
பயிரும் கிடந்துள்ளப் பாங்கறி யாரே

அப்பர் :

''உருவாகி என்னைப் படைத்தாய் போற்றி
உள் ஆவிவாங்கி ஒளித்தாய் போற்றி''

'ஊனி லாவி யுயிர்க்கும் பொழுதெலாம்'

'உடலுமுயிரு மொருவழிச் செல்லு முலகத்துள்ளே'

மாணிக்கவாசகர் :

''அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமையெல்லாமும்''

உயிர் அல்லது ஆவி என்ற பொருள் உடலிலிருக்கின்ற நிலையில்தான் மனிதன் இயங்குகின்றான். உடலில் உயிர் இல்லை என்றால் அவனிடத்தில் இயக்கமில்லை. அது ஒரு சடலமாகிறது. இதர உயிரினங்களின் நிலையும் இதுதான். இவ்வுண்மையின் அடிப்படையில்தான், உலகமும், உலகத்தில் உள்ள உயிரினங்களும் இதரப்பொருள்களும் இயங்கிக் கொண்டிருப்பதற்குக் காரணமாகவும், கண்ணுக்குத் தெரியாமல், ஆனால் உணர்வினால் அறியக் கூடியதாகவும் உள்ள மெய்ப்பொருளை, பரம்பொருளை, பேரறிவை, பேராற்றலை, சத்தியைத்தான் தெய்வம், இறை, இறைவன், கடவுள், ஆண்டவன், சத்தி என்ற பெயர்களால் குறிப்பிடுகிறோம். மெய்ப்பொருளை 'சத்தியம்' என்ற சொல்லால் தமிழர் குறிப்பிடுவதும் கவனத்திற்குரியது.

திருமந்திரம் :

374 - ஊனாய் உயிராய் உணர்வங்கியாய் முன்னஞ்
சேணாய் வானோங்கித் திருவுருவாய் அண்டத்
தாணுவும் ஞாயிறுந் தண்மதியுங் கடந்
தாண்முழு தண்டமு மாகி நின்றானே.

413—உடலாய் உயிராய் உலகம தாகிக்
கடலாய்க் கார்முகில் நீர்பொழி வானாய்
இடையாய் உலப்பிலி எங்குந் தானாகி
அடையார் பெருவழி அண்ணல் நின்றானே.

404—ஒருவனு மேஉல கேழும் படைத்தான்
ஒருவனு மேஉல கேழும் அளித்தான்
ஒருவனு மேஉல கேழும் துடைத்தான்
ஒருவனு மேஉல கோடுயிர் தானே.

412—தானே திசையொடு தேவருமாய் நிற்குந்
தானே உடலுயிர் தத்துவ மாய்நிற்குந்
தானே கடல்மலை யாதியு மாய்நிற்குந்
தானே உலகில் தலைவனு மாமே.

3084—செழுஞ்சடை யன்செம்பொ னேயொக்கு மேனி
ஒழிந்தன னாயு ஒருங்குடன் கூடுங்
கழிந்திலன் எங்கும் பிறப்பிலன் ஈசன்
ஒழிந்தில கேழுல கொத்துநின்றானே.

3005—ஆதிப் பிரான்நம் பிரானவ் வகலிடச்
சோதிப் பிரான்சுடர் மூன்றொளி யாய்நிற்கும்
ஆதிப் பிரான் அண்டத் தப்புறங் கிழவன்
ஆதிப் பிரான்நடு வாகிநின்றானே

3042 - இருக்கின்ற எண்டிசை அண்டம் பாதாளம்
உருக்கொடு தன்னடு வோங்க வில்வண்ணங்
கருக்கொடு எங்குங் கலந்திருந்தானே
திருக்கொன்றை வைத்த செழுஞ்சடையானே.

2668 "அனைத்துல காய்நின்ற ஆதிப் பிரான்"

4—"அகலிடத் தார் மெய்யை அண்டத்து வித்தை".

2210—உயிர்க்குயி ராகி யுருவா யருவாய்
அயற்புணர் வாகி யறிவாய்ச் செறிவாய்
நயப்புறு சத்தியும் நாதன் உலகாதி
இயற்பின்றி யெல்லாம் இருண்மூட மாமே.

2010—அணுவுள் அவனும் அவனுள் அணுவுங்
கணுவற நின்ற கலப்ப துணரார்
இணையிலி யீச னவனெங்கு மாகித்
தணிவற நின்றான சராசரந் தானே.

2008—அணுவில் அணுவினை ஆதிப்பிரானை
அணுவில் அணுவினை ஆயிரங் கூறிட்
டணுவில் அணுவை அணுவகல் லார்கட்
கணுவில் அணுவை அணுகலுமாமே.

சம்பந்தர் :

'மறையவ னுலகவன் மாயவன்'
'மற்றெல்லா உயிர்கட்கு முயிரா உளன்'
'துறையவன் தொழிலவன் தொல்லுயிர்க்கும்'

அப்பர் :

'உயிர்க்கெலாம் பெற்றாராய பிரானார்'

சுந்தரர் :

'முன்னிலையாய் முழுதுலக மாய பெருமானை'

மாணிக்கவாசகர் :

'உலகுக்கு உயிரானாய்'

உருவம், வடிவம் இல்லாத காற்று, ஒலி, மின் ஆற்றல், மணம் சுவை, முதலியவற்றையும் நம்மை உயிரோடு இயக்குகின்ற ஆன் மாவையும் உண்மைப் பொருள்கள் என்று அனுபவமூலம் எவ்வாறு உணர்கின்றோமோ அவ்வாறே 'கடவுள்', 'இறைவன்' தெய்வம் 'சக்தி' எனக் குறிப்பிடப்படும் பொருளை அனுபவமூலமாக உணர லாம் என்று நம் சமய அருளாளர்கள் விளக்கியுள்ளார்கள். மேலும் அந்த அனுபவப் பொருளான 'கடவுள்' நம் உள்ளேயே உள்ளது என்ற உண்மையையும் நம் அருளாளர்கள் தெளிவாகக் கூறியுள் ளனர். 'நாம்' கடவுளுடனேயே ஒன்றியிருக்கிறோம், வேறாகத் தனித்து நிற்கவில்லை என்பதுதான் தமிழரின் சமயச்சாரம்.

திருமூலர் :

1762—'ஒன்றி என் உள்ளத்தின் உள்ளிருந்தானே'

1622—''சிவன் தான் பலபல சீவனுமாகும்''

2017—'சீவனெனச் சிவனென்ன வேறில்லை
சீவனார் சிவனாரை அறிகிலர்
சீவனார் சிவனாரை அறிந்தபின்
சீவனார் சிவனாயிட் டிருப்பரே.

2005—உன்னும் அளவில் உணரும் ஒருவனைப்
பன்னு மறைகள் பயிலும் பரமனை
என்னுள் இருக்கும் இளையா விளக்கினை
அன்ன மயமென் றறிந்து கொண்டேனே.

2008—'தானே உடலுயிர் வேறன்றி நின்றுளன்'

404—'ஒருவனுமே உலகோடுயிர் தானே'

725—''உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண்டான்''

3065-''ஊனுக்குள் ஈசன் ஒளிந்திருந்தானே''

39—''வாழ்த்தவல்லார் மனத்துள்ளுறு சோதியை''

278—''ஆர்வம் உடையவர் காண்பர் அரன்தன்னை''

296—''ஆய்ந்து கொள்வார்க்கு அரன் அங்கே வெளிப்படும்''

1530—''காயத்துள் நின்ற கடவுளைக் காண்கிலர்''

2071—காயக் குழப்பனைக் காயநன் னாடனைக்
காயத்தினுள்ளே கமழ்கின்ற நந்தியைத்
தேயத்துளே யெங்குந் தேடித் திரிவார்கள்
காயத்துள் நின்ற கருத்தறியாரே.

2944—முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
மகட்குத் தாய் தன் மணாளனோடாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமால் எங்ஙனே''

270—''அன்பும், சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்''

1823—''உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்''

2853—''சிந்தையதென்னச் சிவனென்ன வேறில்லை
சிந்தையினுள்ளே சிவனும் வெளிப்படும்''

1480—''தெளிவறியாதார் சிவனை அறியார்
தெளிவறியாதார் சிவனு மாகார்''

2855—''தன்னையறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை அறியாமல் தானே கெடுகின்றான்''

301—'ஓதுமின் கேள்மின் உணர்மின்'

2606—'உய்யும் வகையால் உணர்வினால் ஏத்துமின்'

2857—'உணர்வும் அவனே உயிரும் அவனே'

2103—"செல்லுமளவுஞ் செலுத்துமின் சிந்தையை
வல்லபரிசால் உரைமின்கள் வாய்மையை
இல்லையெனினும் பெரிதுளன் எம்மிறை
நல்ல அரனெறி நாடுமினீரே"

2290—மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதம்

2289—பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்
தன்னை மறைத்தது தன்கரணங்களாம்
தன்னின் மறைந்தது தன்கரணங்களே.

2596—எல்லாம் அறியும் அறிவு தனைவிட்டு
எல்லாம் அறிந்தும் இலாபமங்கில்லை
எல்லாம் அறிந்த அறிவினை நானென்னில்
எல்லாம் அறிந்த இறை எனலாமே.

2362—அறிவறி வென்றங் கரற்றும் உலகம்
அறிவறியாமை யாரும் அறியார்
அறிவறியாமை கடந்தறிவானால்
அறிவறியாமை யழகிய வாறே.

காரைக்கரலம்மையார் :

"காண்பார்க்குச் சோதியாய்ச் சிந்தையுளே தோன்றுமே"

"அறிவானுந்தானே அறிவிப்பானும் தானே
அறிவாயறிகின்றான்தானே-அறிகின்ற
மெய்ப்பொருளும் தானே விரிசுடர்பார் ஆகாயம்
அப்பொருளும் தானே அவன்"

திருஞானசம்பந்தர் :

'நினைப்பவர் மனத்துளான்'

'கருதுவார் மனத்துளான்'

'வாழ்த்துவார் மனத்துளான்'

'நிறைபெற்ற அடியார்கள் நெஞ்சுளானே'

'.........கடவுளென்றேத்திச்
சிந்தை செய்பவர்க்கல்லாற் சென்று கைகூடுவதன்றால்'

'என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே
..................................
...............வழிபடுமதனாலே'

திருநாவுக்கரசர் :

'சிந்தையுள் ஒன்றிநின்று இயக்கமாயிறுதியாகி'

'விறகில் தீயினன் பாலிற் படுநெய் போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியன்
உறவுகோல் நட்டு உணர்வுக் கயிற்றினால்
முறுகவாங்கிக் கடைய முன்நிற்குமே''

'ஊனவன் காண் உடல்தனக்கோ ருயிரானான் காண்'

'உள்ளிடை மறைந்து நின்று அங்கு
உணர்வினால் எய்யலாமே'

'சிந்தையுந் தெளிவுமாகித் தெளிவினுட் சிவமுமாகி'

'ஊனாகி உயிராகி அதனுள் நின்ற உணர்வாகிப் பிற
அனைத்தும் நீயேயாகி
நான் ஏதும் அறியாதே என்னுள் வந்து நல்லனவுந் தீயனவும்
காட்டா நின்ற'

''.........திருமாலும் நான்முகனும்
தேடித் தேடொனாத் தேவனை என்னுளே
தேடிக் கண்டு கொண்டேனே'

'உள்குவா ருள்ளத்தானை யுணர்வெனும் பெருமையானை'

''என்னுள்ளே உயிர்ப்பாய் புறம்போந்து புக்கு
என்னுளே நிற்கும்''

'எம்பிரான் என்றதே கொண்டென்னுள்ளே புகுந்து நின்றிங்கு'

'உயிர்ப்பாய் உணர்வாய் நின்ற திருவனே'

'நினைப்பவர் நெஞ்சத்துளானும்'

''நினைப்பவர் மனம் கோயிலாகக் கொண்டவன்''—

''நினைப்பவர் மனத்துளானை''

"நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே புக்கு நிற்கும்"

"..........வல்லார்கண் மனத்துறையு மைந்தனைச்
சொல்லானைச் சொல்லார்ந்த பொருளானை"

"மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான்"

"அவன் அருளே கண்ணாகக் காணின் அல்லால்"

"நெஞ்சம் உமக்கே இடனாக வைத்தேன்"

"சிந்திப்பார் சிந்தையுள்ளார்"

"தொண்டர் அகமலாற் கோயிலில்லை"

"என்ன மாதவஞ் செய்தனை நெஞ்சமே"

சுந்தரர் :

"சிந்திப்பாரவர் சிந்தையுளானை"

"சிந்தித்து என்றும் நினைந்தெழுவார்கள்
சிந்தையில் திகழுஞ் சிவன் தன்னை"

"பற்றினார்க் கென்றும் பற்றவன் தன்னைப்
பரவிப்பார் மனம் பரவிக்கொண்டானை"

மாணிக்கவாசகர் :

"ஊனாய் உயிராய் உணர்வாய் என்னுட் கலந்து"

"அறிவாம் தேற்றனே"

"நின்றுணர்வதோர் உணர்வே"

"நுணுக்கரிய நுண்ணுணர்வே"

"தேற்றத் தெளிவே"

"சிந்தையே கோயில் கொண்ட எம்பெருமான்"

"நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க"

"மதிப்பவர் மன விளக்கை"

"சிறந்தடியார் சிந்தனையுள.........."

"ஓராதார் உள்ளத்தில் ஒளிக்கும் ஒளியானே"

"மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே"

"ஓயாதே உள்குவார் உள்ளிருக்தும் உள்ளானை
சேயானை ......................"

"அழுதால் உன்னைப் பெறலாம்"

"சிவனவன் என் சிந்தையுள் நின்ற அதனால்
அவனருளாலே அவன்தாள் வணங்கி"

"தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி........ ..."

**திருவிசைப்பா :**

"உணர்வு சூழ் கடந்ததோர் உணர்வே"
—திருமாளிகைத் தேவர்

**பூதத்தாழ்வார் :**

"அறிந்து அவன்தன் பேர் ஓதி
ஏத்தும் பெருந்தவத்தோர் காண்பரே"

**பேயாழ்வார் :**

"உளன்கண்டாய் நன்னெஞ்சே
உத்தமன் என்று உளன்கண்டாய்"

**பொய்கையாழ்வார் :**

"உள்ளுவார் உள்ளத்து உளன்கண்டாய்"

"கூரிய மெய்ஞ்ஞானத்தாலுணர்வார் காண்பரே"

**திருமழிசையாழ்வார் :**

"ஊனின் மேய ஆவி நீ உறக்கமோடு உணர்ச்சி நீ"

**நம்மாழ்வார் :**

"நெஞ்சினால் நிலைப்பான் யவன் அவன் ஆகும்
நீள்கடல் வண்ணனே"

**திருமங்கையாழ்வார் :**

''உள்ளுவாருள்ளத்தே உறைகின்றானை''

' உய்வதோர் பொருளால் உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து''

''அண்டமும் தானாய் நின்ற எம்பெருமான்''

**குமரகுருபரர் :**

'எங்கும் உளன் ஒருவன், காணுங்கொல் என்றஞ்சி
அங்கம் குலைவது அறிவு'

'நின்பெருந் தன்மை நீயே யிரங்கி
உள்நின்று உணர்த்த உணரின் அல்லதை'

**தாயுமானவர் :**

''அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்
............உயிர்க்குயிராய்த் தழைத்தது''

' சத்தாகி என் சித்தமிசை குடிகொண்ட
அறிவான தெய்வமே''

''தாயார் கர்ப்பத்தூறு அனமும்
தண்ணீரும் தந்தருளும் நேய
உனை யாரே நினையார் பராபரமே''

''அவனன்றி ஓர் அணுவும் அசையாது''

**இராமலிங்கசுவாமிகள் :**

''நற்றவத்தார் உள்ளிருந் தோங்கும்
நமச்சிவாயத்தை நான் மறவேனே''

' அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பெனும் குடில்புகு மரசே''

''நில்லாத காற்றை நிலையாகக் கடத்தடைத்துச்
செல்லாது வைத்தருளும் சித்தன் எவன்''

''கடவுள் என்று ஒன்று இல்லையெனின், உலக நலத்திற்காக அதை உண்டாக்குவது இன்றியமையாததாகும்'' எனப் பிரஞ்சுப் புரட்சிப்பேரறிஞர் வால்ட்டேர் எழுதியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும் (''Even if God did not exist, it would be necessary to invent Him for the good of the world''. -- Voltaire.)

உலகம் ஐந்து பொருள்கள் கூடி உருவானதொரு பொருள் என்பதை தமிழர்கள் பண்டைக் காலத்திலேயே அறிந்திருந்தனர்.

தொல்காப்பியம் :

"நிலம், தீ, நீர், வளி விசும்போடைந்தும்
கலந்த மயக்கம் உலகம்........"

புறநானூறு :

"மண் திணிந்த நிலனும்,
நிலன் ஏந்திய விசும்பும்,
விசும்பு தைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீரும் என்றாங்கு
ஐம் பெரும் பூதத்து இயற்கை போல...... " 2

பதிற்றுப்பத்து ;

'நிலம், நீர், தீ, வளி, விசும்பொடு ஐந்தும்" 24

இயற்கையோடு இணைந்து வாழ்ந்த தமிழர், வானாகி' மண்ணாகி, வளியாகி ஒளியாகி இருக்கும் இறைத் தன்மையை உணர்ந்து, இயற்கையாக உள்ள ஞாயிறு, (கதிரவன், சூரியன்) திங்கள் மற்றும் பஞ்ச பூதங்கள் எனக் குறிப்பிடப்படும் நிலம், நீர், தீ, காற்று, வான் ஆகியவற்றை வணங்கலாயினர்.

மதுரைக் காஞ்சி :

"நீரும் நிலனும் தீயும் வளியும்
மாக விசும்பொடு ஐந்து உடன் இயற்றிய
மழுவாள் நெடியோன் தலைவன் ஆக" 453—455

சிலப்பதிகாரம் :

"திங்களைப் போற்றுதும்! திங்களைப் போற்றுதும்!"

"ஞாயிறு போற்றுதும்! ஞாயிறு போற்றுதும் !

"மா மழை போற்றுதும்! மா மழை போற்றுதும்!"

திருமூலர்

3045—"நீரும் நிலனும் விசும்பங்கி மாருதந்
தூரும் உடம்புறு சோதியு மாயுளன்"

2004—தெய்வச் சுடரங்கி ஞாயிறுந் திங்களும்
வையம் புனல் அனல் மாருதம் வானகஞ்
சைவப் பெரும்பதி தாங்கிய பல்லுயிர்
ஐவாக் கிடமிடை யாறங்க மாமே.

2080—"உலகாணி யொண்சுடர் உத்தம சித்தன்
நிலவாவணி ஐந்தினுள் நேருற நிற்கும்"

1773—குரைக்கின்ற வாரிக் குவலய நீரும்
பரைக்கின்ற காற்றுப் பயில்கின்ற தீயும்
நிரைக்கின்ற வாறிவை நீண்டகன்றானை
வரைத்து வலஞ்செயு மாறறியேனே.

2076—பிரான்மய மாகப் பெயர்ந்தன எட்டும்
பராமய மென்றெண்ணிப் பள்ளி யுணரார்
சுராமய முன்னிய சூழ்வினை யாளர்
நிராமய மாக நினைப்பொழிந்தாரே

70—"தானே இருநிலந்தாங்கி விண்ணாய் நிற்கும்
தானே சுடும் அங்கி ஞாயிறுந் திங்களும் ...... "

"சோதிக்கும் சோதியாய்"

15—'அருட் சோதியுமாய்'

"அருட் சோதியாய் தோன்றுவான் காணே"

2842—பரஞ்சோதி'

2453—"சோதிப் பரஞ்சுடர்"

284,289—'சோதியை'

221—'ஒண் சுடரானை'

94—'ஓங்கு ஒளிவண்ணன் எம்மானை,

காரைக்காலம்மையார் :

"அவனே இருசுடர் தீ ஆகாசம் ஆவான்
அவனே புவிபுனல் காற்றாவான்"

சம்பந்தர் :

'நிலனொடு வானு நீரொடு தீயும் வாயுமாகி'

'சோதியாய் நிறைந்தான் சுடர்ச்சோதியுட் சோதியான்'

'சுடர்விடு, சோதியே'

'பரஞ்சோதி'

அப்பரடிகள் :

"தீயொடு நீர்நிலந், தூவெளி காற்றுமாகி நின்றவன்"

"நீருமாய்த் தீயுமாகி நிலனுமாய் விசும்புமாகி
ஏருடைக் கதிர்களாகி இமையவர் இறைஞ்ச நின்று
ஆய்வதற்கு அரியராகி ஆங்காங்கே ஆடுகின்ற
தேவர்க்கும் தேவராவார்"

"நிற்பனவு நடப்பனவு நிலனு நீரு
நெருப்பினொடு காற்றாகி நெடுவானாகி"

"பரஞ்சோதி"

"ஒருத்தரால் அறியவொண்ணாத் திருவுடைய சோதி"

"திருவையாறகலாத செம்பொற் சோதி"

"சொற்றுணை வேதியன் சோதிவானவன்"

"செழுஞ்சுடர் நற்சோதி"

"சோதியுட் சோதியாய் நின்ற சோதியே"

சுந்தரர் :

'நிலனே நீர்வளிதீ நெடுவானக மாகி நின்ற புலனே

'மெய்க் கனிந்த சோதியை'

'சிவனே யென் செழுஞ்சுடரே'

'பரஞ்சோதி'

மாணிக்கவாசகர் :

"பூதங்கள் ஐந்தாகி"

"நினையப் பிறருக்கரிய நெருப்பை
நீரைக் காலை நிலனை விசும்பை"

"பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி"

"நிலம் நீர் நெருப்புயிர் நீள் விசும்பு நிலாப் பகலோன்
புலனாய மைந்தனோ டெண் வகையாய்ப் புணர்ந்து நின்றான்"

"ஆதியும் அந்தமுமில்லா அரும்பெருஞ் சோதியை"

"சோதியே சுடரே"

"பரஞ்சோதி"

**திருமழிசையாழ்வார் :**

"ஆனில் மேய ஐந்தும் நீ அவற்றுள் நின்ற தூய்மை நீ
வானினோடும் மண்ணும் நீ வளங்கடற் பயனும் நீ"

**திருமங்கையாழ்வார் :**

"ஞாயிறு, திங்கள் பூதம் ஐந்தாய் புனலுருவாய்
அனலுருவில் திகழும் சோதி"

**பட்டினத்தரர் :**

"சோதி வடிவமே தூய சிவம்"

**சேக்கிழார் :**

"அலகில் சோதியன் அம்பலத்து ஆடுவான்"

**தாயுமானவர்**

'அந்தம் ஆதியும் அளப்பரும் சோதியே'

வள்ளலார் :

"அருட்பெருஞ் சோதி"

'அருட்சோதித் தெய்வம்'

பாரதியார் :

"பேரொளி வடிவப் பெருமான் நீ வாழ்க"

பாரதிதாசன் :

"சோதியின் வடிவமே தூய நல் தெய்வம்"

பஞ்ச பூதங்களின் இறைத்தன்மையை உணர்ந்திருந்த காரணத்தினால்தான் தமிழ்நாட்டில் பஞ்சபூதத் தலங்கள் உள்ளன.

திருவாரூர், காஞ்சிபுரம் ... நிலம்

திருவானைக்கோயில் .. நீர்

திருவண்ணாமலை ... தீ

திருக்காளத்தி (இப்பொழுது ஆந்திர மாநிலம்) ... காற்று

தில்லைச்சிற்றம்பலம் (சிதம்பரம்) ... வான்

இயற்கை வழியே சார்ந்து இயற்கையில் இயற்கையாக அமைந்துள்ள கடவுள் நெறியைக் கண்ட தமிழர், கடவுளின் ஊர்தியாக எருது, மயில், சிங்கம் ஆகியவைகளைச் சேர்த்துக் கொண்டனர்.

நம் முன்னோர்கள் தொலைவிலுள்ள ஞாயிறு, திங்கள், வான் முதலியவைகளை வழிபட்டாலும் அருகில் கண்டு தொழவும் சுற்றி வந்து வணங்கவும் வேண்டி, மக்களாகிய தாம் ஓரிடத்தில் தங்கியிருப்பதைப் போல, தெய்வம் வந்து தங்குவது மரத்தில் என்ற கருத்துக்கொண்டு, தங்க நிழல் தரும் தருக்களை அதாவது மரங்களை மனம் குளிர வழிபட்டார்கள்.

அகநானூறு :

"தெய்வஞ் சேர்ந்த பராரை வேம்பில்" 309

"கடவுள் மரத்த முள்மிடை..........." 270

நற்றிணை :

"..........ஆ புறம் தீண்டும்
நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து" 343

மலைபடுகடாம் :

"நல்வரை மராத்துக் கடவுள் ஓங்கிய காடு ஏசு கவலை"
—395, 396

பின்னர், அரசு, வேம்பு போன்ற மரங்களின் அடியில், கடவுளைக் குறிப்பதாக நட்டுவைத்து வழிபடப்பெற்று வந்த கற்களாலான உருவங்கள் 'கந்து', 'கந்தம்' என்றும் 'நடுதறி' என்றும் வழங்கப் பெற்றன. கந்து என்பதின் இயற்பெயர்ப் பொருள் 'தறி' (மரத்துண்டு, மரத்தூண், மரக்கோடு) என்பது ; அதாவது தெய்வம் உறையும் தறி. 'கந்து' என்ற சொல்லிலிருந்து பிறந்த பெயரே 'கந்தன்'. மரத்தறி நட்டு அதில் கடவுளை வழிபட்ட முறைமை தமிழ்நாட்டின் மிக்க பழைமையான சமயக் கொள்கையைக் காட்டுவதாகும்.

புறநானூறு :

"கலிகெழு கடவுட் கந்தம் கைவிட" 52

அகநானூறு :

"கடவுள் போகிய கருந்தாட் கந்தத்து" 307

பட்டினப்பாலை :

"வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்" 249

திருமுருகாற்றுப்படை :

"புதுப் பூங்கடம்பும் மன்றமும் பொதியிலும்
கந்துடை நிலையினும்"

மணிமேகலை- "கடவுள் எழுதிய நெடு நிலைக் கந்தின்
குடவயின் அமைத்த நெடு நிலை வாயில்
முதியாள் கோட்டத்து"

"நெடு நிலைக் கந்தின் இடவயின் விளங்கக்
கடவுள் எழுதிய பாவை ஆங்கு உரைக்கும்"

திருநாவுக்கரசர் :

"...........அடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் நடு தறியைக் காணலாமே"

ஆக, முதலில் கம்பத்தறி நட்டுக் கந்தழி வழிபாடு ஏற்பட்டது; கம்பத்தறி சிவலிங்கமாகியது ; கந்தழீசுவரர் என்ற பெயரும் வழங் கப்பட்டது.

தமிழர்கள் மிகப் பழைய காலத்திலிருந்து 'ஒரு கடவுள்' கொள் கையை அடிப்படையாகக் கொண்டுள்ளவராவர். இதற்குச் சான்றாக, "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் (2104), "ஒன்று கண்டீர் உலகுக்கு ஒரு தெய்வம்" (2962), "ஒன்றெனக் கண்டேனெம் ஈசன் ஒருவனை" (1775) ஆகிய திருமூலர் திருமந்தி ரங்கள் உள்ளன. இக்கொள்கையையே பின் வந்த அருளாளர்களும் வலியிறுத்தியுள்ளார்கள்.

சம்பந்தர் :

"ஏக பெருந்தகையாய பெம்மான்"

அப்பர் :

"உலகுக் கொருவனாய் நின்றாய் நீயே"

"ஒருவனாய் உலகத்தே நின்ற நாளோ"

மாணிக்கவாசகர் :

"ஒருவன் என்னும் ஒருவன் காண்க"

பட்டினத்தார் :

"ஒன்றென்றிரு, தெய்வம் உண்டு என்றிரு"

அடிப்படைக் கொள்கை இவ்வாறு இருப்பினும், அவரவர் மன வளர்ச்சிக்கும் ஆன்மீக உணர்வு நிலைக்கும் புறச்சூழலுக்கும் ஏற்பவும், ' ஆரொருவர் உள்குவார் உள்ளத்துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்" என்ற உறுதியினாலும், தமிழர்கள் தாம்விரும்பும் தெய்வத்தை, கடவுளை, விழுப்பொருளை, மெய்ப் பொருளை, பரம்பொருளை, சத்தியைப் பல வடிவங்களில் கண்டு வழிபடத் தொடங்கினர். 'ஒருவர்தாம் பல பேருளர்' என அப்பரும்,

பலவுருவுந் தன்னுருவே யாயபெருமானை' என சுந்தரரும், 'ஒருவனுமே பலவாகி நின்றவர்', 'ஏகன் அநேகன் இறைவன் அடி வாழ்க' என மாணிக்கவாசகரும் பாடியுள்ளார்கள்.

தாம் விரும்பியவாறு பெயரிட்டுத் தாம் விரும்பிய வடிவத்திலும் அமைத்து அழகுபடுத்தி அந்த மரங்கள் அளித்த பூக்களைக் கொண்டே பூசித்தலைத் தமிழர்கள் மேற்கொண்டனர். குறிப்பிட்ட பூக்களைத் தெய்வங்களோடு இணைத்தனர். சிவனுக்குக் கொன்றை, முருகனுக்குச் செங்காந்தள், திருமாலுக்குத் துளவம்.

தென்னாடுடைய சிவன் ஆதியில் அமர்ந்த இடம் ஆலமரம் என்பது தமிழர் சமயத்தின் முக்கிய கோட்பாடுகளில் ஒன்றாகும்.

''ஆலமர் கடவுளன்ன ......'' (புற 198),

''ஆலமர் செல்வன் அணி சால் பெருவிறல் போல'' (கலி. 81),

''ஆல் அமர் செல்வன் அணிசால் மகன் விழாக்
கால் கோள்'' (கலி—83),

''ஆல்கெழு கடவுட் புதல்வ'' (திருமுருகாற்றுப்படை),

ஆகிய சொற்றொடர்கள் பண்டைய சங்க இலக்கியத்தில் உள்ளவையாதும். இந்த வர்ணனை, தொடர்ந்து பிற்காலத் தமிழ் இலக்கியத்திலும் வருவதைக் காணலாம்.

திருமூலர் :

திருமந்திரம் 2087 'புரந்த கல்லால்நிழற் புண்ணியன் சொன்ன''

*சிலப்பதிகாரம் :*

'ஆலமர் செல்வன் பெயர்கொண்டு வளர்ந்தோன்'

'ஆலமர் செல்வன் புதல்வன்'

மணிமேகலை :

'ஆலமர் செல்வன் மகன் விழாக் கால்கோள் காண்மினோ'

சம்பந்தர் :

'ஆல நீழலுளான்'

'ஆல் நீழற்கீழ் இருந்தவன்'

அப்பர் :

'ஆலினிற் கீழிருந் காரண மோதி'

'ஆல நீழ லமர்ந்த வழகனார்'

சுந்தரர் :

'ஓராலதன்கீழ் இருந்தறமே புரிதற்கு'

மாணிக்கவாசகர் :

"அன்றால நீழற்கீழ் அருமறைகள் தானருளி"

திருவிளையாடற்புராணம் :

"கல்லாலின் புடையமர்ந்து நான்மறை ஆறு அங்கம் முதல் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த........"

தாயுமானவர் :

"கல்லாலின் நீழல் தனில் ஒரு நால்வர்க்கும்......"

எல்லாமும் ஆகிய இறைவனை எவ்வடிவில் கண்டால் என்ன ? பெயரில்லாதவனுக்கு எப்பெயர் இட்டால்தான் என்ன ; எத்தனை பெயர் இட்டால்தான் என்ன ? எல்லாம் பொருந்தும் என்பது நம் அருளாளர்களின் முடிவு.

சம்பந்தர் :

'பத்தர் மன்னிய பாற்றுறை மேவிய
பத்து நூறு பெயரனை'

அப்பர் :

'பேராயிரமுடைய பெம்மான் தன்னை'

'பேராயிரம் பரவி வானோர் ஏத்தும் பெம்மானை'

'ஆயிரம் பேருகந்தானும்'

சுந்தரர் :

'பேருமோராயிரம் பேருடையார்'

'பேரோராயிரமும் முடையானை'

மாணிக்கவாசகர் :

'பேராயிரமுடைப் பெம்மான் போற்றி'

''ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றும் இல்லாற்கு
ஆயிரம் திருநாமம் பாடி தெள்ளேனம் கொட்டாமோ''

இத்தகைய பேருணர்வினால் நம் முன்னோர்கள் முன்னைப் பழம்பொருளை ஆணாகவும், பெண்ணாகவும், அம்மையாகவும் அப்பனாகவும், சிவன் என்றும் சத்தி என்றும், முருகன் என்றும், திருமால் என்றும் ஏற்றித் தொழலாயினர்.

''மாயோன் மேய காடு உரை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்''

என்று தெய்வங்களின் நிறத்தைத் தொல்காப்பியம் குறிப்பிடு வதிலிருந்து, தொல்காப்பியக் காலத்திலேயே தமிழர்கள் தெய்வங் களுக்கு உருவம் கொடுத்திருந்தனர் என்று புலனாகிறது. உருவ மற்றதற்கு நிறம் குறிப்பிடப்பட முடியாதல்லவா ? பின் வந்த சங்க இலக்கியமும் காப்பியமும் இவ்வுருவ வழிபாட்டினை உறுதிப் படுத்துகின்றன.

புறநானூறு :

'நீல் நிற உருவின் நேமியோனும்' – 58

'நீள் திமிர் சடை முது முதல்வன்' —166

அகநானூறு :

கடவுள் வாழ்த்து - ''செவ்வான் அன்னமேனி''

''மன்மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன்'' —220

''இருபெருந் தெய்வத்து உருவுடன் இயைந்த தோற்றம்
போல'' 360

கலித்தொகை :

கடவுள் வாழ்த்து - 'மணிமிடற்று, எண்கையாய்'

''நெட்டிருங் கூந்தற் கடவுள்'' —93

'மிக்கு ஒளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதல்
முக்கண்ணான் உருவே போல்' – 104.

ஐங்குறுநூறு :

கடவுள் வாழ்த்து - ''நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன்''

குறுந்தொகை :

கடவுள் வாழ்த்து - ''சேவலங் கொடியோன் காப்ப''

பெரும்பாணாற்றுப்படை :

''நீல் நிற உருவின் நெடியோன்'' 402

''கடம்பு அமர் நெடுவேள்'' 75

பரிபாடல் :

''செவ்வேள்''

குறிஞ்சிப்பாட்டு :

'வேறு பல் உருவிற் கடவுட் பேணி'

சிலப்பதிகாரம் :

''அறுமுகச் செவ்வேள்''

''மங்கை உருவாய் மறை ஏத்தவே நிற்பாய்''

''வளையுடைக் கையில் சூலம் ஏந்தி
கரியின் உரிவைப் போர்த்து''

———:o:———

# தமிழகக் கோயில் கட்டிடக் கலை

மரத்தடியில் வைத்து வழிபட்ட தெய்வ வடிவங்களை, படிமங் களைப் பாதுகாத்து வழிபட நம் முன்னோர்கள் எண்ணிய போது அரும்பியவைதாம் கோயில்கள்.

ஆதியில் அரசன் இருப்பிடத்தைக் (அரண்மனையை) குறிக்கக் 'கோயில்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டது.

கோ - அரசன்

இல் - இல்லம்

இச்செய்தியைச் சங்க இலக்கியத்திலும் சிலப்பதிகாரத்திலும் காணலாம்.

புறநானூறு :

"சோழன் கோயில்" 378

கலித்தொகை :

"கோயிலுள் கண்டார் நகாமை வேண்டுவல்" 94

பொருநராற்றுப்படை :

"மற்றவன் திருக்கிளர் கோயில் ஒரு சிறைத்தங்கி" வரி 90

நெடுநல்வாடை :

"சிலம்பின் சிலம்பும் கோயில்" 100

பரிபாடல் :

"அண்ணல் கோயில்"

பட்டினப்பாலை :

"உறந்தை போக்கிக் கோயிலொடு குடி நிறீஇ" 285, 286

"வெண்கோயில் மாசு ஊட்டும்" 50

ஆலயத்திற்குக் 'கோட்டம்' என்ற பெயர் ஆதியில் இருந்துள்ளது.

கலித்தொகை :

"புத்தேளிர் கோட்டம் வலம்செய்து" 82

புறநானூறு :

"அணங்குடை முருகன் கோட்டத்து" 299

பட்டினப்பாலை :

"உருகெழுதிறல் உயர் கோட்டத்து" 36

சிலப்பதிகாரம் :

"கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்"

பிறகு, தமிழர்கள், தங்களின் தெய்வ உணர்வு சிறப்புற்று வளர, அண்டத்திற்கே அரசன், இறை, எனக் கருதப்பட்ட கடவுளை வழிபடும் இடத்தைக் 'கோயில்' என்றழைக்க ஆரம்பித்து, அரண். மனையைக் 'கோயில்' என்று குறிப்பிட்டு வந்த வழக்கத்தைக் காலப்போக்கில் கைவிட்டனர். சிலப்பதிகாரத்தில் 'கோயில்' என்ற சொல் அரசனின் 'அரண்மனை' என்ற பொருளிலும் 'கடவுளிருக்குமிடம்' என்ற பொருளிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

சிலப்பதிகாரம் :

"வாயில் வந்து கோயில் காட்டக்
கோயில் மன்னனைக் குறுகினள்"

"மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலும்"

"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்"
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீலமேனி நெடியோன் கோயிலும்
மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்"

நுதல்விழி நாட்டத்து இறையோன் கோயிலும்"

"அருந்தெறற் கடவுள் அகன் பெருங்கோயிலும்
பெரும்பெயர் மன்னவன் பேரிசைக்கோயிலும்"

கோயில் அமைத்தல் பற்றி நூல் வழி மரபு தமிழகத்தில் ஆதி காலத்திலேயே இருந்தது என்பதைக் கீழ்க்காணும் சிலப்பதிகார அடிகள் உணர்த்துகின்றன.

''அறக்களத்து அந்தணர் ஆசான் பெருங்கணி
சிறப்புடைக் கம்மியர் தம்மொடுஞ் சென்று
மேலோர் விழையு நூனெறி மாக்கள்
பால்பெற வகுத்த பத்தினிக் கோட்டம்''

'அம்பலம்' என்ற பெயரும் கோயிலுக்கு இருந்திருக்கிறது. அம்பலத்திற்கு 'பொது இல்' என்பது மற்றொரு பெயர். இதுவே 'பொதியில்' என்று முற்காலத்தில் வழங்கப்பட்டிருக்க வேண்டும். பிற்காலத்தில் சிதம்பரம் அம்பலக்கூத்தன் கோயிலை மட்டும் 'அம்பலம்' என்று குறிப்பிடும் வழக்கம் ஏற்பட்டுள்ளது. ''தில்லைச் சிற்றம்பலம்'', ''திருச்சிற்றம்பலம்'', சிதம்பரம் கோயிலைக் குறிக்கும்.

'சிற்றம்பலம்', திருஅம்பலம்', 'பொன்னம்பலம்', 'சிதம்பரம்' ஆகிய சொற்கள் திருமந்திரங்கள் 652, 886, 887, 1726, 2653, 2722, 2744 ஆகியவற்றில் வந்துள்ளமையைக் கவனிக்கவும் (சித் + அம்பரம் = சிதம்பரம்). கேரளப் பகுதியில் கோயிலை அம்பலம் எனக்குறிப்பிடும் வழக்கம் இன்றுமுள்ளது.

கோயிலுக்கு ஆலயம் என்ற பெயரும் முன்பே வழக்கில் வந்தது. ஆ-ஆன்மா, லயம்-ஒன்றுபடுதல், வயப்படுத்துதல். ஆன்மாவைப் பரம்பொருளோடு ஒன்றுபடுத்துவதற்குக் கோயில் ஏற்ற இடம் என்று கருதப்பட்டதால், கோயிலுக்கு ஆலயம் என்ற பெயரும் கொடுக்கப்பட்டிருக்கிறது

திருமந்திரம் :

2773—''அண்ட நடஞ்செயும் ஆலயந் தானே''

969—''ஐந்தின் பெருமையே ஆலயமாவதும்''

வடமொழி வேதங்களில் கோயில்களோ, கோயில் வழிபாடோ குறிப்பிடப்படவில்லை. இதே வேதகாலத்தில் தமிழகத்தில் கோயில்களும் கோயில் வழிபாடும் இருந்ததை, இதுவரைக் குறிப்பிட்டுள்ள விவரங்களிலிருந்து அறியலாம். கடவுள் உணர்வு தோன்றவும் வளரவும் கோயில் உதவியது.

தொடக்கக் காலத்தில் மரத்தடியிலும் இதர இடங்களிலும் ஆலயங்கள் மண்ணாலும் மரத்தாலும் செங்கல்லாலும் அமைக்கப்

பட்டன. பாதுகாப்பிற்காகச் சுற்று மதில் வைக்கப்பட்டும், வெய்யி லினாலும், மழையினாலும் பாதிக்கப்படாமல் இருக்க, மேற்கூரை யும் வேயப்பட்டது.

அகநானூறு :

''இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென,
மணிப் புறாத்துறந்த மரஞ்சேர் மாடத்து
எழுது அணி கடவுள் போகலின்'' 167

பெரும்பாணாற்றுப்படை :

''தாமரைப் பொகுட்டின் காண்வரத் தோன்றி
சுடு மண் ஓங்கிய நெடு நகர் வரைப்பின்'' 404,405

மணிமேகலை :

''சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டம்''

''மண்ணினும் கல்லினு மரத்தினுஞ் சுவரினுங்
கண்ணிய தெய்வதம் காட்டுநர் வகுக்க''

சுந்தரர் :

''..........தண்டமிழ் நூற்புல வாணர்க்கோர்
அம்மானே பரவையுண் மண்டளி அம்மானே''
(திருவாரூர்ப் பரவையுண் மண்டளி)

சுடு மண் என்பது செங்கல். மண்தளி என்பது மண் கோயிலா கவும் இருக்கலாம் அல்லது சுடுமண் (செங்கல்) கோயிலாகவுமிருக் கலாம். களிமண் கோயில்கள், சுடுமண் அதாவது செங்கல் (இட்டிகை) கோயிலாகவும் மாற்றப்பட்டிருக்கவேண்டும்.

கி.பி. 4-ஆம் நூற்றாண்டிற்கு முன்பு அதாவது சங்க காலத்தின் இறுதியில் வாழ்ந்த சோழ மன்னன் கோச்செங்கண்ணான் 70 கோயில்கள் கட்டினான் என்பதை,

''இருக்கிலங்கு திருமொழிவா யெண்டோளீசற்கு
எழில் மாடம் எழுபது செய்துலகமாண்ட
திருக்குலத்து வளச்சோழன்........''

என்ற பாசுரத்தில் திருமங்கையாழ்வார் தெரிவித்துள்ளார். கோச் செங்கண்ணான் சிவபெருமானுக்கு மட்டுமன்றித் திருமாலுக்கும் மாடக்கோயில்கள் கட்டினான் என்று கூறப்படுகிறது.

''பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங் கோயிலெழுபதினோ டெட்டும் மற்றும்''

என்றும் அப்பர் தேவாரத்தில் வருகிறது. மாடக்கோயில்களில் கருவறை மேல்தளத்தில் உள்ளது. மாடக்கோயில் அல்லது பெருங்கோயில் என்ற பெயரால் விளங்கும் கோயில்களைத் தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள சீர்காழி, சாய்க்காடு. ஆக்கூர், வலிவலம், குடவாசல், கீவளூர், நல்லூர், தலைச்செங்கோடு ஆகிய ஊர்களில் இன்றும் காணலாம். கோச்செங்கணானால் கட்டப் பட்ட செங்கல் கோயில்களும், இதர மண், செங்கல் கோயில்களும் பிற்காலச் சோழ மன்னர்களால் கற்றளியாக மாற்றப்பட்டிருக்க வேண்டும். மரத்தாலும், செங்கல்லாலும் கட்டப்பட்டுள்ள பகுதி களைக் கொண்ட கோயில்கள் சில தமிழ்நாட்டில் இன்றும் காணப் படுகின்றன. (உ-ம்) சிதம்பரம், குற்றாலம், சிலவற்றின் மரக்கூரை பிற்காலத்தில் உலோகத்தால் வேயப்பட்டது. தில்லைக் கூத்தப் பெருமான் ஆலயத்தின் மரத்தால் ஆன கருவறையின் முகடு(கூரை) முதலில் மண் ஓடுகளாலானது. பின்னால் சோழ மன்னர்களமல் அக்கூரையில் பொன் வேயப்பட்டது.

தமிழர்கள், மரத்தடியிலும் மலர்ச்சோலையிலும் வீற்றிருந்த தெய்வப் படிமங்களுக்கு இயற்கைச் சூழ்நிலையில் ஆலயங்கள் அமைக்க முற்பட்டபோதும், ஆதி ஆலயங்களாக இருந்த மரங் களை மறந்துவிடாமல், அம்மரங்களைத் தொடர்ந்து போற்றித் தாம் அமைத்த ஆலயங்களின் ஒவ்வொன்றினோடும் ஒவ்வொரு மரத்தை இணைத்தே தொடர்ந்து வழிபட்டனர். இந்த முறையில் தான் நமது ஆலயங்களில் 'தல விருட்சங்கள்' என்னும் திருத்தலத் தருக்கள் அல்லது தலமரங்கள் மரபு தோன்றலாயிற்று மரங்களின் பெயர்களாலும்கூடத் தலத்தெய்வங்களும் தலங்களும் அழைக்கப் படுகின்றன. (உ-ம்) தில்லை, திருக்குற்றாலம், திருவாலங்காடு, திருவேற்காடு, திருகச்சியேகம்பம், திருவிடைமருதூர், திருப்பனந் தாள், திருப்பாதிரிப்புலியூர் முதலியன.

கி.பி. 6-ஆம் நூற்றாண்டிற்கு முன்புவரைத் தமிழகத்துக் கோ யில்களின் அமைப்புமுறை மேலே கூறியுள்ளவாறே இருந்தது. அக் கோயில்கள் தமிழர்கள் வாழ்வின் மலர்ச்சிக்குப் பெரிதும் உதவின. ''கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'', ''ஆலயம்

தொழுவது சாலவும் நன்று", "தெய்வத்தை ஒருநாளும் மறக்க வேண்டாம்" ஆகிய கொள்கைகளைத் தமிழர்கள் ஆதியிலிருந்து கடைப்பிடித்தனர். கோயில்களைச சுற்றி ஊர்களை அமைத்துப் பெருக்கினர். (உ-ம்) திருவையாறு, சுவாமிமலை, கும்பகோணம். திருவிடைமருதூர், மயிலாடுதுறை. வைத்தீஸ்வரன் கோவில், சீர்காழி, சிதம்பரம், திருப்பாதிரிப்புலியூர், திருக்கோயிலூர்,திருவண்ணாமலை, காஞ்சிபுரம், திருவொற்றியூர், திருவல்லிக்கேணி, மயிலாப்பூர்,திவான்மியூர் திருச்சிராப்பள்ளி, திருவானைக்கோயில், திருவரங்கம், மதுரை, திருநெல்வேலி, முதலியன. திருக்கோயில்களினால் ஊர்கள் வளர்ச்சியடைந்து சிறப்புற்றன; ஊர்களின் வளர்ச்சியினால் திருக்கோயிலகளும் பெரும் புகழ்பெற்று வளர்ந்தன கோயில்கள் உள்ள பல ஊர்கள் அக்கோயில்களின் பெயர்களையே பெற்றன. (உ-ம்) திரு + ஆரூர் = (திருவாரூர்), வைத்தீஸ்வரன் கோயில், திருவரங்கம், திருவேங்கடம், பட்டீஸ்வரம், திருமணிக்கூடம். முதலியன. தமிழர்களின் ஆன்மீக நெறி, சமூக வாழ்க்கை, கலாச்சாரம், பண்பாடு,நுண்கலைகள் ஆகியவைகளின் மையமாகத் திருக்கோயில்கள் தொடர்ந்திருந்துவருகின்றன.

உலகத்தில் உள்ள இதர மதங்களைச் சார்ந்தவர்களும் அவரவர் மதத்திற்கென மாதாக்கோயில், மசூதி, விஹாரம் பள்ளி போன்ற வழிபாட்டு இடங்களை அமைத்துக் கொண்டு, அவ்விடங்களில் அந்தந்த மதத்தின் இயல்பிற்கும் கொள்கைக்கும் ஏற்ப ஏதாவது ஒரு வகையில் உருவம் அல்லது சின்னம் அல்லது அடையாளம் (image, cross, crescent, symbol) வைத்து வழிபட்டு வருகிறார்கள். கடவுளை, இறைவனைத் தொழுதல், பிரார்த்தித்தல், துதித்தல், புகழ்தல், போற்றுதல் (litany, worship, hymns, Psalms, Namaz, prayer) போன்றவை எல்லா மதங்களிலும் ஆதிகாலத்திலிருந்து வருவதையும் காண்கிறோம்.

இவ்வாறு தமிழினம் வரலாற்று அறிவிற்கெட்டிய முதற்காலம் தொட்டே இறைவனை கைப்பொருளாக, கண்ணுக்கினிய பொருளாக ஏற்று, திருக்கோலத் திருமேனி அமைத்து வழிபட்டு, வருகிறது. திருக்கோயில் வழிபாடு நமது வழிவழி மரபாகும். "ஆலயமாக அமர்ந்திருந்தானே" என்றும் "ஐந்தன் பெருமையே ஆலயமாவதும்" என்றும் கோயிலின் பெருமையைத் திருமூலர் விளக்குகிறார். திருமூலர்,சமய குரவர்கள் நால்வருக்கும் முந்தியவர், அவர் காலத்திலேயே கோயில்களும் கோயில் வழிபாடும் இருந்தன என்பதைக் கீழ்காணும் திருமந்திரங்களும் தெரிவிக்கின்றன.

திருமந்திரம் :

நாடும் நகரமும் நற்றிருக்கோயிலுந்
தேடித் திரிந்து சிவபெருமான் என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்த பின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வனே.

ஆய பதிதான் அருட் சிவலிங்கமாம்
ஆய பசுவும் அடலே றெனநிற்கும்
ஆய பலிபீட மாகுநற் பாசமாம்
ஆய அரனிலை ஆய்ந்து கொள்வார்க்கே.

இதனாலன்றோ அப்பரடிகள், திருக்கோயில் சூழ்தலை உடன்படுமாறு வலியுறுத்த,

''ஆக்கையாற் பயனென் அரன் கோயில் வலம்வந்து
பூக்கையாலட்டிப் போற்றி என்னாத இவ்ஆக்கையாற்
பயனென்'' என்றும்,

''.......... கறைக்கண்டன் உறைகோயில்
கோலக் கோபுரம் கோகரணகம் சூழாக்
கால்களாற் பயனென்ன '' என்றும்,

''திருக்கோயி லில்லாத திருவிலூருந்
..............................
..............................
..............................
அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே''

என்றும் விளக்கிப் பாடி,

''ஒருகாலும் திருக்கோயில் சூழா ராகில்
..............................
..............................
.............................. செத்துப்

பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின்றாரே'' என்றும் கூறித் திருக்கோயில் சூழாதாரின் நிலைக்கு வருந்துகிறார்.

“ஆலயம் தானும் அரன் எனத் தொழுமே” என்கிறார் மெய் கண்டார்.

உயிர்களைக் கரையேற்றுவதால் கோயில் உள்ள ஊர்களின் பெயர்களோடு ‘துறை’ என்ற சொல்லையும் சேர்த்தனர். (உ-ம்) திருப்பெருந்துறை, திருச்சோற்றுத்துறை, திருவாலந்துறை, திருவாவடுதுறை, மயிலாடுதுறை முதலியன. ஆற்றின் கரையிலிருக்கும் ஊர்களுக்கு ‘துறை’ என முடியும் பெயர்கள் வந்தன எனவும் கூறப்படுகிறது. ஈச்சுரம் (ஈஸ்வரம்) என்ற பெயருடன் திகழும் சிவன் கோயில்களும் ஊர்களும் உள்ளன. (உ-ம்) அகத்தீச்சுரம், அனந்தீச்சுரம், ஆதித்தேச்சுரம், இராசாராசேச்சுரம்.

தமிழகத்தில் கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் பிற்காலப் பல்லவர்கள் ஆட்சிக்காலத்திலிருந்து கோயில் அமைப்பு முறைகளில் மாற்றங்கள் நிகழ்ந்தன. இம்மாற்றங்களின் மூலமும் அவற்றைத் தொடர்ந்து ஏற்பட்ட வளர்ச்சியின் அடிப்படையிலும் தமிழகத்தில் உருவாக்கப்பட்ட கோயில்களின் அமைப்புக்கலை அல்லது கட்டிடக்கலை திராவிடக் கோயில் கட்டிடக்கலை (Dravidian Architecture) என யாவராலும் குறிப்பிடப்பட்டு வருகிறது. தமிழகத்துக் கோயில்களின் விமானத்தின் உச்சிப் பகுதியான சிகரம் (தலை), இந்தியாவின் இதரப் பகுதிகளில் உள்ள கோயில்களின் சிகரத்திற்கு மாறுபட்டுப் பட்டைகள் உள்ளதாயிருப்பதால், ‘திராவிட சிகரம்’ என்றே வழங்கப்படுகிறது தமிழகத்தில் ஆட்சி செய்த பல்லவர், பாண்டியர், சோழர். விசயநகர மன்னர்கள், நாயக்க மன்னர்கள் ஆகிய ஐந்து பரம்பரைகளில், ஒவ்வொன்றிற்கும் உரித்தான பாணியின் அடிப்படையில், தமிழகத்தின் திராவிடக் கோயில் கட்டிடக் கலை ஐந்து பாணிகளடங்கியதாக (Styles) விளக்கப்படுகிறது.

கி.பி. 3-ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 6-ஆம் நூற்றாண்டின் மத்திய காலம் வரைக் காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த பல்லவ மன்னர்கள் முற்காலப் பல்லவர்கள் என்று குறிப்பிடப்படுகின்றனர். சங்க காலத்தில் உறையூரிலிருந்து ஆட்சி செய்த சோழ அரசர்களின் வலுகுன்றிய நிலையில் இப்பல்லவர்கள் சோழ மண்டலத்தின் வடக்குப் பகுதியில் தங்கள் ஆட்சியை ஏற்படுத்திக்கொண்டனர் இவர்கள் காஞ்சியிலிருந்து ஆட்சி செய்த பகுதியில் ஏற்கனவே சோழன் தொண்டைமான் இளந்திரையன் ஆட்சி செய்திருந்ததால் அப்பகுதி தொண்டை மண்டலம் என வழங்கலாயிற்று, முற்காலப் பல்லவர்கள் தொண்டைமண்டலத்திற்கு வடக்கே உள்ள ஆந்திரப் பகுதியில் ஆட்சி செய்த ஆந்திரச் சோழர்களைச் சேர்ந்தவராவர். ஆந்திரச் சோழர்களுக்கும் தமிழ்

இனத்திற்கும் இனத் தொடர்புண்டு கி.மு. இரண்டாம் கி.மு. முதலாம் நூற்றாண்டுக் காலத்தில் வடக்கே சுங்க, கன்வ அரசர்கள் ஆட்சிசெய்த காலத்தில், தட்சணப் பகுதியில் (டெக்கானில்) ஆந்திரச்சோழர்களின் ஆட்சிக்கு முன், சாதவாகனர்களின் ஆட்சியிருந்தது. இச்சாதவாகனர் பரம்பரை பற்றிய குறிப்புக்கள் வடமொழி வேதத்திலும் வடமொழிப் புராணங்களிலும் உள்ளன. ஆக வடமொழி வேத இலக்கியமும், வடமொழிப் புராணமும் ஏறக்குறைய கி.மு. 3-ஆம், கி.மு. 2-ஆம் நூற்றாண்டுக் காலத்தவையாகும் எனத் தோன்றுகிறது. கவி காளிதாசும் சுங்கர்களையும் சாதவாகனர்களையும் குறிப்பிட்டுள்ளார்.

கி.பி. 6-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து ஆண்ட பல்லவர்கள் பிற்காலப் பல்லவர்கள் எனக் குறிப்பிடப்படுகின்றனர். கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் பிற்காலச் சோழர்களின் ஆட்சி தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு எழுச்சியுற்ற காலத்திற்கு முன்னர் வரை, தமிழகத்தின் பெரும்பகுதி பல்லவர், பாண்டியர் ஆகிய இருவரின் ஆட்சியின்கீழ் இருந்தது. அக்காலத்தில், பல்லவ, பாண்டிய நாடுகளின் இடையே இருந்த பகுதியில் செந்தலை முத்தரையர்களும், புதுக்கோட்டைப் பகுதியில் கொடும்பாளூர் இருக்குவேளிர்களும் குறுநில மன்னர்களாக இருந்து, அவ்வப்போது ஏற்படும் நிலைக்குத் தக்கவாறு பாண்டியர்களுக்கோ அல்லது பல்லவர்களுக்கோ கட்டுப்பட்டிருந்தினர். சோழர்களும் இப்பகுதியில் ஆற்றல் இழந்த நிலையிலிருந்திருக்க வேண்டும். அவ்வாறு இருந்தவர்கள்தான் கி.பி 9-ஆம் நூற்றாண்டில் தங்கள் ஆட்சியைத் தஞ்சையில் மீண்டும் நிலைநாட்டியுள்ளார்கள்.

கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட பிற்காலப் பல்லவர்களின் ஆட்சிக்காலத்தின் தொடக்கத்திலிருந்துதான் மலையிலும், கருங்கல் பாறையிலும் வெட்டிக் குடைந்து உருவாக்கப்பட்ட குடைவரைக் கோயில் அல்லது குகைக்கோயில் (Cave temple, rock-cut temple) அமைப்பு, முதல்மாற்றமாகத் தோன்றியது. மலையிலிருந்து அதாவது மலைச்சரிவிலிருந்து குடையப் பெற்றதால் குடைவரைக் கோயில் என்றும் அதுவே குகைப்போல் அமைந்ததால் குகைக் கோயில் என்றும் குறிப்பிடப்படுகிறது. இவ்வாறு கி.பி. 7-ஆம் நூற்றாண்டில், கருங்கல்லில் கோயிலை உருவாக்கும் மரபைத் தொடங்கியவன் பல்லவ மன்னன், சிம்ம விஷ்ணுவின் மகனான முதலாம் மகேந்திரவர்மன் (கி.பி. 600. கி.பி.630). இவன் அமைத்த குடைவரைக் கோயில்கள் தளவானூர் (சிவன்கோயில்-செஞ்சிக்குத் தென்கிழக்கே), மண்டகப்பட்டு திருமூர்த்திகோயில்-தென்னாற்காடு

மாவட்டம் விழுப்புரத்திலிருந்து சுமார் 20 கி.மீ.), பல்லாவரம், வல்லம் (சிவன்கோயில் - செங்கற்பட்டு மாவட்டம்), சீயமங்கலம் (சிவன்கோயில் வட ஆற்காடு மாவட்டம்),திருச்சிராப்பள்ளி (சிவன் கோயில்-மலைக்கோயில்),சித்தன்னவாசல் (சமணக்கோயில்-புதுக் கோட்டை மாவட்டம்) ஆகிய ஊர்களில் உள்ளன. இவை விமான மின்றி மண்டப அமைப்பிலிருக்கின்றன. அதனால் இவைகள் மண்டபக் கோயில்கள் என்றும் குறிப்பிடப்படுகின்றன. இவைகளின் தூண்கள் சதுரமானவை, கனமானவை. முதலாம் மகேந்திரவர்மன் அமைத்த குடைவரைக் கோயில்களில் பலவும் சிவனுக்கானவை. இவன் முதலில் சமணனாக இருந்து பிறகு அப்பரடிகளால் சைவனானவன்.

முதலாம் மகேந்திரவர்மன் மகன் முதலாம் நரசிம்மவர்மன் (கி.பி. 630 - கி.பி. 668) ஆட்சிக் காலமும் சிறப்பானதாகும். இவனது படைத்தலைவர் பரஞ்சோதியார் (பின்னர்ச்சிறுத்தொண்ட நாயனார்) தலைமையில், பல்லவப்படை மேலைச் சாளுக்கிய மன்னன் இரண்டாம் புலிகேசியுடன் போர் செய்து வாதாபியைக் கைப்பற்றியது. முதலாம் நரசிம்மவர்மன் 'மாமல்லன்' என்ற சிறப்புப் பெயர் பெற்றான். இம்மாமல்லன், குடைவரைக் கோயில் களை மாமல்லபுரம், நாமக்கல், குடுமியாமலை, திருமயம் ஆகிய ஊர்களில் உருவாக்கியதோடல்லாமல், கோயில் அமைப்பில். மேலும் ஒரு புதிய மாற்றத்தையும் ஏற்படுத்தினான். பெரும் பாறையைச் செதுக்கி அப்பாறையையே ஒரு முழுக்கோயிலாக்கியது தான் அப்புதுமை. இவ்வாறு உருவாக்கப்பட்ட ஐந்து ஒற்றைக் கல் கோயில்கள் (monolithic temples) மாமல்லபுரத்தில் உள்ளன. இவ்வொற்றைக்கல் கோயில்கள்,ரதங்கள் (தேர்கள் chariots) எனக் குறிப்பிடப்படுகின்றன. இவைகளை அமைத்தவன் இராசசிம்மன் என்ற இரண்டாம் நரசிம்மவர்மன் என்று கூறுபவர்களுமுண்டு. மாமல்லன் அமைத்த குடைவரைக் கோயில்களின் தூண்கள் நல்ல வடிவமைப்பில் அழகாக இருக்கும். அவைகளின் அடிப்பாகத்தில் சிங்க உருவம் செதுக்கப்பட்டுள்ளது.

இதே காலத்தில், தெற்கே பாண்டிய மன்னர்களும் கலைப் பொலிவுள்ள குடைவரைக் கோயில்களை, திருப்பரங்குன்றம், குன்றக்குடி, மலையடிப்பட்டு (மலையடிக்குறிச்சி), ஆனைமலை ஆகிய ஊர்களில் அமைத்தனர் திருப்பரங்குன்றம் குடைவரைக் கோயிலைக் கட்டியவன் மாறவர்மன் அரிகேசரி என்ற நின்றசீர் நெடுமாற பாண்டியன் (கி.பி. 640—670). மலையடிப்பட்டு குடை வரைக் கோயிலை அமைத்தவன் பாண்டியன் மாறன்சேந்தன் (கி.பி.670 அளவில்). ஆனைமலை நரசிம்மக்குடைவரைக் கோயிலை அமைத்தவன் பாண்டியன் மாறன்சடையன் என்கிற

பராந்தகன்(கி.பி.770 அளவில்).பாண்டியர்கள் ஒற்றைக்கல் கோயிலையும் அமைத்தனர். பாண்டிய நாட்டில் கழுகுமலை (திருநெல்வேலி மாவட்டம்) என்ற ஊரில் உள்ள சிறு கல்குன்றின் ஒரு பகுதி குடைவரைக் கோயிலாகவும், அக்குன்றின் மற்றொரு சிறிய பகுதி தனியே குடைந்து பிரிக்கப்பட்டு ஒற்றைக்கல் கோயிலாகவும் ஆக்கப்பட்டுள்ளன. இந்த ஒற்றைக்கல் கோயிலின் பெயர் வெட்டுவான்கோயில் என்றுள்ளது.

மாமல்லபுரத்து ஒற்றைக்கல் கோயில்களின் அமைப்பு நுட்பத்தைப் பின்பற்றி, கி.பி. 8-ஆம் நூற்றாண்டில் வடக்கே எல்லோராவில் கைலாசநாதர் கோயில் உருவாக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. அக்கோயில் திராவிடக் கலைக் கூறுடையது,

குடைவரைக் கோயில்கள், ஒற்றைக்கல் கோயில்கள் வடிவமைக்கப்பட்டதைத் தொடர்ந்து தோற்றுவிக்கப்பட்டது, கட்டுமானக் கோயில் அமைப்பு. இது தமிழக ஆலயக் கட்டிடக்கலையின் மற்றுமோர் வளர்ச்சியாகும். கோபுரம், விமானத்தோடு கட்டப்பட்ட கோயில் கட்டுமானக் கோயிலாகும். தமிழர்களின் சமய உணர்வும் கலை ஆர்வமும் பெருகப்பெருகக் கோயில்களைத் தூரத்திலிருந்தே கண்டுகொண்டு இறைவனை வணங்குவதற்கு ஏற்றதாகக் கோபுரமும் விமானமும் எழுப்பப்பட்டன. கோ — பரம்பொருள், யாவர்க்கும் இறை ; புரம்—உயர்ந்த மாடம், காவல்தளம்.

அப்பர், சம்பந்தர் காலத்திலேயே கோபுரங்களும், விமானங்களும், மதில்களும், திருச்சுற்றுக்களும், மண்டபங்களுமுள்ள கட்டுமானக் கோயில்கள் இருந்தன என்பதை அவர்கள் தேவாரமும் சேக்கிழார் பெரிய புராணமும் தெரிவிக்கின்றன.

சம்பந்தர் :

‘கோபுரஞ் சூழ் மணிக்கோயில்’

‘கொடிமாட நீடுயர் கோபுரங்கண்மேல்’

‘அன்றரி வழிபட் டிழிச்சிய விமானத் திறையவன்’

‘விழிமிழலையுள் விண்ணிழி விமானத் தேய்ந்த’

அப்பர் :

‘கோலக் கோபுரக் கோகரணம்’

சேக்கிழார் :

'அத்தர்தம் கோபுரந் தொழுதணைந் தருளினார்'

'... ... ... ... ... கோயில் வந்தெய்திப்
பொலங்கொள் நீள்சுடர்க் கோபுரமிறைஞ்சி யுட்புகுந்தார்'

'புலங்கொண் மைந்தனா ரெழுநிலைக் கோபுரம்
பணிந்தெழுந்தனர் போற்றி'

'... ... ... நீள்கொடி சூழ் வியனெடுங் கோபுரந் தோன்றும்'
(திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் புராணம்)

'ஓலம் பெருகிய நிலையேழ் கோபுர முறமெய்கொடு
தொழுதுள் புக்கார்'
'எழுநிலைக் கோபுரந் தெற்றி யெங்கும்'

'விண்ணின் றிழிந்த விமானத்தின்'

'பண்பயில்வண் டறைசோலை சூழுங் காழிப் பரமர் திருக்கோபு
ரத்தைப் பணிந்துள் புக்கு
விண்பணிய வோங்குபெரு விமானந்தன்னை வலங்கொண்டு
தொழுது'
(திருநாவுக்கரசு நாயனார் புராணம்)

அப்பர், சம்பந்தர் காலம் கி.பி. 6, 7 நூற்றாண்டுகள். இவர்களால் பாடப்பெற்ற சிவன் கோயில்கள் தமிழகத்தில் 260-க்குக் குறையாமல் உள்ளன.

செங்கல்லிலான கட்டுமானக் கோயில்கள் வட ஆற்காடு மாவட்டம் கூரத்திலும் கலாம்பாக்கத்திலும் மாமல்லனின் மகனான இரண்டாம் மகேந்திரவர்மனின் (கி.பி. 668 — கி.பி. 670) மகன் முதலாம் பரமேஸ்வரவர்மன் (கி.பி. 670 — கி.பி. 690) கட்டினான். இவன் மகன் இராசசிம்மன் என்கிற இரண்டாம் நரசிம்மவர்மன் (கி.பி. 690 — கி.பி, 705) செங்கல்லுக்குப் பதிலாக மணற்கல்லைக் கொண்டு காஞ்சிபுரத்தில் உள்ள கட்டுமானக் கோயிலான கைலாசநாதர் கோயிலையும், கருங்கல்லினால் மாமல்லபுரத்தில் உள்ள கட்டுமானக் கோயிலான கடற்கரைக் கோயிலையும் கட்டினான. காஞ்சி கைலாசநாதர் கோயிலில் கருவறைமேல் விமானமும், கருவறைக்கு முன் மண்டபமும், மண்டபத்தைச் சுற்றித் திருச்சுற்றும், நுழைவாயில் மேல் சிறிய கோபுரமும் உள்ளன. கருங்கற்களை அடுக்கிக் கட்டப்பட்டுள்ள மாமல்லபுரம் கடற்கரைக்

கோயிலில் நுழைவாயில் கோபுரமும், விமானமும், இரண்டு திருச் சுற்றுக்களும் உள்ளன. இரண்டாம் நரசிம்மவர்மன் சிறந்த சிவபத்தன்.

இராசசிம்மன் மகன் இரண்டாம் பரமேஸ்வரவர்மன் (கி.பி. 705—710) ஆட்சியில் கி.பி. 8-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் காஞ்சியில் வைகுண்ட பெருமாள் கோயில் கருங்கல்லால் கட்டப் பட்டது. இக்கோயிலின் சிற்பக்கலை நிறைவான நிலையில் உள் ளது. பல்லவர் ஆட்சியின் இறுதிக் காலத்திற்கு முன், கி.பி. 9-ஆம் நூற்றாண்டில், உத்திரமேரூரில் உள்ள கைலாசநாதர் கோயிலும் சுந்தரவரத மாடக்கோயிலும், வைகுண்டபெருமாள் கோயிலும் கட்டப்பட்டவையாகும். சிறந்த சிவபத்தனான மூன்றாம் நந்தி வர்மன் (கி.பி.826 — 850) பல கோயில்களுக்குத் தானம் வழங்கினான்.

இதே காலத்தில் தெற்கே பாண்டிய மன்னர்களும் கட்டுமானக் கோயில்களைச் செங்கல்லிலும் கருங்கல்லிலும் கட்டினார்கள். அவையாவன : உத்திரகோசமங்கை கோயில், திருக்கோஷ்டியூர் சௌமியநாராயணர் கோவில், மற்றும் திருப்பூர், பணங்குடி, களியட்டி, விசாலம் ஆகிய ஊர்களில் உள்ள கோயில்கள்.

கி.பி. 7, 8 ஆம் நூற்றாண்டுகளில் நாயன்மார்களும் ஆழ்வார் களும் முறையே சைவ, வைணவ பக்தி இலக்கியங்களை அருளித் தமிழகத்தின் சமய வரலாற்றில் உன்னத மறுமலர்ச்சியை ஏற்படுத் தினர். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய சைவ சமயாச்சாரியர்களும், முதல் ஆழ்வார்கள் மூவர் மற்றும் திருமங்கை ஆழ்வார் ஆகிய வைணவ ஆழ்வார்களும் தமிழகமெங்கும் சென்று திருக்கோயில்களில் தமிழில் அருள் பாடல்களைப்பாடி இறைவனை வழிபட்டுத் தமிழர்களின் சமய நெறிக்குப் புத்துயிர் அளித்தனர். மூன்று சைவ சமய குரவர்கள் பாடியவை தேவாரம் என்றும், ஆழ் வார்கள்பாடியவை பிரபந்தம் அல்லது பாசுரங்கள் என்றும் அழைக் கப்படுகின்றன. தமிழகத்தில் இருந்த கோயில்களின் வகைகளைத் திருநாவுக்கரசர் கீழ்க்காணும் தேவாரப் பதிகத்தில் விவரிக்கிறார் ;

பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
    பெருங்கோயி லெழுபதினோ டெட்டு மற்றும்
கரக்கோயில் கடிபொழில் சூழ் ஞாழற்கோயில்
    கருப்பறியற் பொருப்பனைய கொகுடிக் கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்து
    மிளங்கோயில் மணிக்கோயி லாலக் கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து
    தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீரு மன்றே.

மலைமேல் உள்ள கோயிலும், மேல்தளத்தில் கருவறை உள்ள மாடக்கோயிலும் பெருங்கோயிலாகும். யானை உறங்குவது போன்ற நிலையில் கட்டப்பட்டுள்ள விமானத்தைக் கொண்ட மாடக்கோயிலுக்குத் தூங்கானை மாடக்கோயில் என்று பெயர். இந்த அமைப்பில் திருப்பெண்ணாகடத்துக் கோயில் உள்ளது.தேர் வடிவமாகச் சக்கரங்களோடு அமைக்கப்பெற்ற கோயில் கரக்கோயில். இத்தகைய கரக்கோயில் ஒன்று காட்டுமன்னார் கோயிலுக்குத் தெற்கே உள்ள மேலைக்கடம்பூரில் உள்ளது.

மரச்சோலைகளின் நடுவே அமைக்கப்பட்ட கோயில் ஞாழற் கோயில். ஞாழல் என்பது ஒரு மரத்தின் பெயர். "பாதிரிப் புலியூர்த் திருக்கடை ஞாழற் பெருமானடிகளுக்கு" என வரும் கல்வெட்டிலிருந்து, திருப்பாதிரிப்புலியூரிலுள்ள கோயில், முதலில் ஞாழற்கோயிலாக இருந்திருக்கவேண்டும் எனத் தோன்றுகிறது.

கொகுடி என்பது ஒருவித முல்லைக்கொடி. முல்லைக்கொடி மிகுதியாக உள்ள ஓரிடத்தில் அமைக்கப்பெற்ற கோயில் கொகுடிக் கோயில். சீர்காழிக்கு மேற்கே உள்ள திருக்கருப்பறியலூரில் உள்ள கோயில் கொகுடிக்கோயில் எனச் சுந்தரர் தேவாரம் தெரிவிக்கிறது.

பழைய கோயிலைப் புதுப்பிக்குங்காலத்து. அதற்குப் பக்கத்தில் தற்காலிகமாக இறைவனை எழுந்தருளுவித்து வழிபாடு செய்யப்படும் கோயில் இளங்கோயில்.

மணிக்கோயில் அமைப்புப் பற்றித் தெளிவாகத் தெரியவில்லை என்பது அறிஞர்கள் கூற்று. 'திருநறையூர் மணி மாடஞ் சேர் மின்களே" என்று பாசுரத்திலும், "தில்லை தன்னுள் செற்றரு மாமணிக் கோயில்" என்று நம்பியாண்டார் நம்பியின் கோயில் திருப்பண்ணியர் திருவிருத்தத்திலும் இதுபற்றி வருகிறது.

ஆலமரத்தடியில் எழுப்பப்பெற்றகோயில் ஆலக்கோயிலாகும்.

அப்பரடிகள் கூறிய கோயில்களின் வகைகள்பற்றிச் சம்பந்தர், சுந்தரர் தேவாரப் பாடல்களிலும் குறிப்புக்கள் உள்ளன. திவ்வியப் பிரபந்தங்களிலும் இவ்வகைக் கோயில்கள் குறிப்பிடப்படுகின்றன. ஆக, தேவாரம், திவ்வியப்பிரபந்தங்கள் காலத்திற்குள் தமிழகத்தில் பலவகைக் கோயில்கள் தோன்றியுள்ளன. நால்வர் பாடியுள்ள 275 சிவன்கோயில்களில், 267 கோயில்களும், ஆழ்வார்களால் பாடப்பெற்ற (மங்களாசாசனம்) 108 வைணவத் தலங்களில் 95ம் தமிழகத்தில் உள்ளன. திருமால் கோயிலை விண்ணகர் என்று கூறும் மரபும் தமிழகத்தில் உள்ளது.

கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் பல்லவர்களுக்கும் பாண்டியர் களுக்குமிடையே ஆதிக்கப்போர் நடந்து, அந்நூற்றாண்டில் பல்லவர்கள் மறையவும், பாண்டியர்கள் வலுக்குன்றி ஒடுங்கவும் அந்நிலையில் சோழ மண்டலத்தில் சோழர்கள் மீண்டும் எழுச்சி பெறத் தொடங்கினர். தஞ்சைப் பகுதியில் சிற்றரசாக இருந்த முத்தரையர்களை விசயாலய சோழன் தோற்கடித்து, தஞ்சைப் பகுதியை மீண்டும் கைப்பற்றித் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு, சோழர் ஆட்சியை மீண்டும் ஏற்படுத்தினான். இவ் விசயாலய சோழன் முதற்கொண்டு தமிழகத்தில் ஏறத்தாழ ஐந்நூறு ஆண்டுகள் ஆட்சி செய்த சோழ மன்னர்கள் பிற்காலச் சோழர்கள் என்று வரலாற்றில் குறிப்பிடப்படுகின்றனர். இப்பிற்காலச் சோழர் களின் ஆட்சி இந்திய வரலாற்றில், குறிப்பாகத் தமிழகத்தின் வரலாற்றில் மிகச் சிறப்பான இடம் பெறுகிறது. இவர்கள் ஆட்சி யில், முன்பு பல்லவராட்சியிலிருந்த தொண்டை மண்டலம் மீண்டும் சோழ மண்டலத்தின் ஒரு பகுதியாயிற்று. கி.பி. 10-ஆம் நூற்றாண்டின் இறுதியிலும், கி.பி. 11-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும், பாண்டிய நாடும் சோழ மண்டலத்தின் ஒரு பகுதி யாயிற்று. இப்பிற்காலச் சோழர்கள் ஆட்சிக் காலத்தில் அன்னிய மதங்களான சமணமும் பௌத்தமும் பெருமளவுக்குக் குறைந்து சைவ சமயம் ஓங்கியது. பாண்டிய, பல்லவ, சேர அரசுப் பரம் பரைகளில் சமணம், வைணவம், சைவம் ஆகிய சமயங்களைத் தழுவிய மன்னர்களிருந்தனர். ஆனால், சோழ மன்னர்கள் அனை வரும் சைவ சமயத்தினர் என்பது குறிப்பிடத்தக்கது; அவர்கள் எல்லோரும் சிவ நெறியில் மிக்க ஈடுபாடு கொண்டவர்கள்.

பிற்காலச் சோழர்களின் ஆட்சிக்காலத்தில், தமிழகக் கோயில் களின் வளர்ச்சி மிகச் சிறப்பாக இருந்தது. கி.பி. 9-ஆம் நூற்றாண் டின் பிற்பகுதியிலிருந்து கி.பி. 13-ஆம் நூற்றாண்டின் மத்திவரை உள்ள சோழர் ஆட்சிக்காலம், கோயில் கட்டிடக் கலைக்கும், கல் சிற்பக்கலைக்கும், உலோகச் சிற்பக்கலைக்கும் ஒரு பொற்கால மாகக் கருதப்படுகிறது. உலகத்திலேயே தலைசிறந்த கோயில் அமைப்பாளர்கள் (the greatest temple builders in the world) என்ற பெயரையும் சிறப்பையும் தமிழனத்திற்கு இச்சோழர்கள் பெற்றுத் தந்தனர். இக்காலத்தில் ஓவியக்கலையும், இசைக்கலையும், ஆடற் கலையும், நாடகக்கலையும், உன்னத வளர்ச்சி பெற்றன. பிற்காலச் சோழர்களின் ஆட்சிக்காலம், கோயில் வளர்ச்சியைப் பொறுத்த வரையில் மூன்று காலமாகப் பிரிக்கப்படுகிறது. விசயாலயசோழன் முதல் முதலாம் இராசராசன் ஆட்சி தொடங்கும்வரை உள்ள காலத்தின் கோயில்களை, முந்திய சோழர் கோயில்கள் (Early Chola Tempels) என்றும், முதலாம் இராசராசன் முதல் முதலாம் குலோத்

துங்கன் ஆட்சி தொடங்கிய வரை உள்ள காலத்துக் கோயில்களை, மத்திய சோழர் கோயில்கள் (Middle Chola Temples) என்றும், முதலாம் குலோத்துங்கன் முதல் பிற்காலச் சோழ மன்னர்களின் இறுதிக்காலம் வரை உள்ள காலத்துக் கோயில்களை பிற்காலச் சோழர் கோயில்கள் (Later Chola Tempels) என்றும் மூன்று வகை யாகக் குறிப்பிடுகின்றனர்.

புதுக்கோட்டை மாவட்டம் நார்த்தாமலை என்ற குன்றில் உள்ள விசயாலய சோழீச்சுரம் என்றழைக்கப்படும் கோயில் விசயாலய சோழனால் கட்டப்பட்டதாகும். விசயாலயனின் மகன் முதலாம் ஆதித்தன் (கி.பி. 880-907) காவிரி ஆற்றின் இரு மருங்கி லும பல சிவன் கோயில்களைக் கற்றளிகளாகக் கட்டினான் என்று அன்பில் செப்பேடுகள் தெரிவிக்கின்றன. இக்கோயில்களில் ஒன்று, திருப்புறம்பயத்தில் (கும்பகோணத்திற்கு அருகே) உள்ள ஆதித்தேச்சுரம் கோயில். திருச்சிராப்பள்ளி மாவட்டம் சீனிவாச நல்லூரில் உள்ள சிறிய ஆனால் அழகிய குரங்கநாதர் கோயிலைக் கட்டியவன் முதலாம் ஆதித்தன் என்று சிலராலும், இவன் மகன் முதலாம் பராந்தகன் என்று வேறு சிலராலும் கூறப்படுகிறது ஆதித்த சோழன் காலத்தில் பழுவூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட பழுவேட்டரையர்கள் பழுவூரில் கோயில்கள் எழுப்பித்தார் கள்.

மற்றுமொரு குறுநில மன்னர் பிரிவான கொடும்பாளூர் வேளிர்கள் கொடும்பாளூரில் கட்டிய கோயில் "மூவர் கோயில்" என்று வழங்கி வருகின்றன. இப்பொழுது இவைகளில் இரண்டு கோயில்கள் மட்டும் உள்ளன. இவை சிறிய விமானங்கள்கொண்ட சிறிய கோயில்களாகும்.

ஆதித்த சோழன் மகன் முதலாம் பராந்தக சோழன் காலத் திலும் பல கற்கோயில்கள் கட்டப்பட்டன. இவைகள் பசுபதி கோயில், திருவாடுதுறை, திருவாமாத்தூர், திருஎறும்பூர், காட்டு மன்னார்குடி ஆகிய ஊர்களில் உள்ளன. உத்திரமேரூர் கல் வெட்டு இவன் காலத்து ஊர்மன்ற அமைப்பு முறையை விளக்கு கிறது. இப்பராந்தக சோழன் தில்லை ஆடவல்லான் கோயிலின் கருவறை மேல் பொன் வேய்ந்தான். கி. பி. 949 முதல் கி. பி. 957 வரை ஆண்ட கண்டராதித்தர் திருவிசைப்பா பாடியுள்ளார். இவர் மனைவி செம்பியன் மாதேவியார் பல கோயில்களைக் கட்டினார். செம்பியன் மாதேவி (நாகைப்பட்டினம் அருகே) என்ற பெயரை யுடைய ஊரில் உள்ள கோயில் இவரால் கட்டப்பட்டதாகும். கண்டராதித்தர் மகன் மதுராந்தகன் (உத்தம சோழன் கி.பி. 970-985) காஞ்சிபுரத்திற்கு அருகே உள்ள தென்னேரி ஊரில், உத்தம சோழீசுவரம் கோயிலைக் கட்டினான்.

முந்திய சோழர் காலத்துக் கோயில்களில் திருநல்லம் (கோனேரி ராசபுரம்), கீழையூர், திருவிசைநல்லூர், கோவிலடி, கூகூர், முது குன்றம் (விருத்தாச்சலம்), திருவெண்ணெய்நல்லூர், லால்குடி, வாலிகண்டபுரம் முதலிய ஊர்களில் உள்ள கோயில்களும் அடங் கும். பாடல்பெற்ற, செங்கற் கோயில்கள் பல இக்காலத்தில் கற் கோயில்களாக மாற்றியமைக்கப்பட்டன. இவைகளில் சிலவற்றின் அடித்தளம், கல்லாலும், மேல்தளம் செங்கல்லாலும் கட்டப்பட்டி ருக்கின்றன.

முதலாம் இராசராசன் காலத்திலிருந்து முதற் குலோத்துங்கன் ஆட்சியின் தொடக்கம் வரை உள்ள காலம், தமிழக வரலாற்றில், எல்லா வகைகளிலும் சிறந்த பொற்காலமெனக் கருதப்படுகிறது. இக்காலச் சோழ மன்னர்கள், பல வெற்றிகளைப் பெற்று, அரும் பெரும் சாதனைகளை நிகழ்த்தித் தமிழகத்தின் புகழைப் பரவச் செய்தனர். அவர்களின் ஆட்சியில் தமிழகக் கலைகளும் தமிழ்ப் பண்பாடும் சிறந்து விளங்கின. ஆலயக் கட்டிடக் கலையின் சிறப்பும் உச்ச நிலையை அடைந்தது எனக் கூறலாம். பல நாடு களை வென்று பெரிய பேரரசை (Empire) உருவாக்கி, தமிழ கத்தைப் பல்வகையில் உச்ச நிலைக்குக் கொண்டுவந்து தமிழகத் தின் பெரும் புகழ் வெகுதூரம் பரவச் செய்த அரிய பெருமைக்குரிய வன் சோழ மாமன்னன் முதலாம் இராசராசன் (கி.பி, 985 — 1014) இப்பேரரசன், தமிழகக் கோயில் கட்டிடக் கலையில் எழில்மிகு புது மாற்றத்தை ஏற்படுத்தி உலகப் புகழ் பெற்றான். அவனுடைய இப்புகழ் இன்றும் நிலவி வருகிறது. கி.பி. 11-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இவன் கருங்கல்லால் கட்டியது, தஞ்சையில் உள்ள பெருவுடையார் கோயில் (பிரகதீஸ்வரர் கோயில் - பெரிய கோயில் - இராசராசேச்சுரம்). வனப்புமிக்க இப்பெரிய கோயில் ஆறு ஆண்டு காலத்தில் கட்டப்பட்டு கி.பி. 1010-ல் முடிக்கப் பெற்றது. மிகப் பெரிய உயர்ந்த விமானத்தைக் கொண்ட முதல் கோயில், இப்பெரிய கோயில், 216 அடி உயரமும், 13 நிலை களையும் கொண்டு கருவறையை உள்ளடக்கியுள்ள விமானம் முழுமையும், அதாவது அடிநிலை முதல் முடி (முகடு) வரை கருங் கல்லால் சதுரமாகக் கட்டப்பட்டுள்ளது. கீழிருந்து மேலே உயர உயர சதுரத்தின் அளவு குறைகிறது (Square Pyramid). இந்தச் சதுர விமானத்தின் உச்சித்தளம் 80 டன் எடையுள்ள ஒரு சதுர கருங்கல்லால் (25½ அடி சதுரம்) மூடப்பட்டுள்ளது. இச்சதுரக் கல்லின் மேல்தான், செப்புக்குடத்தைத் (கலசத்தை) தாங்கி, குவிந்த வடிவமைப்பில் (dome-shaped) சிகரம் உள்ளது. இவ் விமானத்தின் கட்டிட முறையே புதுமையானது, தனித்தன்மை

யுடையது. வேறு எங்கும் காணப்படாத பொறியியல் முறையில் உள்ளமைப்புக் கட்டப்பட்டிருக்கிறது. இவ்விமானத்தின் அமைப்பு, அக்காலத்துத் தமிழகப் பொறியியல் ஆற்றலுக்கும், வியப்பூட்டும் தொழில் நுட்பத்திற்கும், கோயில் கட்டிடக் கலையின் அழகிற்கும் சிறப்பிற்கும் சான்றாக உள்ளது. கருவறையை உள்ளடக்கியுள்ள விமானம், தமிழரின் சைவ சித்தாந்தக் கொள்கையின்படித் தூல லிங்கமாகும். இதை, "தூய விமானமுந் தூலமதாகுமால்" என்ற திருமந்திரத்தின் (1718) மூலம் திருமூலர் விளக்கியுள்ளார். இக் கோயில் விமானத்தின் அடியில் உள்ள கருவறையில் உள்ள சூக்கும லிங்கம் மிகவும் பெரியது. இப்பெரிய சிவலிங்கத்தைச் சுற்றி உயரத்தில் மேடை அமைத்து அதில் சிவாச்சாரியார்கள் நின்று கொண்டு சிவலிங்கத்திற்குத் திரு நீராட்டல் போன்ற சடங்குகளைச் செய்கின்றனர். கருவறைக்குள்ளேயே சிவலிங்கத்தைச் சுற்றி அமைக்கப்பட்டுள்ள சிறிய திருச்சுற்றின் சுவர்களில், முதலாம் இராசராசன் காலத்தில் தீட்டப்பட்ட ஓவியங்களை இன்றும் காண்கிறோம். இக்கோயிலின் மேல்தளத்தில் விமானத்தின் உட்புறச் சுற்றின் கருங்கல் சுவரில் இப்பொழுது பரதநாட்டியம் என்ற பெயரால் வழங்கப்படுகிற தமிழக நாட்டியக் கலையின் எழில்மிகு கரணங்கள் 108-ல் 81கரணங்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன. 82-ஆவது கரணம் ஆரம்பித்து முடிக்கப்படாமலிருக்கிறது. சிவனே இக்கரணங்களை ஆடுவது போலச் சிற்பங்கள் அமைந்து உள்ளன. விமானத்தின் நான்கு வெளிப்புறங்களிலும் அழகிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இந்த விமானம்பற்றிச் சிற்பக்கலை வல்லுநர் பேராசிரியர் பெர்சி பிரவுன் (Prof. Percy Brown) எழுதியுள்ளவை:

"Unquestionably, the finest single creation of Dravidian Craftsmen, the Tanjore Vimanam is the touch-stone of Indian Architecture as a whole".

தமிழாக்கம் :

"தஞ்சை விமானம் திராவிடச் சிற்பிகளின் தனித்தொரு கலைப் படைப்பு. இந்தியக் கட்டிடக்கலையின் மேம்பாட்டினை அறிய, இது ஓர் உரைகல்".

கோயிலின் முதற்சுற்றில் பெருவுடையாரின் சந்நிதியில் உள்ள ஒரே கல்லிலான பெரிய நந்தி இப்பெரிய கோயிலின் மற்றொரு சிறப்புக் கூறாகும். இப்பெரிய நந்தியும் கருவறையில் உள்ள பெரிய சிவலிங்கமும் ஒரே மட்டத்தில் அமைக்கப்பட்டுள்ளன. இந்த நந்தி மண்டபத்தின் கூறுகள் சிலவற்றைக் குறிப்பிட்டு,

இந்த நந்தி முதலாம் இராசராசன் காலத்தில் அமைக்கப்பட்டதாக இருக்காது என்ற கருத்து சிலரால் தெரிவிக்கப்படுகிறது. தஞ்சைப் பெரிய கோயில் கட்டப்பட்டதற்குச் சில ஆண்டுகளுக்குப் பின் முதலாம் இராசராசன் மகன் முதலாம் இராசேந்திரனால் கங்கை கொண்ட சோழபுரத்தில் கட்டப்பட்ட கோயிலும் சிவலிங்கமும் நந்தியும் பெரியனவாக உள்ளன. அக்கோயில் நந்திபற்றி மாறுபட்ட கருத்துக் கிடையாது. முதலாம் இராசேந்திரன் கங்கை கொண்ட சோழபுரத்துக் கோயிலில் பெரிய நந்தியை அமைத்தான் என்பதை ஏற்றுக்கொள்ளும்போது, கங்கைகொண்ட சோழபுரத்துக் கோயிலை விடப் பெரியதாகக் கட்டப்பட்டுள்ள தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள பெரிய நந்தியும். அக்கோயில் கட்டப்பட்டபோதே அமைக்கப்பட்டதாகத்தான் இருக்கவேண்டும் என்று ஏன் எடுத்துக்கொள்ளக்கூடாது? இந்த நந்தி பிற்காலத்தில் அமைக்கப்பட்டது என்று தெளிவாகத் தெரிவிக்கும் சான்று ஒன்று மில்லாதபோது, இந்த நந்தியின் காலம்பற்றிச் சர்ச்சை செய்வது முறையானதாகத் தோன்றவில்லை. தஞ்சைப் பெரிய கோயிலின் விமானத்தின் வடபக்க வெளிப்புறத்தில் தொப்பி அணிந்த ஆண் சிற்பம் இருப்பதைக் காணவில்லையா? நந்தி மண்டபம் வேண்டுமானால் பிற்காலத்தில் கட்டப்பட்டிருக்கலாம். கிழக்கு நோக்கியுள்ள இக்கோயிலின் கிழக்கு நுழைவாயில்கள் இரண்டிலும், இரண்டு சிறிய கோபுரங்கள் உள்ளன. தமிழகத்தில் பெரும்பாலான கோயில்கள் கிழக்கு நோக்கியே இருப்பவை. இது, தமிழகத்தின் கோயில் வழி பாட்டின் தனி மரபாகும். நுழைவாயில்களில் சிறிய கோபுரங்களைக் கட்டிக் கோயில்களை அமைப்பது, பிற்காலச் சோழர் காலம் முழுவதும் தொடர்ந்தது. முதல் இராசராசன் காலத்திலேயே இக்கோயிலுக்காக நிறுவப்பட்ட அறக்கட்டளைகள், அளிக்கப்பட்ட அணிகலங்கள், இதர நன்கொடைகள் ஆகியவைகளின் விவரங்களும் மற்றும் முதலாம் இராசராசனின் அரசியல் நடவடிக்கைகள் போன்றவைகளின் விவரங்களும் இக்கோயிலில் பொறிகப்பட்டுள்ள ஏராளமான கல்வெட்டுக்களில் கொடுக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுக்கள் முதலாம் இராசராசன் ஆட்சியின் வரலாறு தொடர்பான ஆராய்ச்சிக்கு முக்கியமான சான்றுகளாக உதவுகின்றன- இந்தியாவிலேயே இப்பெரியகோயில்தான் எல்லாவகையிலும் அதிக எழில் கொண்டுள்ளது என்றும், கோயில்கள் கட்டியவர்களில் தமிழர் இனம்தான் உலகத்தில் மிக்க சிறப்புடையவர்கள்என்றும் 'என்சைகுலோபிடியா பிரிட்டானிக்கா'வில் வர்ணிக்கப்பட்டுள்ளது. ("The Tamil races were penhaps the greatest temple builders in the world..................the great pagoda at Tanjore is by far the grandest temple in India"—Encyclopedia Britannica)

இவ்வளவு பெரிய அளவில் ஒரு கோயிலை அமைக்க எண்ணங் கொண்டு, பெரிய அளவினால் எழிலோ அழகோ கெடாதவாறு தக்க வடிவமைப்பை நிர்ணயித்து, தஞ்சைப் பகுதியில் கருங்கல் இல்லாத நிலையிருந்தும், அடித்தளமுதல் முடிவரை முற்றிலும் தரமான கருங்கல்லால் இப்பெரிய கோயிலை எல்லாவகையிலும் பொலிவுடன் தோற்றமளிக்குமாறு கட்டி முடித்து அழியாப் புகழ் பெற்றனர், முதலாம் இராசராசனும், அவனுடைய கட்டிடக் கலைஞர்களும் சைவப் பற்றின் காரணமாக, 'சிவபாத சேகரன்' என்ற பெயரைப் பெற்ற முதலாம் இராசராசன் திருநாரையூர் நம்பியாண்டார் நம்பியைக் கொண்டு தேவாரத்தை ஏழு திருமுறை களாகத் தொகுத்தான். இவன காலத்தில் சைவத் திருமுறைகள் மக்களிடத்தே பரவின. முதலாம் இராசராசனின் பட்டத்தரசி உலகமகாதேவியாரால் திருவையாற்றுக் கோயிலுக்கு வடபால் 'வடகைலாசம்' என்னும் கோயில் கட்டப்பட்டது. முதலாம் இராசராசனுக்குப் பின்வந்த சோழ மன்னர்கள் அவனைப் பின்பற்றி உயர்ந்த விமானம் கொண்ட ஆலயங்களைக் கட்டினார்கள்.

முதலாம் இராசராசனின் மகன் முதலாம் இராசேந்திரன் (கி.பி. 1014—கி.பி. 1044) 190 அடி உயரமுள்ள விமானத்துடன் அழகான சிவன் கோயில் ஒன்றைக் கங்கைகொண்ட சோழபுரத்தில் கட்டினான். இக்கோயில், பொதுவாகத் தஞ்சைப் பெரியகோயில் அமைப்பை ஏறத்தாழ ஒத்து ஆனால், அளவில் சிறியதாக உள்ளது. இக்கோயில் விமானம் தஞ்சைப் பெரிய கோயில் விமானத்தின் அமைப்புக்குச் சற்று மாறுபட்ட அமைப்பு உடையது. இக்கோயில் விமானத்தில் மிகவும் அழகிய சிற்ப விசித்திரங்களைக் காண்கிறோம். இவ்விரண்டு கோயில்களும் சோழர்களின் கோயில் கட்டிடக் கலையின் சிறப்பை கி.பி. 11-ஆம் நூற்றாண்டு முற்பாதி யில் உச்ச நிலைக்கு உயர்த்தின. இக்காலத்தில் அழகிய தெய்வப் படிமங்களும் உலோகத்தினால் உருவாக்கப்பட்டன. முதலாம் இராசேந்திரன், கோயில்களில் திருத்தொண்டத் தொகை ஓத ஏற் பாடு செய்தான் என்று கூறப்படுகிறது.

முதலாம் இராசேந்திரனுக்கு பின்னர் ஆண்ட சோழ மன்னர் கள் காலத்தில், சோழர்களின் ஆலயக்கட்டிடக் கலை இறுதிக் கட்டத்தை அடைந்தது என்று கொள்ளலாம், இக்கட்டத்தில், கோயில்களின் திருச்சுற்றுக்கள் பெரியனவாக ஆக்கப்பட்டு, மண்ட பங்களும் சேர்க்கப்பட்டன. முக்கியமான கோயில்களில் அம்மன் சந்நிதியை அமைக்கும் மரபும் தொடங்கியது. இக்காலத்தில் பெரிய மதிற்சுவர்களும், நுழைவாயில் மேல் உயரமான கோபுரங்களும் கட்டப்பட்டன. சூரியனார் கோயில், மேலைப்பழுவூர்க் குலோத்

துங்க சோழீச்சுரம், மன்னார்குடி இராசகோபால சுவாமி கோயில் என வழங்கும் குலோத்துங்க சோழ விண்ணகரம் ஆசிய கோயில்கள் முதலாம் குலோத்துங்கனால் (கி பி. 1070-கி.பி. 1120) கட்டப்பட்டவை. சோழர்கள் காலத்தில், கோயில்கள் மன்னர்கள் பெயர்களாலும் அழைக்கப்படும் மரபு இருந்தது. முதலாம் குலோத்துங்கனுக்குச் 'சுங்கம் தவிர்த்த சோழன்', 'திருநீற்றுச் சோழன்' என்ற சிறப்புப் பெயர்கள் இருந்தன. இவன். தன் படைத் தலைவன் கருணாகரத் தொண்டைமானைக்கொண்டு வடகலிங்கத்தை வென்றான். இவனது அவைக்களப்புலவர் சயங்கொண்டார் கலிங்கத்துப் பரணி இயற்றினார். முதலாம் குலோத்துங்கன் பரம்பரையினரின் ஆட்சிக் காலத்தில் தமிழ்மொழியும், தமிழ்க்கலைகளும் மேலும் சிறப்புடன் விளங்கின. இவன் மகன் விக்கிரமசோழனும் (1118-1135) இத்தகைய கோயில்களைக் கட்டியிருக்கிறான். ஒட்டக்கூத்தர் 'விக்கிரம சோழன் உலா' இயற்றியுள்ளார் விக்கிரம சோழன் மகன் இரண்டாம் குலோத்துங்கன் (கி.பி. 1133 — கி.பி. 1146). இவனுக்கு 'அநபாயன்', 'அநபாய சோழன்' என்ற சிறப்புப் பெயர்களும் இருந்தன. இவனது முதல் அமைச்சர், சேக்கிழார் (இயற்பெயர்-அருண்மொழித் தேவர்) சுந்தரரது திருத்தொண்டத்தொகை, திருநாரையூர் நம்பியாண்டார் நம்பியின் திருத்தொண்டர் திருவந்தாதி ஆகிய நூல்களின் அடிப்படையில், 'பெரிய புராணம்' என்ற சிறப்புப் பெயர் கொண்டுள்ள "திருத்தொண்டர் புராண"த்தை இயற்றினார். இப்புராணத்தில் "இனிது காக்கும் அநபாயன் நீழற் பொற்குடை குளிர்வதென்றால்" என்று வருகிறது. இவ்விரண்டாம் குலோத்துங்கன், தில்லையில் ஏழுநிலைக் கோபுரங்களை அமைத்தான் என்றும், பேரம்பலத்திற்குப் பொன்வேய்ந்தான் என்றும் கூறப்படுகிறது. "சென்னி அபயன் குலோத்துங்கச் சோழன் தில்லைத் திருவெல்லை பொன்னின் மயமாக்கிய வளவர் போரேறு" என்பதும் 'புலிகாக்கும் மன்னர் பெருமான் அநபாயன்" என்பதும் சேக்கிழார் பெரியபுராணம். (முதலாம் பராந்தக சோழனால் பொன் வேயப்பட்டது, மேலும் சிராக்கப்பட்டிருக்கக்கூடும்).ஒட்டக்கூத்தர் இரண்டாம் குலோத்துங்கன் மீது உலாவும், பிள்ளைத்தமிழும் பாடியுள்ளார்.

கி.பி. 1146 முதல் கி.பி.1163 வரையில் ஆண்ட இரண்டாம் இராசராசன் கும்பகோணத்திற்கு அருகேயுள்ள தாராசுரத்தில் இராசராசேச்சுரம் (இராசராச ஈசுவரம்) என்ற கோயிலைக் கட்டினான். தாராசுரம், இராசராசேச்சுரம் என்பதன் திரிபு. தாராசுரம்கோயில் இப்பொழுது ஐராவதேசுவரர் என்ற பெயரில் திரிந்து வழங்குகிறது தாராசுரம் ஐராவதேசுவரர் கோயிலின் விமானமும் உயரமானது. இக்கோயிலின் தூண்கள் நுணுக்கமாகச்

செதுக்கப்பட்ட சிற்ப வேலைப்பாடுகளுடன் இருக்கின்றன. கருவறையின் புறச்சுவர்களில் சுந்தரரின் திருத்தொண்டத்தொகை கூறும் நாயன்மார்களின் உருவங்களும் அவர்களின் வரலாற்று நிகழ்ச்சிகளும் சிறிய, அழகிய படைப்புச் சிற்பங்களில் வடிக்கப் பெற்றுள்ளன. இரண்டாம் இராசராசன் திருப்பனந்தாள் கோயிலைச் செம்மையாக்கினான். இவன் ஆட்சிக் காலமும் தமிழ் இலக்கியத்திற்குச் சிறப்பான காலமாகும். இவனுக்கு "முத்தமிழுக்குத் தலைவன்" என்ற சிறப்புப் பெயரும் உண்டு. இவன் ஆட்சிக் காலத்திலும் ஒட்டக்கூத்தர் அரசுக் கவிஞராக விளங்கி இவன பேரிலும் உலா(இராசராசன் உலா) இயற்றியுள்ளார். ஒட்டகூத்தர் சிவபெருமான்மேல் 'தக்கயாகப்பரணி' பாடியுள்ளார்.

இரண்டாம் இராசராசன் மகன் மூன்றாம் குலோத்துங்கன், சோழர்களின் இறுதிக்காலத்தில் பேரரசனாகத் திகழ்ந்து "திரிபுவன வீரதேவன்" என்று புகழ் பெற்றான். இவன் ஆட்சிக்காலத்திலும் பல கோயில்கள் கட்டப்பட்டன. அவைகளில் மிகவும் சிறப்பானது திருபுவனத்தில் உள்ள வீரேசுவரர் (வைரவதேவர்) கோயில். இக் கோயில் தஞ்சைப் பெரியகோயிலின் அமைப்புப் போன்றது. தஞ்சைப் பெரியகோயில், கங்கைகொண்ட சோழீச்சுவரர் கோயில், தராசுரம் ஐராவதீசுவரர் கோயில், திருபுவனவீரேசுவரர் கோயில், ஆகிய நான்கு கோயில்களும் உயர்ந்த விமானம் கொண்டவை. முதல் இரண்டும் தந்தையும் மகனும் (முதலாம் இராசராசன் அவன் மகன் முதலாம் இராசேந்திரன்) கட்டியவை, பின்னவை இரண்டும் கூடத் தந்தையும் மகனும் கட்டியவையே (இரண்டாம் இராசராசன், அவன் மகன் மூன்றாம் குலோத்துங்கன்).

குலோத்துங்க மன்னர்கள் காலத்தில் திருவாரூர்த் தியாகராசர் கோயில், திருவரங்கத்துத் திருஅரங்கனாதர் கோயில், திருவானைக்கா ஜம்புகேசுவுரர் கோயில், சிதம்பரம் ஆடவல்லான் (நடராசர்) கோயில் ஆகியவை விரிவாக்கப்பட்டன.

சோழர்களும் பாண்டியர்களும் வலுஇழந்து ஒடுங்கியதற்குப் பின், அதாவது கி.பி. 14, 15-ஆம் நூற்றாண்டுகளில், தமிழகத்தில் ஆட்சியைப் பரப்பிய விசய நகர மன்னர்கள், தமிழகக் கோயில்களை மேலும் விரிவுபடுத்தினர். கோயில்களில் திருச்சுற்றுக்களை அதிகப்படுத்தியும், கோயிலுக்குள் துணைக்கோயில்களை அமைத்தும்,பெரிய குளங்களை (தீர்த்தங்கள்)கட்டியும், வெளிச்சுற்று மதில்கள் நான்கிலும் உயர்ந்த கோபுரங்களைக் கட்டியும் விரிவுபடுத்தினர். திருச்சுற்றுக்களில் நூற்றுக்கால் ஆயிரக்கால் மண்டபங்களையும் கட்டினர். இவர்கள் காலத்தில் கோயில்களில் அம்மனுக்குத் தனியாகத் துணைக் கோயில்கள் ஏற்பட்டன கோபுரங்களில்

சுதை உருவங்களை அதிக எண்ணிக்கையில் உருவாக்கினர். மண்டபங்களிலும் தூண்களிலும் அதிகச் சிற்பவேலைப்பாடுகளைச் செய்தனர். கல் சங்கிலி போன்ற நயமான வடிவங்களையும், மன்மதன் இரதி, வேடன், வேடச்சி ஆகியவர்களின் அழகு உருவச் சிற்பங்களையும் அமைத்து ஆலய கட்டடிக் கலைக்கு மெருகு சேர்த்தனர். தூண்களில் குதிரை உருவச் சிற்பத்தைச் செதுக்கினர். இத்தகைய குதிரைச் சிற்பங்களில் சிலவற்றின் மேல் அமர்ந்த நிலையில் வீரர்களின் சிற்பங்கள் உள்ளன. தமிழக ஆலயக் கட்டிடக் கலையைப்போற்றிப் பாதுகாத்த விசயநகர மன்னர்களில் சிறப்பிடம் பெறுபவர் கிருஷ்ணதேவராயராகும். இவருக்கு ஆழ்வார்கள் பாசுரங்களில் பற்றுஇருந்தது. இவர் ஆண்டாளைப் பற்றித் தெலுங்கில் 'ஆமுக்தமால்யதாணு' என்ற பாராட்டு நூலை எழுதியுள்ளாராம். இவர் காலத்தில் தமிழகத்தில் ஆரியரின் வைணவ நெறி ஊக்கம் பெற்றது. விசயநகர மன்னர்களால் கட்டப்பட்ட கோயில்களில் வேலூர் (Vellore), விரிஞ்சபுரம் ஆகிய ஊர்களில் உள்ள கோயில்களும், பெரிய கோபுரங்களுடன் விசிவுபடுத்தப்பட்ட கோயில்களில் மதுரை, திருவரங்கம், சிதம்பரம், காஞ்சிபுரம், திருவண்ணாமலை ஆகிய ஊர்களில் உள்ள கோயில்களும் அடங்கும்.

இதே காலத்தில் பாண்டிய நாட்டின் தென்பகுதியில் பாண்டியர்களும் கற்கோயிலைக் கட்டினர். இவைகளில் அரிகேசரி பராக்கிரம பாண்டியன் (கி பி. 1411 —கி.பி. 1463) தென்காசியில் கட்டிய காசி விசுவநாதப் பெருமான் ஆலயம் குறிப்பிடத்தக்கது. இக்கோயிலின் உள்மண்டபத் தூண்கள் சிற்பக்கலை நயமுடையன. அத்தூண்களில் இரதி, மன்மதன் முதலிய அழகிய சிற்ப உருவங்கள் செதுக்கப்பட்டுளன. இறைவனுக்குக் கலைமிளிரும் கோயில்கள் கட்டுவதிலும் கட்டிய கோயில்களைப் பாதுகாப்பதிலும் பண்டைய காலத்துத் தமிழ் மன்னர்கள் காட்டிய பக்தி சிரத்தையை, இப்பராக்கிரம பாண்டியனின் கீழ்க்காணும் பாடல்களிலிருந்து நன்கு அறியலாம்.

''மனத்தால் வகுக்கவும் எட்டாத கோயில் வகுக்க முன்னின்று
எனைத்தான் பணிக்கொண்ட நாதன் தென்காசியை என்றும் மண்மேல்
நினைத்தாதரஞ் செய்து தங்காவல் பூண்ட நிருபர் பதந்
தன்னந்தாழ்ந் திறைஞ்சித் தலைமீதில் யானும் தரித்தனனே''

''ஆராயினும் இந்தத் தென்காசி மேவும் பொன் ஆலயத்து
வாராததோர் குற்றம் வந்தால் அப்போது அங்கு வந்ததனை
நேராக வேஒழித் துப்புரப் பார்களை நீதியுடன்
பாரார் அறியப் பணிந்தேன் பராக்கிரம பாண்டியனே''

இவ்வாறான செய்யுட்கள் தென்காசிக் கோயிலில் பொறிக்கப் பட்டிருக்கின்றன,

விசயநகர மன்னர்களின் நேரடி ஆட்சிக்குப் பின், கி.பி. 16 ஆம் நூற்றாண்டில் அவர்களின் பிரதிநிதிகளாக மதுரை, தஞ்சாவூர் வேலூர் ஆகிய இடங்களிலிருந்து ஆட்சி செய்த நாயக்க மன்னர் கள், விசயநகர மன்னர்கள் ஆற்றிய கோயில் பணியைப் பின்பற்றி அதிக சுதை உருவங்கள் கொண்ட உயர்ந்த கோபுரங்களை எழுப்பி யும் சிற்பக் கலை நலத்துடன் புது மண்டபங்களையும் உட்சுற்றுக் களையும் (corridors) கட்டியும், தமிழகத்துக் கோயில்கள் பல வற்றை மேலும் விரிவும் அழகும் படுத்தினர். இவர்கள், குதிரை மீதும், யாளி மீதும் அமர்ந்து ஓட்டும் வீரர்களின் சிற்பங்களை உயிர்த்தன்மையுடன் சிறப்பாக உருவாக்கினர். தூண்களில், காம இன்பத்தைக் குறிக்கும் சிற்பங்களும் உள்ளன. திருநெல்வேலிக்கு அருகே உள்ள கிருஷ்ணாபுரத்துக் கோயிலில் உள்ள சிற்பங்கள், பெரும்புகழ் பெற்றவையாகும். இத்தகைய வளர்ச்சியைப் பெற்ற கோயிலகள் கும்பகோணம் இராமசாமி கோயில், இராமேஸ்வரம் கோயில் ,மதுரை மீனாட்சி யம்மன் கோயில் முதலியனவாகும்.

நாயக்கர் ஆட்சிக்குப் பின்னர் ஏற்பட்ட ஆட்சிகளில், தமிழகக் கோயில் கட்டிடக் கலைத் தன்மையில் மாற்றமோ வேறுவித வளர்ச் சியோ இல்லை. தமிழகத்துத் திராவிடக் கோயில்கட்டிட அமைப்பு முறை, நாயக்கர் காலத்தோடு முற்றுப் பெற்ற நிலை அடைந்ததாகக் கூறலாம்.

தமிழகத்தின் ஆயிரக்கணக்கான கோயில்களில், நாயன்மார்க ளும் ஆழ்வார்களும் வழிபட்டுப் பக்திப் பெருக்குடன் அருளிய தோத்திரப் பாடல்கள்பெற்ற திருக்கோயில்கள்,பாடல்பெற்ற தலங் கள் என வழங்கப்படுகின்றன இத்தலங்கள் நூற்றாண்டுகளாக வளர்ந்து மேலும் மேலும் புனிதமும் புகழும் அடைந்து வருகின்றன. தமிழர்கள் இத்தலங்களில் சீரும் சிறப்புடன் பூசனை செய்து, திரு விழாக்கள் கொண்டாடித் தங்கள் சமய உணர்வையும் இறைபக்தி யையும் தொடர்ந்து காத்து வருகின்றனர்.பாடல்பெற்ற தலங்களில் சில, தொன்மைச் சிறப்பாலும், வரலாற்றுச் சிறப்பாலும், சமயச் சிறப்பாலும் பெரும் புகழுடன் திகழ்கின்றன. இவைகளில் திருவாரூர்த் தியாகராசர் கோயில், தில்லை (சிதம்பரம்) நடராசர் (ஆடவல்லான், சபா நாயகர்)கோயில், திருவரங்கத்து அரங்கநாதர் (அரங்கராசர்) கோயில் ஆகிவை மிக்க சிறப்புடைய கோயில்களா கும். இம்மூன்று கோயில்களும் தமிழகத்துப் பண்டைய அரசுப்

பரம்பரையினர்களால் போற்றி வளர்க்கப்பட்டவையாகும். திருவாரூர், சிதம்பரம் கோயில்கள் சைவ சமயகுரவர்கள் நால்வராலும் பாடப்பெற்றவை. வைணவத் திருப்பதிகள் (திவ்ய தேசங்கள்) 108-ல் மிகவும் சிறப்பான திருவரங்கத்துக் கோயில். பன்னிரு ஆழ்வார்களுள் மதுரகவியாழ்வார் நீங்கலாக மற்ற அனைவராலும் மங்களாசாசனம் செய்யப்பெற்ற பெருமையுடையதாகும்.

தோன்றிய காலத்தைக் கூற இயலாதவாறு திருவாரூர்க் கோயில் மிக்க பழமையானதெனத் திருநாவுக்கரசர் பாடிப் போற்றி யுள்ளார்

திருநாவுக்கரசர் :

''மான் மறிக்கை ஏந்தி ஓர் மாதோர் பாகம்
திருவினாள் சேர்வதற்கு முன்னோ பின்னோ''

''சிலையால் முப்புர மெரித்த முன்னோ பின்னோ''

''ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ''

'கோலமே நீ கொள்வதற்கு முன்னோ பின்னோ
அணியாரூர் கோயிலாக் கொண்ட நாளே''

''மாடமொடு மாளிகைகள் மல்கு தில்லை
மணி திகழும் அம்பலத்தே மன்னிக் கூத்தை
ஆடுவான் புகுவதற்கு முன்னோ பின்னோ
அணியாரூர் கோயிலாக் கொண்ட நாளே''

சேக்கிழார்,

"சொன்ன நாட்டிடைத் தொன்மையில் மிக்கது
மன்னு மாமலராள் வழிபட்டது
வன்னியாறு மதிபொதி செஞ்சடைச்
சென்னியார் திருவாரூத் திருநகர்'' எனப் போற்றியுள்ளார்.

திருவாரூரில் தியாகராசர், தில்லையில் நடராசர், திருவரங்கத்தில் அரங்கராசர் என அழகுறக் குறிப்பிடும் வழக்கம் தமிழகத்தில் உள்ளது.

பிற்காலச் சோழர் மன்னர்கள், திருவாரூர்க் கோயிலிலும், சிதம்பரம் கோயிலிலும் மிக்க ஈடுபாடு கொண்டிருந்தனர். அவர்களின் முடிசூட்டு விழா, இவ்விரண்டு கோயில்களிலும் நடைபெற்

றுள்ளதாகக் கூறப்படுகிறது. இவ்விரு கோயில்களின் வளர்ச்சியில் பாண்டிய, விசய நகர மன்னர்களுக்கும் பங்கு உண்டு.

'கோயில்' என்றால், சைவர்களுக்குச் சிதம்பரம் நடராசர் கோயிலாகும்; வைணவர்களுக்குத் திருவரங்கத்து அரங்கநாதர் கோயிலாகும். தில்லையில் சிவன், சைவ சித்தாந்தத் தத்துவச் சின்னமாக ஆடவல்லான் வடிவில் உள்ளான். இக்கோயிலில்தான் சேக்கிழார் பெரியபுராணம் அரங்கேறியது. திருவரங்கத்துக் கோயிலில் கம்பராமாயணம் அரங்கேறியது.

தில்லைச் சிற்றம்பலத்து ஆடவல்லான் (நடராசர், சபாநாயகர்) கோயில், இன்றைய நிலையில் இருப்பதற்குக் காரணமானவர்கள் பல்லவ, பாண்டிய, சோழ, விசயநகர மன்னர்கள் என்பது ஆதாரபூர்வமான வரலாற்றுச் செய்தி. ஆயினும், இத்திருக்கோயில், அங்குப்பூசனை செய்கின்ற தீட்சதர்களின் சொந்தக் கோயில் என்ற கருத்தினைச் சிலர் கொண்டிருக்கிறார்கள். பண்டைய மன்னர்களால் உருவாக்கப்பட்டு, கோயிலின் பராமரிப்பிற்காகப் பல்வேறு அறக்கட்டளைகளும் நிறுவப்பெற்று, பொது மக்களால் பல நூற்றாண்டுகளாக வழிபடப்பெற்று வருகிற கோயில் எங்ஙனம் தனிப்பட்ட பிரிவினருக்குச் சொந்தமாகும் என்பதைக் கூட ஆராய்ந்து பார்க்காத நிலை வியப்புக்குரியதாகும். திருமுறைகளில் தீட்சதர்கள் குறிப்பிடப்படவில்லை. சிதம்பரம் நடராசர் கோயில் 'ஒரு பொதுக்கோயில்; தீட்சதர்களின் சொத்து அல்ல' என்று நீதிமன்றங்கள் தெளிவான தீர்ப்புக்கள் வழங்கியுள்ளன. 108/1888, 159/1888 எண் கொண்டுள்ள மேல்முறையீட்டு மனுக்களை விசாரணை செய்த சென்னை உயர்நீதிமன்ற நீதிபதிகள் ஷெப்பர்டு, முத்துசாமி ஐயர் ஆகிய இருவரும், 'சிதம்பரம் நடராசர் கோயில் பன்னெடுங் காலமாக ஒரு பொதுக்கோயிலாக இருந்து வருகிறது என்பதை மறுக்கமுடியாது; இக்கோயில் தீட்சதர்களின் தனிப்பட்ட சொத்து என்பதற்கு ஆதாரமே கிடையாது'' என்று 17—8—1890-இல் தீர்ப்புக் கூறியுள்ளார்கள். இத்தீர்ப்பின் அடிப்படையில் பிற்காலத்திலும், நீதிமன்றங்கள் தீர்ப்புக்கள் வழங்கியுள்ளன. இக்கோயில் தங்கள் சொந்தக்கோயில் என்று தீட்சதர்கள் மீண்டும் எழுப்பிய வாதத்தை நிராகரித்து, தென்னாற்காடு மாவட்ட நீதிபதி சி. என். குப்புசாமி ஐயர், ஒ. எஸ். 16/1933-ல் 9—9-1936-ஆம் நாள் தீர்ப்புக் கூறியுள்ளார். இத்தீர்ப்பை எதிர்த்துத் தீட்சதர்கள் சென்னை உயர்நீதிமன்றத்தில் தொடர்ந்த மேல்முறையிடு ஏ.எஸ். 306/1936 யை 3—4—1939-ல் தள்ளுபடி செய்த நீதிபதிகள் வெங்கடரமணராவும், நியூசாமும், ''இக்கோயில் தீட்சதர்களின் சொந்தக்கோயில் அல்ல என்பதிலும், அது அரசுச்

சட்டத்தின் கீழ் வருகின்ற ஒரு பொதுக்கோயில் என்பதிலும் எவ்வித ஐயமுமில்லை' என்று தீர்ப்புக் கூறியுள்ளார்கள். இந்த முடிவை, சென்னை உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி சர். ஆல்பிரட் ஹென்றிலயோனல் லீச்சும் நீதிபதி கிருஷ்ணசாமி ஐயங்காரும் சி. எம். பி. எண். 3247/1939-ல் 23—1—1940-ஆம் நாள் உறுதி செய்துள்ளனர். இவ்வாறு, சிதம்பரம் நடராசர் கோயில், தீட்சதர்களின் சொந்தக்கோயில் அல்ல என்பதும் அது அரசுச் சட்டத்தின் கீழ் வருகின்ற பொதுக் கோயில்தான் என்பதும் நீதிமன்றங்களின் தெளிவான தீர்ப்புக்களாலும் உறுதி செய்யப்பட்ட வரலாற்று உண்மையாகும். இக்கோயில், பொதுக் கோயில் என்ற திட்டவட்டமான முடிவினால்தான், பல்லாண்டு காலமாக அரசுச் சட்டத்தின் கீழ்த் தொடர்ந்திருந்து வருகிறது. ஆக, சிதம்பரம் கோயில் தீட்சதர்களுக்குச் சொந்தமானது என்று எண்ணுவது தவறு; உண்மைக்குப் புறம்பானது; இருந்தும் அவ்வாறு எண்ணினால் அது அவ்வாறு எண்ணங்கொள்பவர்களின் குறையாகும். தமிழக அரசும் இந்து சமய அறநிலையத்துறையும் மற்றும் அரசின்கீழ் உள்ள சில பெரிய கோயில்களும் அளித்த பல லட்ச ரூபாய் நிதியைக் கொண்டு, இக்கோயிலில் பெரிய அளவில் திருப்பணி கடந்த சில ஆண்டுகளில் நிறைவேற்றப்பட்டுச் சிறப்பாகக் குடமுழுக்கு நடைபெற்றதையும் நாடு அறியும்.

வைணவர்களுக்குக் கோயிலான திருவரங்கத்து அரங்கநாதர் கோயிலிலும் அண்மையில், வரலாற்றுச் சிறப்புமிக்க திருப்பணி, தமிழக அரசின் ஆணையின்கீழ் நிறைவேறியுள்ளது. இக்கோயிலின் இராசகோபுரத்திற்காக கி. பி. 16-ஆம் நூற்றாண்டில் விசயநகர மன்னர் அச்சுதராயர் இக்கோயிலின் தெற்கு வெளிமதிற் சுவரில் இராசகோபுரம் கட்டும் பணியைத் தொடங்கினார். ஆனால், விசயநகர ஆட்சிக்கு ஏற்பட்ட அரசியல் நெருக்கடிகள் காரணமாக, இப்பணி முடிவடையாமல் கல்காரம் (அடிப்பீடம்) கட்டப்பட்டதோடு நின்றுவிட்டது. இது 'ராயர் மொட்டைக் கோபுரம்' என்ற பெயரோடு நான்கு நூற்றாண்டுகளாக மொட்டையாகவே இருந்து வந்தது. இதன் கல்காரத்தின் உயரம் 46 அடி. இக்கல்காரத்தின் மேல் 13 நிலைகளோடு 180 அடி உயரத்திற்குக் கோபுரம் கட்டும் பணியை, அகோபில மடத்தின் 44-வது ஜீயர் சுவாமிகள் ஸ்ரீமத் அழகிய சிங்கர் அவர்கள், தமிழக அரசின் அனுமதியுடன் மேற்கொண்டு, பணியினை 1979-ல் தொடங்கி 1987-ல் நிறைவு செய்தார்கள். இந்த இராசகோபுரத்தின் முழு உயரம் 236 அடி (10 அடி உயரச் செப்புக் கலசத்தோடு). 46 அடி உயரக் கல்காரத்திற்கு மேல் 180 அடி உயரக் கோபுரத்தை 13 செப்புக் கலசங்களுடன் கட்டி முடிப்பதற்கு ஆன செலவு ரூபாய் 1½ கோடி. இதில் மாநில

அரசுகளின் பங்கு ரூ.25 இலட்சம். இந்த இராசகோபுரத்தின் குட முழுக்கு விழா 25—3—1987-ஆம் நாள் சிறப்பாக நடைபெற்றது. இந்தியாவிலேயே மிகவும் உயரமான விமானம், தஞ்சாவூர்ப் பெரிய கோயிலின் விமானம்; மிகவும் உயரமான கோபுரம் திருவரங்கத்துக் கோயில் இராசகோபுரம். தமிழர்கள் தங்கள் பண்டையக்கோயில் கட்டிடக் கலையைக் கைவிடாது, தொடர்ந்து பாதுகாத்து வரு கின்றனர் என்பதற்கு இத்தகைய திருப்பணிகள் எல்லாம் சான் றாகும்.

இவ்வாறு, தமிழகக் கோயில் கட்டிடக்கலை மரபு 1500 ஆண்டு களுக்கு மேலாகத் தொடர்ந்து உயிரோட்டத்துடன் விளங்கி வரு வது தமிழகக் கோயில் கட்டிடக்கலையின் தனிச்சிறப்பாகும். இச் சிறப்பு, தமிழகத்திற்கும் தமிழர்களுக்கும் தனிப்பெருமை அளித்து வருகிறது என்பதை உணர்ந்து மகிழலாம்.

———: o :———

# தமிழர் வேதம்,
# தமிழகத்து சைவ சித்தாந்தம்

தமிழர்கள், ஆதிகாலமாகச் சைவ சித்தாந்த சமயக் கொள்கையைக் கடைப்பிடித்து, முழுமுதற்பொருளுக்கு, மெய்ப்பொருளுக்கு, பரம்பொருளுக்கு 'சிவன்', 'சிவம்' என்று பெயரிட்டு அச்சிவ பொருளை வணங்கி வருபவர்கள். தமிழர்களின் சைவ சித்தாந்தத் தத்துவம், தமிழ்ச் சமூகத்தில் ஆதியிலிருந்த தமிழ் வேதத்தின் அடிப் படையிலானது.

'பாலொளி யாகிப் பரந்தெங்கு நின்றது
மேலொளி யாகிய மெய்ப்பொருள் காணுமே'

என்பது திருமந்திரம் (675).

கிடைத்துள்ள சங்கநூல்களில் 'சிவன்' அல்லது 'சிவம்' என்னும் பெயர் வரவில்லை என்றாலும், இந்நூல்களில் 'சிவன்' பல்வேறு சிறப்புச் சொற்களால் குறிப்பிடப்படுவதையும் போற்றப் படுவதையும் காண்கிறோம். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல் களில் உள்ள சிவனைக் குறிக்கும் பெயர்களாவன :

முதுமுதல்வன், இறைவன்
தொல்முது கடவுள்
இமையவன்
முக்கட்செல்வர், முக்கணான், முக்கண்ணான்
நெட்டிருங் கூந்தற் கடவுளர்
தாழ்சடை பொலிந்த அருந்தவத்தோன்
பிறங்கு நீர்ச்சடைக் கரந்தான்
ஈர்ஞ்சடை அந்தணன்
திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள்
கறை மிடற்று அண்ணல்
நீலமேனி மிடற்று அண்ணல்
மறு மிடற்று அண்ணல்
நீல மேனி வாலிழை பாகத்து ஒருவன்
மாதொரு பாதியன்
மழுவாள் நெடியோன்
ஆலமர் கடவுள்
ஆலமர் செல்வன்
மழைதலை வைத்தவர்

அரும்பெறல் ஆதிரையான்
பைங்கட் பார்ப்பான்
ஏற்று ஊர்தியான்
புங்கம் ஊர்பவன்
புதுத்திங்கட் கண்ணியான்
காலக் கடவுள்
கணிச்சியோன்

ஆக, சங்க நூல்களில், சிவனுடைய உருவ அமைப்பையும், இயல்பையும், தன்மையையும் குறிக்கும் வகையில் விளக்கங்கள் உள்ளன. மேலும், சிவனோடு தொடர்புபடுத்தப்பட்டு வருகிற சில நிகழ்ச்சிகளும் கூறப்படுகின்றன.

கலித்தொகை :

'இமைய வில் வாங்கிய ஈர்ஞ் சடை அந்தணன்
உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக,
ஐ-இரு தலையின் அரக்கர் கோமான்
தொடிப் பொலி தடக் கையின் கீழ் புகுத்து, அம்மலை
எடுக்கல் செல்லாது உழப்பவன் போல' 38

மலைபடுகடாம் :

'நீர் அகம் பனிக்கும் அஞ்சு வரு கடுந்திறல்
பேர் இசை நவிரம் மேஎ யுறையும்,
காரி உண்டிக் கடவுள தியற்கையும்' வரி 81—83

புறநானூறு :

"எல்லா உயிர்க்கும் எமம் ஆகிய
நீர் அறவு அறியாக் கரகத்து
தாழ்சடைப் பொலிந்த அருந்தவத்தோற்கே"
(கடவுள் வாழ்த்து)

"பெண்ணுரு ஒரு திறன் ஆகின்று அவ்வுருத்
தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்" (கடவுள் வாழ்த்து)

மதுரைக்காஞ்சி, சிவபெருமானுக்கு முதன்மை தந்து அவனே ஐந்து பூதங்களையும் தோற்றியவன் என்று கூறுகிறது. சங்கப் பாடல்களில் உள்ள சிவனைக் குறிக்கும் பெயர்களில் பல, திருமுறைகளில் வருகின்றன,

இவைகளிலிருந்து, தமிழகத்தில் சங்க காலத்திலேயே சிவநெறி சிறப்புற்றிருந்ததை அறியலாம்.

'பிறவா யாக்கைப் பெரியோன்," 'இறைவன்'' 'இறையோன்' எனச் சிலப்பதிகாரமும், ''நுதல் விழி நாட்டத்து இறையோன் முதலா'' என மணிமேகலையும் சிவனைச் சிறப்பாகப் போற்றுவதைக் காண்கிறோம்.

'சிவன்', 'சிவம்' என்னும் தமிழ்ச்சொல், செம்மை என்னும் சொல்லின் அடியாகப் பிறந்தது என்றும், 'சிவன்' சிவப்பு நிறத்தைக் குறிக்கும் சொல் என்றும் விளக்கப்படுகிறது நம் அருளாளர்கள் சிவன் மேனியை கீழுள்ளவாறு வர்ணித்துள்ளார்கள்.

திருமூலர் :

திருமந்திரம் 3034—'செம்பொனே யொக்கு மேனி'
" 2584—'பொன்வளர் மேனி'
" 1628—'பசும்பொன் நிறத்தன்'
" 395—'வேகின்ற செம்பொனின் மேலணி மேனியன்'
" 2695—'ஒளி பவளத் திருமேனி வெண்ணீற்றன், அளிபவளச் செம்பொன் ஆதிப்பிரான்'
" 46—'அந்திவண்ணா'

சம்பந்தர் :

'உருவழியச் சிவந்தான்'
'பொன்னினார்'
'பொன்னேர் திருமேனியன்'
'பொன்னி னுருவந்தமேன'
'பவள மேனியர்'
'உருவளர் பவளமேனி'
'தழல்சேர் தரு திருமேனியர்'

அப்பர் :

'சிவந்த மேனி'
'செம்மேனியான்'

'செம்மேனி வெண்ணீற்றானை'

'பொன்னிறத்தினானை'

'செம்பவளத் திருமேனிச் சிவன்'

'செம்பவளத் திருவுருவர்'

'நெருப்புருவு திருமேனி'

'பவளமேனியர்', ''பவளம் போல் மேனியில்'

சுந்தரர்

'பொன்னார் மேனியனே'

'பொன்னானை'

'செம்பொனை'

'செம்பொன் மேனி'

'செம்பவளத் திருவுருவன்'

மாணிக்கவாசகர்

'வேதமொழியர் வெண்ணீற்றர் செம்மேனியர்'

'ஆரூரன் செம்பெருமான்'

மங்கலத் தன்மையை, நன்மையை 'சிவம்' என்று சொல்வதுண்டு என்றும் தமிழறிஞர்கள் கூறுகின்றனர். நம் முன்னோர்கள் செம்மையாக, செம்பொருளாகக் கண்டது சிவபரம்பொருள், கடவுள் இலக்கணத்திற்குரிய எல்லாப் பண்பு நலங்களையும் உள்ளடக்கி ஒரே சொல்லால் குறிப்பிடுவதற்குத் தமிழர் வழங்கிய சிறந்த இனிய சொல்லே 'சிவன்'. அச்சொல்லில் அடங்கி நிற்கும் பொருள்நலங்களின் உயர்வை எல்லாம் கருதியே,

''சிவன் எனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனி எம்மான்'' எனவும்,

''சிவன் எனும் ஓசையல்லது அறையோ உலகில்
திரு நின்ற செம்மை யுளதே''

எனவும் நாவுக்கரசர் போற்றுகிறார்.

'சைவம்' என்ற சொல் சிவசம்பந்தம் உடையது எனப்பொருள் படும். ''சைவம் சிவனுடன் சம்பந்தமாவது'' என்பது திருமூலர் வாக்கு (திருமந்திரம் 1512). அதனால் சிவனோடு தொடர்புடைய சமயம், சைவ சமயம், சிவநெறி என வழங்கலாயிற்று. திருமூலர் திருமந்திரத்தின் பாயிரத்தில், கடவுள் வாழ்த்துப் பாடல்களாக ஐம்பது உள்ளன இப்பாடல்களில் சிவன் பெருமை கூறப்பட்டுச் சிவன் வாழ்த்தப்படுகிறார். இருபத்து நான்காவது பாடலில், ''சிவனடிக்கே செல்வம் ஆற்றியது'' என, 'சிவன்' என்ற பெயரே வருகிறது. இன்னும் சில திருமந்திரங்களிலும் 'சிவன்' எனும் பெயர் வருகிறது.

தமிழினத்தின் சைவ சமய நெறியில் அதாவது சிவநெறியில் சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டுள்ள தமிழர் 'சைவர்' என் றழைக்கப்படுகிறார்.

**திருமந்திரம் :**

2410—'நாடிய சைவர்க்கு நந்தி யளித்ததே'

1440—'சுத்தச் சிவமாவரே சுத்த சைவரே'

'சுத்த சைவப்பத்தன்'

**சம்பந்தர் :**

'சைவர் பாசுபதர்கள் வணங்கும்'

**அப்பர் :**

'சைவர் பாசுபதர் கபாலிகள்'

நம் அருளாளர்கள், சிவனையே 'சைவன்' என்ற பெயரிலே குறிப்பிடுகிறார்கள்.

**சம்பந்தர் :**

'திருவுருச் சைவனே'

'தண்மதி சூடிய சைவர்'

'கொன்றை தம்முடி வைத்த சைவனார்'

அப்பர் :

'மான்மறி மழுவொன்றேந்தும் சைவனே'

சுந்தரர் :

'தன்னிழுவிற் றருசைவர்'

மாணிக்கவாசகர் :

'சைவா போற்றி தலைவா போற்றி'

'ஐயா றதனிற் சைவனாகியும்'

சேக்கிழார் :

'அருமறை நாவல் ஆதி சைவன் ஆரூரன்'
சைவனான சிவனை வழிபடும் சமயம் 'சைவம்' எனவும், வழி படுபவர் 'சைவர்' எனவும் எடுத்துக்கொள்ளலாம்.

திருமூலர், சிவனை, 'நந்தி', 'ஈசன்' என்ற பெயர்களாலும் குறிப்பிடுகிறார்.

திருமந்திரம் 1567—'சைவ சமயத் தனிநாயகன் நந்தி'
பின்வந்த அருளாளர்களும் சிவனை, 'நந்தி' என்றழைத்திருக் கிறார்கள்.

சம்பந்தர் :

'வினை தீர்க்கும் நந்தி'

'ஆறு சூடிய நந்தியை'

அப்பர் :

'வெள்ள முள்ள விரிசடை நந்தியை'

'பேர் நந்தி யென்னும் பெயரார்'

தொல்காப்பிய "மாயோன் மேய........" எனும் சூத்திரத்தின் "வேந்தன் மேய தீம்புனல் உலகமும்" என்ற தொடரிலுள்ள "வேந்தன்", சிவனைக் குறிப்பதாகக் கொள்ளலாம். இதற்கு ஆதாரமாக உள்ளவையாவன :

திருமந்திரம் :

84—'சாந்து கமழுங் கவரியின் கந்தம் போல்
வேந்தன் அமரர்க்கருளிய மெய்ந்நெறி'

2272—'விஞ்சையர் வேந்தனும் மெல்லியலாளொடு'

1503—'விதிவழியே சென்று வேந்தனை நாடு'

சம்பந்தர் :

'சுடலை மாமலை வேந்தன்'

'…………………வலஞ்சுழி மா நகரே
புல்கிய வேந்தனைப் புல்கியேத்தி'

'வீரட்டானத்துறை வேந்தனை'

'வேந்தாகி விண்ணவர்க்கு மண்ணவர்க்கு
நெறிகாட்டும் விகிர்தனாகி'

'வேந்தனருளாலே விரித்த பாடலிவை'

'தணிகிளர் வேந்தர் புகுதுங்கூடல்'

அப்பர் :

'விண்ணினார் மதி சூடிய வேந்தனை'

'வெள்ள நீர் விதியாற் சூடும் வேந்தனே'

'…………………வீழ்விக்கும் வேந்தன் மேய
சோற்றுத்துறை'

'வெஞ்சுடரோன் பல்லிறுத்த வேந்தே போற்றி'

சுந்தரர் :

'பாரூர்பல புடைசூழ்வள வயனாவலர் வேந்தன்'

'….. .. ………என்னை ஆட்கொண்ட
வேந்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே'

'வேந்தராயுல காண்டறம் புரிந்து'

மாணிக்கவாசர் :

'வேகம் கெடுத்தாண்ட வேந்தன் அடிவெல்க'

'வேந்தனாய் வெளியே என்முன் நின்றதோர்'

இப்பாடல்களில், சிவன் 'வேந்தன்' என்ற பெயரால் குறிப்பிடப் படுகிறான் அல்லவா. சிவனை 'அரசே' என்றும் அழைப்பதையும் காண்கிறோம்.

அப்பர் :

'ஆருரெம் அரசே என்றும்'

'பழனத்தரசே'

'தேவர்க் கரசே போற்றி'

சுந்தரர் :

'தேவர்தம் மரசே'

மாணிக்கவாசகர் :

'ஆமா மேயருள அரசே போற்றி'

'ஆருரமந்த அரசே போற்றி'

'பொன்னமபலத்தரைசே'

'அரைசனே அன்பர்க் கடியேனே னுடைய அப்பனே''

வள்ளலார் :

'அம்பலத்தரசே அருமருந்தே'

'அன்பெனும் குடில்புகும் அரசே;

சம்பந்தர் :

மாறுகொண்டார் புரமெரித்த மன்னவனே'

சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் நம் தமிழ கத்தின் சைவ சமயம் தனி ஒருவரால் தோற்றுவிக்கப் பட்டதல்ல. தமிழர்களின் நுண்ணிய அறிவிலே மலர்ந்த சிவ நெறி, சிவ வழி பாட்டு நெறி, அவர்களின் பண்பட்ட வாழ்க்கை முறையோடு ஒன்று

பட்டு, தத்துவக் கொள்கையுடன் சைவ சமயமாக உருப்பெற்றுள்ளது. இவ்வாறு, பண்டைய காலத்தே உருவாகி வளர்ந்துள்ள தமிழரின் சைவசமயக் கொள்கை, சமயக்கோட்பாடு அல்லது சமயத் தத்துவம், 'சைவ சித்தாந்தம்' என்ற பெயரில் பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே வழங்கலாயிற்று. அதாவது, சிவனை வழிபடும் நெறியாகிய சைவ சமயத்தின், முடிந்த முடிவாக விளங்கும் தத்துவக் கொள்கையே 'சைவ சித்தாந்தம்' என்ற பெயரால் சிறப்பித்துரைக்கப்படுகிறது. இதனைச் 'சித்தாந்த சைவம்' எனவும், 'வேதாந்த சித்தாந்தம்' எனவும், 'சித்தாந்த வேதாந்தம்' எனவும் நம் முன்னோர்கள் குறிபிப்ட்டார்கள். 'சித்தாந்தம்' என்னும் சொல், சிந்தனையில், சித்தியில் அதாவது அறிவில், பெற்ற முடிவு என்று பொருளாகிறது. 'சித்தாந்தம்' என்றால் அறிவு பூரணமான அல்லது அறிவு நிறைவான, ''முடிவின் முடிவு'' அல்லது கொள்கை, உணர்வு என்று அறிஞர்கள் விளக்குகிறார்கள். மேலே குறிப்பிட்டுள்ள சொற்களையும், சைவ சித்தாந்தத் தத்துவத்தையும் (கோட்பாடு, கருத்து) முதன்முதலில் கூறியவர் திருமூலர் என நமக்குக் கிடைத்துள்ள நூல்களிலிருந்து அறிகிறோம். திருமூலர், சைவ சித்தாந்த முதலாசிரியர் எனப் போற்றப்படுகிறார்.

'தத்துவம்' என்ற சொல்லிற்கு உண்மை, உண்மைப்பொருள். உண்மை நிலை, உண்மையான தன்மை, கொள்கை, கோட்பாடு, கருத்து, இயல்பான அமைப்பு ஆகிய பொருள்கள் உள்ளன. திருமூலர், 'தானே உலகுக் கோர் தத்துவமாய் நிற்கும்' (திரும. 2598) 'தானே உடலுயிர் தத்துவாமாய் நிற்கும்' (2967) எனக் கூறிச் சிவனை 'தத்துவன்' என்றே குறிப்பிடுகிறார்.

திரும. 2668—'தலைப்படுங் காலத்துத் தத்துவன் தன்னை'

'' 2666—'தலைப்படலாமெங்கள் தத்துவன் தன்னை'

திருமூலருக்குப் பிறகு தோன்றிய சைவ சமயாச்சாரியர்களும், சிவவை 'தத்துவன்' என்று அழைத்திருக்கிறார்கள்.

சம்பந்தர் :

'................. செங்குன்றூர் மேய
தத்துவனைத் தொழுவார் தடுமாற்றறுப்பாரே'

'சடைக்கணிந்த தத்துவனார் தங்குங்கோயில்'

'தாணுவாய் நின்றபர தத்துவனை'

அப்பர் :

'அணுவை யார்க்குந் தெரியாத தத்துவனை'

'உமையொடொரு பாக நின்ற தத்துவனை'

'தன்னொப் பில்லாத் தத்துவன் காண்'

'தத்துவனே போற்றி'

'தரும மாகிய தத்துவன்'

சுந்தரர் :

'சங்கரனைத் தத்துவனை'

'தழலாய் நின்ற தத்துவனே'

மாணிக்கவாசகர் :

'தாயான தத்துவனை'

'தாயிற் சிறந்த தயாவான தத்துவனே'

சைவ சித்தாந்தியர் யார் என்பதைத் திருமந்திரங்கள் 1421, 1481, 1482,1488-களில் திருமூலர் விளக்கியுள்ளார். 'சிவமாதல் சித்தாந்த சித்தி'எனத் திருமந்திரம் 1487-ல் கூறுகிறார்."தற் சிவம் கண்டுளோர் சைவ சித்தாந்தரே", "தற் பரங் கண்டுளோர் சைவ சித்தாந்தரே" "சிந்தாந்த வேதாந்தம் காட்டும் சிவனையே", "சித்தாந்தத்தே சீவன்முத்தி சித்திக்கும்", "சிவமாதல் வேதாந்த சித்தாந்தமாகும்" ஆகிய திருமந்திரத் தொடர்கள் சைவ சித்தாந்தத்தின் பொருளையும் சிறப்பினையும் குறிப்பிட்டு உணர்த்துகின்றன. 'சித்தாந்த வேதாந்தம்' என்பதை 'வேதாந்த சித்தாந்தம்' என்றும் திருமூலர் கூறியுள்ளதைக் கவனிக்கவேண்டும்.

திருமந்திரம் :

2791—"சிவ மாடும் வேதாந்தச் சித்தாந்தத்துள்ளே"

2895—"சிவனைப் பரமனுள் சீவனுட் காட்டும்
அவமற்ற வேதாந்த சித்தாந்தம்"

2884—"விவற வேதாந்த சித்தாந்த மேன்மையைக்
கூவி அருளிய கோனைக் கருதுமே'

ஆக, 'சித்தாந்த வேதாந்தம்', 'வேதாந்த சித்தாந்தம்' ஆகிய சொற்றொடர்களைப் பயன்படுத்தி, இரண்டும் சைவ சித்தாந்தத்தைத் தான் குறிக்கின்றன எனத் திருமூலர் திருமந்திரங்களில் தெளிவாக விளக்கியுள்ளார். ஒவ்வொரு சொற்றொடரையும், வேதாந்தம் சித்தாந்தம் என இரண்டு சொற்களாகப் பிரித்து ஒவ்வொன்றிற்கும் தனிப்பொருள் கொடுத்து, அதனால் சொற்றொடர் வெவ்வேறான இரண்டு பொருள்களைக் குறிக்கிறது எனப் பொருள் கொள்வதற்கில்லை என இந்நூலில் பின்னேயும் விளக்கப் பட்டுள்ளது.

திருமந்திரத்தின் விரிவுதான் தமிழகத்துச் சைவ சித்தாந்த தோத்திரங்களும் (திருமுறைகளும்) சாத்திரங்களும், திருமூலரின் திருமந்திரம், ஒரு தோத்திர நூலே என்ற வகையில் பன்னிரண்டு திருமுறைகளில் சேர்க்கப்பட்டிருந்தாலும் அதில் சைவ சித்தாந்தச் சாத்திரக் கருத்துக்கள் அதிகம் உள்ளதால், அது ஒரு தமிழ்ச் சாத்திர நூலாகவும் தமிழர்களால் கொள்ளப்படுகிறது. "தங்கி மிகாமை வைத்தான் தமிழ்ச்சாத்திரம்" என்று திருமந்திரத்திலேயே வருகிறது. திருமூலர், அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவருமாவார். "நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்" என்று பாடியுள்ளார் சுந்தரர்.

சிவனை முழுமுதற்கடவுளாகக் கொண்ட சிவ நெறி இருந்த சங்க காலத்தில், திருமால், சத்தி (சக்தி), முருகன் ஆகிய தெய்வங்களின் வழிபாடும் இருந்தது. இதுபற்றி இந்நூலின் முதற் பகுதியில் கூறப்பட்டுள்ளதும் கவனத்துக்குரியது அக்காலத்தில் இத்தெய்வங்களின் வழிபாடு சிவநெறிக்கு மாறுபட்டதாகவோ, வேறுபட்டதாகவோ தமிழர்களால் கருதப்பட்டதாகத் தோன்றவில்லை. திருமால், சத்தி, முருகன் ஆகியவை சிவனின் கூறுகளெனவே தமிழர்கள் கருதினர்.

**திருமந்திரம் :**

கூறது வாகக் குறித்துநற் சக்கரங்
கூறது செய்து கொடுத்தனன் மாலுக்குக்
கூறது செய்து கொடுத்தனன் சத்திக்கும்
கூறது செய்து தரித்தனன் கோலமே

"நாதத்தில் விந்துவும் நாத விந்துக்களில்
தீதற்றகம் வந்த சிவன், சத்தி என்னவே
பேதித்து ........"

தூரத்திற் சோதி தொடர்ந்தொரு சத்தியாய்
ஆர்வத்து நாதம் அணைந்தொரு விந்துவாய்ப்
பாரச் சதாசிவம் பார்முதல் ஐந்துக்கும்
சார்வத்து சத்தி ஓர் சாத்து மானாமே

அறிவுமயமாய் உள்ளபோது சிவன் என்றும், செயல் மயமாய் உள்ளபோது சத்தி என்றும், சிவன் சத்தியோடு பொருந்தி அருளுகிறான் என்றும் கூறுகிறார் திருமூலர். அதாவது, அறிவு மயமாகிய சிவனுக்கேற்ப, ஆற்றல் மயமானது சத்தி. சிவம் அமைதி நிலை (static), சத்தி ஆற்றல் நிலை (dyanamic). சிவனே அம்மையப்பனாக வணங்கப்படுகிறார். இதுவே சிவனின் தொன்மைக்கோலம்; அவரே எல்லா உயிர்களுக்கும் தாயும் தந்தை யுமாக இருந்து வருகிறார். சத், சத்து என்ற சொற்கள் சிவனைக் குறிப்பவையாகும். இச்சொற்களிலிருந்து சிவன் 'சத்தன்' என்ற ழைக்கப்படுகிறான். 'சத்தன்' என்ற சொல்லிலிருந்து பெண் பாலைக் குறிப்பதாக 'சத்தி' எனும் சொல் வந்துள்ளது.

திருமந்திரம் 333—சத்தன் அருள்தரிற் சத்தி அருளுண்டாஞ்
சக்தி அருள்தரிற் சத்தன் அருளுண்டாம்
சத்தி சிவமாம் இரண்டுந் தன்னுள் வைக்கச்
சத்தியும் எண் சித்தித் தன்மையுமாமே.

புறநானூறு :

"பெண் உரு ஒருதிறன் ஆகின்று; அவ் உருத்
தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்" (கடவுள் வாழ்த்து)

அகநானூறு :

"சேர்ந்தோள் உமையே" (கடவுள் வாழ்த்து)

ஐங்குறுநூறு

"நீல மேனி வாலிழை பாகத்து ஒருவன்" (கடவுள் வாழ்த்து)

பதிற்றுப்பத்து :

"இரண்டு உருவாய் ஈர் அணிபெற்ற எழிற் றகையன்"
(கடவுள் வாழ்த்து)

திருமந்திரம் :

57—"அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்"

"அறிவார் பரனுமவளிடத் தானே"

"சாற்றிய வேதஞ் சராசரம் ஐம்பூதம்
........ .................. சோதி பராபரை
ஆற்றலொ டாய்நிற்கும் ஆதி முதல்வியே"

1767—"....................எம்மிறை பாதியுள் மன்னும்
பராசத்தி யாமே

சிலப்பதிகாரம் :

"உமையவள் ஒரு திறன் ஆக ஓங்கிய இமையவன்'

"கங்கை முடிக்கு அணிந்த கண்ணுதலோன்பாகத்து
மங்கை உருவாய் மறை ஏத்தவே நிற்பாய்"

ஆக, சிவன் இன்றி சத்தியில்லை, சத்தியின்றிச் சிவம் இல்லை.

திருமந்திரம் :

2464—'வெளியாய சத்தி யவன் வடிவாமே'

1772—'சத்தி சிவமுமாஞ் சிவன் சத்தியுமாம்'

475—'அருளல்ல தில்லை அரனவன் அன்றி அருளில்லை'

"அருளது சத்தியாகும் அரன் தனக்கு அருளையின்றித்
தெருள் சிவமில்லை அந்தச் சிவமின்றிச் சத்தியில்லை"

என்கிறது சிவஞான சித்தியார்.

சத்தியின் வடிவமே திருமால் என்ற கருத்தும் தமிழர்களிடத்தே உண்டு. "தானான மூவுரு வோருருத் தன்மையள்" என்கிறார் திருமூலர். உலகத்தை ஆக்கலும், நிலைபெறுத்தலும், நீக்கலும் செய்பவை நீரும் நெருப்புமாகும் என்னும் சமயக்கோட்பாடுடைய தமிழர்கள், சிவனை நெருப்பாகவும், சத்தி, திருமால் ஆகிய இரண்டையும் நீராகவும் கருதுகிறார்கள். நீர் ஒலியையும் (Sound) நெருப்பு ஒளியையும் (Light) தோற்றுவிக்கின்றன. இவ்விரண்டின் விளைவு தான் பேராற்றல்; அதாவது ஆக்க சத்தி. திருமாலின் நிறம் நீலம் சத்திக்கும் நீல நிறம் கொடுக்கப்பட்டுள்ளது.

'நீலாங்க மேனியள் நேரிழையாள்'

'நீல் நிற உருவின் நேமியோன்' புற. பா 58

திருமாலுக்கு, வேறு தனி நிலை கொடுக்கப்படாததால்தான், திருமாலால் சிவனைக் காண இயலவில்லை என்ற நிலை குறிப்பிடப் பட்டது. இங்கே, மாணிக்கவாசகர் சிவனை 'ஆழியான் நாதன்' (கடலில் உள்ள அல்லது சக்கரத்தையுடைய திருமாலின் நாதன்) எனப் பாடியுள்ளதைக் கவனிக்க வேண்டும்.

அகநானூறு

"வெருவரு கடுந்திறல் இருபெருந்தெய்வத்து
உருவுடன் இயைந்த தோற்றம் போல" 360

சம்பந்தர் :

'மாதொருபாலு மாலொருபாலும் மகிழ்கின்ற
நாதனென் றேத்து நம்பரன்'

'மாலுமோர் பாக முடையார்
..............................
..............................
பெண்ணுமோர் பாகமுடையார்"

'பாதியோர் மாதர் மாலு மோர் பாகர்
பங்கயத்து அயனுமோர் பாலர்'

அப்பர் :

'மண்ணினை யுண்ட மாயன்தன்னையோர் பாகங்
கொண்டார்'

'மற்றுவைத்தாயங்கோர் மாலொரு பாக மகிழ்ந்துடனே'

'நாரணனை யிடப்பாகத் தடைத்தார் போலும்'

'மறையும் பாடுதிர் மாதவர் மாலினுக்கு
உறையுமாயினை'

பொய்கையாழ்வார் :

"பொன்திகழும் மேனிப் புரிசடையப் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும் என்றும்
இருவர் அங்கத்தால் திரிவரேனும்
ஒருவன் ஒருவன் அங்கத்து என்றும் உளன்"

திருமங்கையாழ்வார் :

''பிறை தங்கு சடையானை வலத்தே வைத்து''

கபிலதேவ நாயனார் :

'மதியான் இடப்பக்கம் மால்'

''மாலை ஒரு பால் மகிழ்ந்தானை''

''மாயனை ஒரு பாகம் அமர்ந்தானை''

தொல்காப்பியச் சூத்திரத்தில் வரும் 'மாயோன்' திருமாலையும், 'சேயோன்' முருகனையும் குறிக்கின்றன என்று பொருள் கொள்ளப் படுகிறது. திருமாலும் முருகனும் சிவனின் கூறுகள் எனத் தமிழர் கருதியதால்தான், நம் அருளாளர்கள் கீழுள்ளவாறு சிவனைக் குறிப்பிட்டுள்ளனர்.

திருமூலர் :

திருமந்திரங்கள் *165, 1540*—'மாயன்'

திருமந்திரம் *111*—'மாயவனாய்'

'' *415*—'தான் ஒரு காலம்தண் மாயனுமாமே'

சம்பந்தர் :

'கருவினாலன்றியே கருவெலா மாயவன்'

''மாதொருபாக மாயவன் வாழ்கொளி புத்தூர்'

அப்பர் :

'மாயவனை மறையவனை'

திருமூலர் :

*1540*—'சேயன்'

சம்பந்தர் :

'மாயவன் சேயவன் வெள்ளியவன்'

'சேயானே சீர்திகழுந் திருக்காறாயில் மேயானே'

'செய்யனே திருவாலவாய் மேவிய ஐயனே'

அப்பர் :

'நணியானே சேயானே நம்பானே'

'தலையாய தேவாதி தேவர்க் கென்றும் சேயானை'

மாணிக்கவாசகர் :

'செய்யானை'

சம்பந்தர் சிவனை 'வேலன்' என்ற பெயரிலும் குறிப்பிடுகிறார்:

'வலமிகுவாளன் வேலன்'

'முத்தன்மிகு மூவிலை நல் வேலன் விரிநூலன்'

சிவன், 'மாதவன்' என்றழைக்கப்படுவதையும் இங்கே குறிப்பிட வேண்டும் :

சம்பந்தர் :

'......... உடன் பயில்கின்றனன் மாதவனே'

அப்பர் :

'வளருந்திங்கள் சூடியோ ராடன்மேய மாதவன்'
'மாதனத்தை மாதேவனை'
'ஐயன்காண் குமரன்காண் ஆதியான்காண்' எனப்பாடி
சிவனைக் குமரன் என்றே குறிப்பிடுகிறார் அப்பர்.

முருகன், சிவன்-சத்திப் புதல்வனாகத் தொன்றுதொட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளான். (சமயக் கோட்பாட்டில் கற்பனையாகத் தெய்வங்களுக்கிடையே கொடுக்கப்பட்டுள்ள உறவு நிலை)

கலித்தொகை :

"ஆல் அமர் செல்வன் அணிசால் பெருவிறல்" . 81

பரிபாடல் :

"காஅய் கடவுள் சேய் ! செவ்வேள்" 5

திருமுருகாற்றுப்படை :

''இரு வரை எறிந்த ஒருவன் தாதை''

''ஆல்கெழு கடவுட் புதல்வ''

திருமந்திரம் :

1026—'தந்தைதன் முன்னே சண்முகந் தோன்றலாற்
கந்தன் சுவாமி கலந்தங் கிருத்தலால்'

520—'அம்பவள மேனி அறுமுகன் போயவர்
தம்பகை கொல்லென்ற தற்பரன் தானே'

சம்பந்தர் :

'பெற்று முகந்தது கந்தனையே'

'மாயச்சூரன் றறுத்த மைந்தன் தாதை'

'வள்ளி முலைதோய் குமரன் தாதை'

'தழை மயிலேறவன் தாதையோ தான்'

திருநாவுக்கரசர் :

''முருகவேள் தன்னைப் பயந்தாய் போற்றி''

''செல்வியைப் பாகங்கொண்டார் சேந்தனை மகனாக்
கொண்டார்''

''வேற்குமரன் தாதை'

''சூரட்டவேலவன் தாதையை''

''கடம்பமர் காளை தாதை''

''நம் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்''

''குமரனையும் மகனாக உடையார் போலும்''

''முருகவேட்குந் தந்தை காண்''

''வள்ளி மணாளற்குத் தாதை கண்டாய்''

''வியவேல் நெஞ்சே குறைவுடையார் மனத்துளான்
குமரன் தாதை கூத்தாடும் குணமுடையான்''

''கோழிக் கொடியோன் தன் தாதை'

'ஆறுகொலாமவர்தம் மகனார் முகம்'

சுந்தரர்

"சேந்தன் அப்பன்"

"பொன்னானை மயிலூர்தி முருகவேள் தாதை"

"குமரனைப் பயந்த வார்த்தயங்கிய முலை மடமானை"

மாணிக்கவாசர் :

"நல்வேலன் தாதை"

"குமரன்தன் தாதைக்கே உந்தீபற"

சிவன், முருகன், உமை ஆகிய மூவரும் எழுந்தருளியுள்ள திருவுருவம் (உமை முருகுடையார், உமைமுருகு இறைவர், சோமாஸ்கந்தர்) தமிழ்நாட்டிற்கே உரியது. சத் (பேருண்மை), சித் (பேரறிவு), ஆனந்தம் (பேரின்பம்) ஆகிய மூன்றையும் விளக்கும் (சச்சிதானந்தம்) இந்த உமைமுருகுடையார் திருவுருவ வழிபாடு தமிழ்நாட்டில்தான் தோன்றியது. 'சச்சிதானந்தம்' எனும் பெயர் தமிழர்களிடத்தில்தான் உண்டு.

தமிழர்களின் சைவ சித்தாந்த சமய சிவ வழிபாடு, அருவ வழிபாடு, உருவ வழிபாடு, அருவுருவ வழிபாடு என மூன்று வகைப் பட்டதாகும்.

திருமந்திரம் :

1768—'உருவும் அருவும் உருவோ டருவும்
மருவு பரசிவன்'

2481—'அருவா யுருவாய் அருவுரு வாகிக்
குருவாய் வருஞ் சத்திகோன்'

அருவ நிலைக்கும் உருவ நிலைக்கும் மத்திய நிலையே அருவுருவ நிலையாகும். நிலம், நீர், தீ என்ற மூன்று பூதங்களும் உருவப் பொருள்கள். காற்று அருவுருவப் பொருள். ஆகாயம் அருவப் பொருள். அம்மையப்பன் (தொன்மைக்கோலம்), தென்முகக் கடவுள் (ஆலமர் செல்வன், தட்சணாமூர்த்தி), ஆடவல்லான் (நடராசர்) ஆகிய உருவங்களில் சிவனை வழிபடுவது உருவ வழிபாடு. வானம், வெளி, திருச்சிற்றம்பலம் எனக் குறிப்பிட்டு வழிபடுவது அருவ வழிபாடு. இலிங்கம் என்ற வடிவில், சிவனின் சின்னமாக, அடையாளமாக வழிபடுதல் அருவுருவ வழிபாடாகும். சிவலிங்க வழிபாடு காலத்தால் முந்தியது. இலங்கு என்னும் சொல்லி

லிருந்து 'இலிங்கம்' என்ற சொல் தோன்றியதாகக் கூறப்படுவதுண்டு. இச்சொல், ஒளி, சூரிய வொளி எனப்பொருள்படும் (இலய என்ற சொல்லோடும் சிலர் தொடர்பு படுத்துகின்றனர்). சிவலிங்கத் தத்துவத்தை திருமூலர் விரிவாக விளக்கியுள்ளார்.

திருமந்திரம்

இலிங்கநற் பீடம் இசையும் ஓங்காரம்
இலிங்கநற் கண்ட நிறையு மகாரம்
இலிங்கத்துள் வட்ட நிறையும் உகாரம்
இலிங்க மகார நிறைவிந்து நாதமே.

மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்
மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
மானுட ராக்கை வடிவு சதாசிவம்
மானுட ராக்கை வடிவு திருக்கூடத்தே.

தமிழகத்தில் தோன்றி வளர்ந்த சைவ சமய சித்தாந்தக் கொள்கைகளை (தத்துவங்களை) அறிந்துகொள்ள உதவும் தமிழ் நூல்கள் பன்னிரண்டு திருமுறைகளாகும். இத்திருமுறைகளாவன:

| | |
|---|---|
| முதலாம் திருமுறை<br>இரண்டாம் திருமுறை<br>மூன்றாம் திருமுறை | திருஞானசம்பந்தர் தேவாரம் (திருக்கடைக்காப்பு). |
| நான்காம் திருமுறை<br>ஐந்தாம் திருமுறை<br>ஆறாம் திருமுறை | திருநாவுக்கரசர் தேவாரம். |
| ஏழாம் திருமுறை | சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம். (திருப்பாட்டு) |
| எட்டாம் திருமுறை | மாணிக்கவாசகர் திருவாசகம் திருக்கோவையார் |

| | |
|---|---|
| ஒன்பதாம் திருமுறை | |
| திருவிசையப்பா | திருமாளிகைத்தேவர்<br>சேந்தனார்<br>கருவூர்த்தேவர்<br>பூந்துருத்தி காடவ நம்பி<br>கண்டராதித்தர்<br>வேணாட்டடிகள்<br>திருவாலி அமுதனார்<br>புருஷோத்தம நம்பி<br>சேதிராயர் |
| திருப்பல்லாண்டு | —சேந்தனார் |
| பத்தாம் திருமுறை | —திருமூலர் திருமந்திரம். |
| பதினோராந்திருமுறை | திருவாலவாயுடையார்<br>காரைக்காலம்மையார்,<br>பட்டினத்தார், ஐயடிகள் காடவர் கோன்<br>சேரமான் பெருமாள் நாயனார்,<br>நக்கீரர், கல்லடார், கபிலர்,<br>பரணர், இளம்பெருமான் அடிகள், அதிராவடிகள், நம்பியாண்டார் நம்பி ஆகிய பன்னிருவர்களால் பாடப்பெற்றவை |
| பன்னிரண்டாம் திருமுறை | சேக்கிழார் பெரிய புராணம்<br>(திருதொண்டர் புராணம்) |

இப்பன்னிரண்டு திருமுறைகளும் சைவ சித்தாந்தத்தின் தோத்திர நூல்கள் என்று வழங்கப்பகின்றன. இத்திருமுறைகள் அக்காலத்தில் தமிழகத்திலிருந்த சைவ சமய நிலையை எடுத்துக் காட்டுகின்றன இவற்றின் அடிப்படையில், தமிழ்ச் சைவ சித்தாந்த சாத்திரங்கள் (ஞானநூல்கள்) பதினான்கும் பின்னர்த் தோன்றின. பன்னிரு திருமுறைகளாகிய இலக்கியத்திலிருந்து உருவாகிய இச்சாத்திரங்களாவன :

| | | ஆசிரியர் |
|---|---|---|
| 1. | திருவுந்தியார் | — திருவியலூர் உய்யவந்த தேவர் |
| 2. | திருக்களிற்றுப்படியார் | — திருக்கடவூர் உய்யவந்த தேவர் |
| 3. | சிவஞானபோதம் | — மெய்கண்டார் |

4. சிவஞான சித்தியார்
5. இருபா இருபது } அருள் நந்திசிவம் (அருள்நந்தி சிவாச்சாரியார்)

6 உண்மை விளக்கம் — திருவதிகை மனவாசகங்கடந்தார்

7. சிவப்பிரகாசம்
8. திருவருட்பயன்
9. வினாவெண்பா
10. போற்றிப் பஃறொடை
11. கொடிக்கவி
12. நெஞ்சுவிடு தூது
13. உண்மை நெறி விளக்கம்
14. சங்கற்ப நிராகரணம் } உமாபதி சிவம் (உமாபதி சிவாச்சாரியார்)

முதல் எட்டு திருமுறைகளை அருளிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர். சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசகர் ஆகியவர்கள், தமிழகச் சைவ சமயத்தை நிலைகொள்ளச்செய்து வளர்த்த பெருமைக்குரியவர்கள். இவர்கள் சமயகுரவர்கள் நால்வர் என்றும் சமயாச்சாரியர்கள் நால்வர் என்றும், 'நால்வர்' என்றும் போற்றப்படுகின்றனர். இவர்களில் முதல்மூவர் 63 நாயன்மார்களில் சேர்க்கப்பட்டுள்ளனர். இவர்கள் தோன்றிய காலத்தில் சைவ சமயம் இருந்த நிலையையும், இவர்களின் அருட்பணியினால் சைவ சமயத்திற்கும் ஏற்பட்ட மறுமலர்ச்சியையும் இங்கு ஓரளவிற்குக் குறிப்பிடுவது, தமிழகத்துச் சைவ சமய வரலாற்றுப் போக்கினை நன்கு அறியப் பயன்படும்.

தமிழகத்தில் தொல்காப்பியர் காலத்திலேயே வட இந்தியாவிலிருந்து வந்த ஆரிய இனத்தின் தாக்கமும், அந்த ஆரிய இனத்தின் வேத மதத்தின் தாக்கமும் சிறிய அளவில் தொடங்கிவிட்டது எனக் கூறலாம். விந்திய மலைத்தொடருக்கு வடக்கே உள்ள பகுதி வட இந்தியா எனவும், தெற்கே உள்ள பகுதி தென்னிந்தியா எனவும் குறிப்பிடுவது மரபு. முதலில் ஆரியர்கள் விந்திய மலைத்தொடருக்கு வடக்கே வாழ்ந்தனர். அக்காலத்தில் அவர்களின் வடமொழியும், மதமும் கலாச்சாரமும் வட இந்தியாவில் பரவின. ஐத்திரேய பிராமணம், சாங்காயன சிரௌத்த சூத்திரம் ஆகிய நூல்கள் தோன்றியகாலத்தில். வட இந்தியா முழுவதும் ஆரிய மயமாகிவிட்டது என்றும், விந்தியத்திற்குத் தெற்கே ஆரியப் பண்பாடு பரவவில்லை என்றும், ஆனால் அக்காலத்தில் தென்னிந்தியாவில், ஆரியருக்கு முற்பட்ட மக்கள் வளத்துடன் வாழ்ந்தார்கள்

என்றும் அறியப்படுகிறது. வட இந்தியாவில் சமண, பௌத்த மதங்கள் தோன்றி வளரத் தொடங்கிய காலத்திலிருந்து ஆரியர்கள் அதுவும் குறிப்பாக ஆரியர்களின் நான்கு வருணங்களில் முதல் வருணமாகிய பிராமணர்கள் தென்னிந்தியாவை நோக்கி நகர்ந் தனர். ஏசுகிருத்து பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன் இவ்வாறு தொடங்கிய ஆரியப் பிராமணர்களின் தென்திசைப் பயணம், 'தமிழகம்' தவிர ஏனைய இந்தியப் பகுதி முழுவதையும் தன்னுள்ளடக்கிய மௌரியப் பேரரசு தோன்றிய காலத்துக்குள், அநேகமாக இந்தியா முழுவதும் பரவலாயிற்று. வடமொழி என்ற பெயரே அம்மொழியாளர்கள் வடக்கேயிருந்து வந்தவர்கள் என்பதைக் குறிக்கும்.

கி.பி. 4, 5 நூற்றாண்டுகளுக்குள் தமிழகத்துச் சிவ நெறி (சைவ நெறி), திருமால் நெறி ஆகியவற்றிற்கும் ஆரியரின் வேத மதத்திற் கும் குறிப்பிடத்தக்க தொடர்பு ஏற்பட்டுவிட்டது வட இந்தியாவில் தோன்றிய சமண, பௌத்த மதங்களின் தாக்கமும், சற்றேறக் குறைய அதே காலத்தில் தமிழகத்தில் ஏற்பட்டுவிட்டது. வட இந்திய மதங்கள் மூன்றின் (வேத மதம், சமண மதம், பௌத்த மதம்) வாயிலாக வடசொல் கலப்பும் தமிழகத்தில் தொடங்கியது. இருப்பினும், ஆரியத்தாக்கம், தென்னிந்தியாவின் இதர பகுதி களில் ஏற்பட்ட அளவிற்குத் தமிழகத்தில் ஏற்படவில்லை; தமிழர் களின் மொழியாகிய தமிழுக்கோ, தனி இயல்புடைய பண் பாட்டிற்கோ அதிகப் பாதிப்பு ஏற்படுத்த முடியவில்லை. இருந்தா லும், நீண்ட நெடுங்காலத்தில் சிறிது சிறிதாகத் தொடர்ந்து வந்துள்ள ஆரியரின் தாக்கத்தைத் தமிழர்கள் உறுதியுடன் எதிர்க்க வில்லை என்பது மட்டுமன்றி, ஆரியர் தொடர்பினால் ஏற்பட்ட மாறுதல்களை ஓரளவு ஏற்றுக் கொள்ளவும் செய்தார்கள் என்பது வரலாற்று உண்மையாகும். ஆரியர் தங்கள் வேத மதக்கொள்கை களையும் கலாச்சாரத்தையும் தமிழகத்தில் பரப்பச் செய்த முயற்சி யில், தமிழர்களின் தெய்வங்களாகிய சிவனையும், திருமாலையும், சத்தியையும், முருகனையும் (கந்தன்) தங்கள் (ஆரியரின்) தெய் வங்களான பிரம்மா, விஷ்ணு, ருத்திரா ஆகியவர்களோடு இணைத் துக் கொண்டதும், தமிழர்களது வேதங்களின் இடத்தில் தங்கள் வேதங்களை வைத்துப் பேணியதும், மற்றும் இதிகாசங்கள், புராணங்கள், அகத்தியர் கற்பனைக் கதை ஆகியவற்றைத் தமிழ கத்தில் புகுத்தியதும், இவ்வாறாகத் தமிழரது சமயத்தின் நுட்பக் கொள்கைளைத் தழுவிக் கொண்டதும் முக்கிய இடம் பெறுகின் றன. இத்தகைய தாக்கத்திற்குள்ளானாலும், தமிழர்கள் தங்கள் மொழியையும், தங்கள் சமய நெறிகளையும், இதர பழக்க வழகங் களையும் கைவிடாது தொடர்ந்து பாதுகாத்தனர். இதனால்தான்,

ஆரியர் இனத்தில் வந்தவர்களும், தமிழர்களும் கூடிய சமுதாயம் (society) நெடுங்காலமாக இருந்து வந்தாலும், இவ்விரு இனங்களும் கலந்து ஒன்றாகாமல் தனித்தனியே பிரிந்து இருக்கும் நிலையை இன்றும் தமிழகத்தில் காண்கிறோம். தமிழ்மொழி அதன் தனித் தன்மையுடனும் வளத்துடனும் தொடர்ந்து நீடித்துவருகிறது. தெலுங்கு, மலையாள மொழிகளில் ஓர் எழுத்துக்கு நான்கு ஒலி கொடுக்கப்பட்டு, வடமொழிச் சொற்களும் அதிகமாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டுள்ளன. தமிழ்மொழியில் அதன் இயற்கை மரபே நிலைத்தது என்பது குறிப்பிடத்தக்கது. ஆனாலும், தமிழகத்தின் சமய நிலையில் ஒருவித பாதிப்பு ஏற்படத்தான் செய்தது. ஆரிய வேதக் கொள்கைகளை யொட்டிச் செய்யப்படும் யாகங்களும் சடங்குகளும், சமண பௌத்த கொள்கைகளில் சிலவும் இடம் பெற்றன. சமண, பௌத்த மதங்கள், பல்லவ, பாண்டிய மன்னர் களின் ஆதரவையும் பெற்றிருந்தன. பல்லவ மன்னர்கள் சிவன் வாகனமாகிய நந்தியை (ஏறு) அரச இலச்சினையாகக் கொண்டிருந் தாலும், அம்மன்னர்களில் சிலர் சமண மதத்தைச் சார்ந்துமிருந்த னர். ஆரியர்களைப் போல், பல்லவ அரசர்கள் கோத்திரங்களை மேற்கொண்டனர். ஆரிய வேத மத யாகங்களையும் செய்தார்கள். தமிழர்களிடையே எக்காலத்தும் கோத்திரங்கள் கிடையாது.

பிறகு, ஆரிய வேத மதம் அல்லது வேத நெறி, தமிழகத்தின் சிவ நெறி, திருமால் நெறி ஆகிய மூன்றும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையனவாக ஆக்கப்பட்டு, மூன்றும் ஓரளவு ஒத்துப்போய் விளங்கும் நிலையை அடைந்தபோது, தமிழர்கள், சமண, பௌத்த மதங்கள் தங்கள் சமயத்திற்கு விரோதமானவை, தங்கள் சமயத் திற்குப் பாதிப்பு ஏற்படுத்தக்கூடியவை என உறுதியாக எண்ணலா னார்கள். சமண காப்பியங்களும் இதர சமண நூல்களும் நிகண்டு களும் இயற்றப்பட்ட காலமாகும் அது. (கி.பி. 6-ஆம் நூற்றாண்டு எனலாம்). இந்நிலையில், சமண, பௌத்த மதங் களைக் கட்டுப்படுத்தித் தமிழர் சமயத்தைப் பாதுகாப்பதற்கான முயற்சி, தமிழகத்தில் கி.பி. 7, 8 நூற்றாண்டுகளில் நாயன்மார்கள் ஆழ்வார்கள் மூலம் ஒரு இயக்கமாகவே உருவாகியது. இக் காலம் தான் தமிழகத்தின் பத்தி (பக்தி) இலக்கியகாலம் எனக் குறிப்பிடப்படுகிறது. இப்பக்தி இயக்கத்தினால், தமிழ கத்தின் சமய நிலையில் கி.பி. 6-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி யிலிருந்து புதிய திருப்பம் ஏற்பட்டது. சிவபத்தியை (பக்தியை) அடிப்படையாகக் கொண்ட தமிழரின் சமயம் எழுச்சியுற்றது. சிவ நெறியை அதாவது சைவ சமய நெறியைப்போற்றிய தேவாரப் பதி கங்களும், திருமால் நெறியைப்போற்றிய ஆழ்வார்களின் பாசுரங்க ளும் தோன்றின. நாயன்மார்கள், சிவபெருமானிடம் தாம் கொண்

டிருந்த பக்தியையும், சைவ சித்தாந்தத் தத்துவங்களையும், சிவ வழிபாட்டில் மேற்கொள்ள வேண்டிய நெறிமுறைகளையும் தம் அருட்பாடல்களில் வெளிப்படுத்தினர். தலங்களும் திருக்கோயில் களும் முக்கியத்துவம் பெற்றன. இவைகளின் விளைவாகப் பௌத்தமும், சமணமும் ஒடுங்கத் தொடங்கின. தொண்டை நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் சமண மத ஆதிக்கத்தை ஒடுக்கி, சைவ சமயத்தை மீண்டும் வலுவாக நிலைநாட்டிய பெருமை திருஞான சம்பந்தரையும் திருநாவுக்கரசரையும் சாரும். ஞானசம்பந்தர், ஒவ்வொரு பதிகத்தின் பத்தாவது தேவாரத்தில் சமண, புத்த மதங்களைக் கண்டிப்பதைக் காணலாம். சைவ சமயாசிரியர்கள் நால்வரும், தமிழரது சைவ சித்தாந்த சமயம் ஆரிய வேத மதத்தினால் பாதிக்கப்படாதவாறு,சைவ சித்தாந்த சமயத்தின் தனித்தன்மையும் சிறப்பும் நிலைக்குமாறு செய்தனர். சைவ குரவர்கள் நால்வரும் தலங்கள்தோறும் சென்று தோத்திரங்கள் மூலம் சிவனைப் போற்றிப்பாடி, சைவ சித்தாந்தக் கொள்கைகளைத் தமிழகத்தில் பரப்பியதின் விளைவாகத் தமிழர்களிடத்தே சைவ சமய உணர்வு பெருகிற்று. இந்நால்வர்களின் அருட்பாடல்களும் மற்றைய அருளாளர்களின் பக்திப் பாடல்களும் பின்னர், பன்னிரண்டு திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டன. சைவ சித்தாந்தத்தின் தோத்திரமாகவும் தமிழ்ச்சாத்திரமாகவுமுள்ளதும், பத்தாம் திருமுறையுமாகிய திருமூலர் திருமந்திரத்தின் கருத்துக்களின் அடிப்படையில், சைவ சித்தாந்தக் கோட்பாடுகள் இதர திருமுறைகளில் விளக்கப்பட்டிருப்பதைக் காண்கிறோம். திருமூலர் திருமந்திரம் காலத்தால் முந்தியது. திருமுறைகள் தோன்றியதற்கு வெகு காலத்திற்கு முன்பிருந்தே தமிழகத்தில், தமிழ் வேதத்தின் அடிப்படையில் சைவ சமயம் நிலவி வந்துள்ளது என்பதை மறந்துவிடக்கூடாது.

சைவ சித்தாந்த சமயம் தமிழகத்துக்குரியது ; தமிழரின் பண்பாட்டிற்குரியது; மிகவும் தொன்மையானது என்பதைத் திருமுறைகளிலிருந்து அறியலாம். ஆனால், இந்நூல்களில் வரும் வேதம், வேதங்கள், நான்கு வேதங்கள், மறை, நான்மறை ஆகிய சொற்கள் ஆரியரின் வடமொழி வேதங்கள் நான்கினைத்தான் குறிக்கின்றன என்று கொண்டு, சைவ சிந்தாந்த சமயமும், வடமொழி வேதங்களைத்தான் அடிப்படையாகக் கொண்டுள்ளது என்றும் அதனால் தமிழகத்துச்சமயம் ஆரியரின் வேத மதத்தைச் சார்ந்ததுதான் என்றும், தொடர்ந்து வலியுறுத்தப்பட்டு வருகிறது. மேலும், ஆரிய வேதமதம் சைவ சித்தாந்த சமயத்திற்கு மேற்பட்டது, அந்த வடமொழி மதம் தான் இந்தியா முழுவதும் ஆதியிலிருந்து வருகிறது என்றும் கூறப்பட்டு வருகிறது. இக்கூற்றுக்கள், தமிழகத்துச் சைவ சித்தாந்தம் சம்பந்தப்பட்ட வரையில் எந்த அளவிற்குப்பொருந்தும்,

நியாயமானது என்பது தமிழர்களால் கூர்ந்து ஆராயப்பட்டு, உண்மைநிலை வெளிப்படுத்தப்பட்டதாகத் தோன்றவில்லை. மாறாக, சங்க நூல்களிலும் தமிழ்ச் சமய நூல்களிலும் வரும் வேதம், மறை, நால்வேதம், நான்மறை ஆகிய சொற்கள் வடமொழி நான்கு வேதங்களைக் குறிக்கின்றன என்ற ஒரு தவறான எண்ணமே தமிழர்களிடத்தே நூற்றாண்டுகளாக இருந்து வருவதைக் காண்கிறோம்.

ஆரிய வேத மதம், தமிழகம் நீங்கலாக இந்தியா முழுவதிலும் ஆதியிலிருந்து வருகிறதா இல்லையா என்பதுபற்றியோ, ஆரிய வேத மதம் தமிழகத்துச் சைவ சித்தாந்த சமயத்தை விட மேலானது, சிறப்பானது என்ற கூற்றுபற்றியோ ஆய்வு செய்து முடிவு காணவேண்டுமென்பது இங்கு நோக்கமல்ல. பதிலாக, பண்டையச் சங்க நூல்களிலும் தமிழ்த் திருமுறைகளிலும் காணப்படுகின்ற வேதம், நால்வேதம், மறை, நான்மறை ஆகிய சொற்கள் உண்மையில் எதைக் குறிக்கின்றன, ஆரிய வேதத்தையா அல்லது தமிழர்களின் சைவ சமயம் மற்றும் சைவ சித்தாந்தத்திற்கு மூலமாயிருந்த வேறு வேதத்தையா என்பது பற்றிய ஆய்வுதான் தேவையானது, முக்கியமானது. சங்கச் செய்யுட்களில் வேதம், மறை மற்றும் வேள்வி ஆகியவை 'அந்தணர்' என்று குறிப்பிடப்படுபவரோடு தொடர்புபடுத்தப்பட்டுள்ளதையும் பார்க்கிறோம். அதனால், இந்த இடத்தில் 'அந்தணர்' என்ற தமிழ்ச் சொல் பற்றிய ஆய்வையும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

எனவே, வேதம், நான்மறை, வேள்வி, அந்தணர் ஆகிய சொற்கள் சங்கப் பாடல்களில் பயன்படுத்தப்பட்டுள்ள நிலையைக் காண்போம்.

புறநானூறு :

''நாஅல் வேத நெறி திரியினும்'' பா 2

''............................ புரை இல் 15
நல் பனுவல், நால் வேதத்து
அருஞ் சீர்த்திப் பெருங் கண்ணுறை
நெய்ம் மலி ஆவுதி பொங்க, பல் மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி,
யூபம் நட்ட வியன் களம் பலகொல்.''

'' ..................... யூப நெடுந் தூண்
வேத வேள்வித் தொழில் முடித்ததூஉம்'' 224

''கேள்வி மலிந்த வேள்வித் தூணத்து'' 400

''சிறந்த நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே'' 6

''ஆன்ற கேள்வி அடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்றம் ஆக,
மன்னர் ஏவல் செய்ய, மன்னிய
வேள்வி முற்றிய வாய் வாள் வேந்தே'' 26

''அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும் புல் பரப்பினர் கிடப்பி'' 93

('புந்தியினான் மறைவழியே புற்பரப்பி' என வரும் சம்பந்தர் தேவார வரி இங்கே குறிப்பிடத்தக்கது).

'ஆக்குரல் காண்பின் அந்தணாளர் நான்மறைக் குறி' 362

''கறை மிடறு அணியலும் அணிந்தன்று, அக்கறை
மறை நவில் அந்தணர் நுவலவும் படுமே'' 1

''நன் பல கேள்வி முற்றிய வேள்வி அந்தணர்க்கு'' 361

''அறு தொழில் அந்தணர் அறம் புரிந்து எடுத்த'' 397

''அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும்'' 2

'புலன் அழுக்கு அற்ற அந்தணாளன்'' 126

''மன்னும் அந்தணன்'' 200

அகநானூறு

''யாழ்கெழுமணி மிடற்று அந்தணன்'' (கடவுள் வாழ்த்து)

''நான்மறை முதுநூல்முக்கட் செல்வன்'' 181

''மன் மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன் 220
முன் முயன்று அரிதினின் முடித்த வேள்வி''

கலித்தொகை

''ஆறு அறி அந்தணர்க்கு அருமறை பல பகர்ந்து''
(கடவுள் வாழ்த்து)

''கேள்வி அந்தணர் கடவும்
வேள்வி ஆவியின் உயிர்க்கும் என் நெஞ்சே'' 36

"எறித் தரு கதிர் தாங்கி ஏந்திய குடை நீழல்
உறித் தாழ்ந்த கரகமும் உரை சான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவல் அசைஇ, வேறு ஓரா நெஞ்சத்துக்
குறிப்பு ஏவல் செயல் மாலைக் கொளை நடை அந்தணீர்" 9

"நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும், அவை எடுத்து
அறவினை இனபுறாஉம் அந்தணர் இருவரும்,
திறம் வேறு செய்தியின் நூல் நெறி பிழையாது'
99 (சான்றோர் கூற்று

"ஓதுடை அந்தணன் எரிவலம் செய்வான் போல்" 69

"அறிவுடை அந்தணன் அவளைக் காட்டு என்றானோ" 72

"அந்தி அந்தணர் எதிர்கொள" 119

"இனநாரை முக்கோல் கோள் அந்தணர் 126
முது மொழி நினைவார் போல்"

"இமைய வில்வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்" 38

ஐங்குறுநூறு :

"நீல மேனி வாலிழை பாகத்து (கடவுள் வாழ்த்து)
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகும் முகிழ்த்தன முறையே"

"அறம்புரி அருமறை நவின்ற நாவின் 387
திறம்புரி கொள்கை அந்தணீர்"

"சேட் புலம் முன்னிய அசை நடை அந்தணீர்" 384

பதிற்றுப்பத்து :

"அறம் கரைந்து வயங்கிய நாவின், பிறங்கிய 64
உரைசால் வேள்வி முடித்த, கேள்வி
அந்தணர், அருங்கலம் ஏற்ப"

"தொலையாக் கொள்கைச் சுற்றும் சுற்ற
வேள்வியில் கடவுள் அருத்தினை" 70

"கேள்வி கேட்டுப் படிவம் ஒடியாது
வேள்வி வேட்டனை உயர்ந்தோர் உவப்ப"

"ஓதல் வேட்டல் அவை பிறர்ச் செய்தல்
ஈதல் ஏற்றல் என்று ஆறுபுரிந்து ஒழுகும்
அறம்புரி அந்தணர் வழிமொழிந்து ஒழுகி" 24

"சொல், பெயர். நாட்டம், கேள்வி, நெஞ்சம் என்று
ஐந்துடன் போற்றி அவை துணையாக,
எவ்வம் சூழாது விளங்கிய கொள்கை
காலை அன்ன சீர்சால் வாய்மொழி
உருகெழு மரபின் கடவுட் பேணியர்" 21

"கடுஞ் சினம் கடாஅய் முழங்கும் மந்திரத்து
அருந்திறல் மரபின் கடவுட் பேணியர்" 30

பரிபாடல்

"நாவல் அந்தணர் அரு மறைப் பொருளே" 1, 2

"படி நிலை வேள்வியுள் பற்றி ஆடுகொளலும்" 2

"நின்னொடு புரைய அந்தணர் காணும் வரவு"

"தாமரைப் பூவினுள் பிறந்தோனும் தாதையும் 29
நீ என மொழியுமால் அந்தணர் அருமறை" 3

"வேதத்து மறைநீ" 3

"அந்தணர் அருமறை" 4

"அமரர் வேள்விப் பாகம் உண்ட பைங்கண் பார்ப்பான்" 5

"புலம் புரி அந்தணர் கலங்கினர் மருண்டு" 6

"விரிநூல் அந்தணர் விழவு தொடங்க
புரிநூல் அந்தணர் பொலம் கலம் ஏற்ப" 11

"அந்தணர் அறன் அமர்ந்தோயே" 14

"வசை நீங்கிய வாய்மையால் வேள்வியால்" 17

"வேள்வியின் அழகு இயல் விளம்புவோரும்" 19

"மலிவுடை உள்ளத்தான் வந்துசெய் வேள்வியுள்" 19

நக்கீரர் :

திருமுருகாற்றுப்படை :

"அந்நெறி நான்கென வழி தோற்றினை"

''ஆல நீழல் அன்றிருந்து அறநெறி
நால்வர் கேட்க நன்கு இனிதுரைத்தனை''

''நான்கு நின் வாய்மொழி''

'' ......... ................ நெருங்கி
முத்தீ நான்மறை ஐம்புலன் அடக்கிய
அறுதொழிலாளர்க்கு உறுதி பயந்தனை''

திருமுருகாற்றுப்படை :

''அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே''

''இருமூன்றெய்திய இயல்பினின் வழாஅது''

''உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து
ஆறு எழுத்து அடக்கிய அருமறைக் கேள்வி
நாஇயல் மருங்கில் நவிலப்பாடி''
''அந்தணர் வெறுக்கை''

சிறுபாணாற்றுப்படை :

''அருமறை நாவின் அந்தணர்க்கு ஆயினும்'' 204

''அந்தணர் அருகா அருங்கடி வியல் நகர் 187,188
அம்தண்கிடங்கின் அவன் ஆமூர் எய்தின்''

பெரும்பாணாற்றுப்படை :

''கேள்வி அந்தணர் அருங்கடன் இறுத்த
வேள்வித் தூணத்து அசைஇ'' 315,316

''வளைவாய்க் கிள்ளை மறை விளி பயிற்றும்
மறைகாப்பாளர் உறைபதிச் சேப்பின்'' 300,301

இவ்விரண்டு வரிகளில் தெரிவிக்கப்பட்டுள்ளதை, கீழுள்ள திருஞானசம்பந்தரின் தேவார வரிகள் தெரிவிப்பதோடு ஒப்பிட்டு நாம் மகிழவேண்டும்.

'பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும்
பயின்றோது மோசை கேட்டு
வேரிமலி பொழிற் கிள்ளை வேதங்கள்
பொருட்சொல்லு மிழலையாமே'.

'வேதத் தொலியாற் கிளிசொற் பயிலும் வெண்காடே'.

மதுரைக்காஞ்சி :

"ஓதல் அந்தணர் வேதம் பாட" 656

"பல் சாலை முதுகுடுமியின் 759, 760
நல் வேள்வித் துறைபோகிய"

வரிகள் 468-475. "சிறந்த வேதம் விளங்கப்பாடி,
விழுச் சீர் எய்திய ஒழுக்கமொடு புணர்ந்து,
நிலம் அமர் வையத்து ஒருதாம் ஆகி,
உயர் நிலை உலகம் இவண் நின்று எய்தும்,
அறநெறி பிழையா, அன்புடை நெஞ்சின்
பெரியோர் மேஎய் இனிதின் உறையும்
குன்று குயின்றன்ன அந்தணர் பள்ளியும்"

குறிஞ்சிப்பாட்டு :

"அந்தி அந்தணர் அயர"

பட்டினப்பாலை :

"நான் மறையோர் புகழ்பரப்பியும்"

"அவிர்சடை முனிவர் அங்கிவேட்கும்
ஆவுதி நறும்புகை முனைஇ"

மேலே குறிப்பிடப்பட்டுள்ள சங்கப் பாடல்களிலிருந்து நாம் அறிவன: நான்கு பிரிவு வேதத்தை நான்குவகை நெறியாளர்களுக்கு அருளியவன் சிவன். அதனால், இந்த நான்கு வேதங்களுக்கும் முதல்வனாக இருப்பவனும், அவ்வேதங்களுள் மறைந்திருப்பவனும் சிவனாகும். (குறிப்பு-தமிழர்கள் சிவனைப் பரம்பொருளாமக் கொண்டு வழிபட்டார்கள் என்பதற்கு ஆதாரமாகச் சங்க நூல்களில் உள்ள குறிப்புக்கள் இந்நூலின் தொடக்கத்திலும் கொடுக்கப் பட்டுள்ளன).

நான்கு பிரிவு வேதம், வேதம் என்றும், நால்வேதம் என்றும் வழங்கப்பட்டது. வேதத்திற்கு மறை என்ற பெயரும் வழக்கி லிருந்தது. அதனால் வேதம், நால்வேதம், மறை, நான்மறை ஆகியச் சொற்கள் எல்லாம் தமிழரின் வேதந்தை குறிப்பவையாகும்

சிவன் ஆலமரத்து நிழலில் அமர்ந்து வேதத்தைஅருளினான். சிவனிடமிருந்து வேதத்தை அறிந்த நான்கு வகை நெறியாளர்கள் 'அந்தணர்' எனக் குறிப்பிடப்படுகின்றனர்' அதனால் இந்த வேதத்தை, மறையை சிவன் அந்தணருக்குப் பகர்ந்தான் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்தணர்களுக்கு இவ்வேத அறிவு கேள்வி மூலம் கிடைக்கப் பெற்றதால் அந்தணர்கள், கேள்வி அந்தனர்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

அந்தணர்கள், சிவன் அருளிய நால்வேதத்தை வழிவழியாக நவின்று வந்து, வேதத்தின் பொருளையும் பயனையும் மற்றவர் களுக்கு வாய்மொழியாக விளக்கிக் கூறி, எல்லோரும் அற வாழ்க்கை நடத்த உதவும் முறையில் ஆறுவகைப் பணி செய்து வாழ்ந்தனர்.

இந்த நான்கு வேதத்தின் அடிப்படையில் அந்தணர்களால் செய்யப்பட்ட விரிவான சிவ வழிபாடு 'வேள்வி' என்ற பெயரில் வழங்கிற்று. அதனால் சிவன் வேள்வி முதல்வன் ஆனான்; வேள்வி செய்த அந்தணர் வேள்வி அந்தணரானார் (குறிப்பு : ஆரிய வேத மதத்தில் குறிப்பிடப்படும் 'யாகம்' என்பதற்குச் சமமாகத் தமிழ்ச் சமுதாயத்தில் வழங்கியது வேள்வி எனலாம்), 'வேள்வி' தமிழ்ச் சொல். கேட்டல், கேட்பித்தல் ஆகிய சொற்களிலிருந்து கேள்வி வந்துள்ளது போல், வேட்டல், வேட்பித்தல் ஆகிய சொற்களி லிருந்து வேள்வி வந்துள்ளது.

மேலே எடுத்துக் கூறப்பட்டுள்ளவை ஆரியரின் வடமொழி வேதங்களுக்குப் பொருந்தாதனவாகும் என்பதைத் தெளிவாக அறியலாம். எங்ஙன மென்றால், சங்க நூல்களில் குறிப்பிடப்படும் வேதம், சிவனை முழுமுதற்பொருளாகக் கொண்டுள்ளது; ஆரிய ரின் வேதங்கள் சிவனை முழுமுதற்பொருளாககக் கொள்ள வில்லை. ஆரிய வேதத்தின் முழுமுதற்பொருள் 'பிரமம்', 'பிரமன்' அல்லது 'ஆத்மன்' அல்லது 'நாரயணன்' என்பதுதான், இது ஆரிய வேத மதத்தினரின் கோட்பாடு. காஞ்சி சங்கராச்சாரியார்கள், 'நாரயணாஸ்மிருதி' என்று கையெழுத்திடுகிறார்கள். சங்கப் பாடல் களில் வரும் வேதம், மறை என்பன 'பிரமம்', 'நாரயண'னோடு தொடர்புள்ளதாகச் சங்க நூல்களில் குறிப்புக் கிடையாது மேலும், ஆரிய வேதம் சிவனால் அருளப்பெற்றதாக ஆரியர்கள் கூற வில்லை; ஆலமரத்து நிழலிலிருந்து அருளப்பட்டதாகக் கூறும் மரபு ஆரியவேதத்திற்குக் கிடையாது. ஆக, சங்கப் பாடல்களில் வருகின்ற வேதம், நால்வேதம் மறை, நான்மறை ஆகிய சொற்

கள் தமிழகத்துக்குரிய, தமிழ் இனத்திற்குரிய தமிழ் வேதத்தைத் தான் குறிக்கின்றன, வடமொழி வேதத்தை அல்ல என்று பொருள் கொள்வதுதான் பொருத்தமாக இருக்கும்.

இதன் தொடர்பாக, மேலே குறிப்பிடப்பட்டுள்ள சங்கப்பாடல்களில் வரும் 'அந்தணர்' என்ற சொல் யாரைக் குறிக்கிறது என்று இப்பொழுது ஆராயலாம். இக்காலத்தில் 'பிராமணர்' என்று குறிக்கப்படுபவரை இச்சொல்(அந்தணர்) அக்காலத்தில் குறித்ததா அல்லது வேறு வகையினரைக் குறித்ததா ? ஆரிய பிராமணரைக் குறிக்காமல் வேறு வகையினரைக் குறித்திருந்தால் அந்த வேறு வகையினர் தமிழ் இனத்தாரா இல்லையா என்று ஆராய்ந்து பார்க்கவேண்டும். 'அந்தணர்' என்றால் யார் என்பதை மேலே குறிக்கப்பட்டுள்ள சங்கப் பாடல்களே தெரிவிக்கின்றன. மதுரைக் காஞ்சி வரிகள் 468 — 475, பதிற்றுப்பத்துப் பாடல் 24, ஆகியவற்றில் அந்தணர்களின் பணி, கடமை விளக்கப்பட்டுள்ளன. தமிழினத்து அந்தணர் ஆறுவகைப் பணி செய்தனர். 'அந்தணர்' எனக் குறிப்பிடப்பட்ட தமிழர் சிவனருளிய வேதத்தை (மறையை) கேள்வி மூலம் கேட்டறிந்து, அதை நவின்று (ஓதி), அதை பிறருக்கும் ஓதுவித்து, வேந்தர்கள் வேண்ட வேள்வியும் செய்து, எவ்வுயிருக்கும் செந்தண்மை பூண்டொழுகினர். அந்தணர் இத்தகைய பணி செய்ததனால்தான், கேள்வி அந்தணர், வேள்வி அந்தணர், மறையோர், நான்மறையோர், மறைகாப்பாளர், நான்மறை முனிவர், நான்மறை முதல்வர், நாவல் அந்தணர், அறுதொழில் அந்தணர், ஆறு அறி அந்தணர் ஆகிய பெயர்களாலே அழைக்கப் பட்டிருக்கின்றனர். இவைகள் எல்லாம் ஆரிய பிராமணரின் மரபிற்கு ஒத்தனவாக இல்லை.

அந்தணர் பற்றித் தொல்காப்பியத்தில் உள்ள கீழ்க்காணும் குறிப்புக்களையும் கவனிக்க வேண்டும்.

"நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங்காலை அந்தணர்க்கு உரிய"

"அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும்"

"அந்தணாளர்க்கு உரியவும் அரசர்க்கு"

"அந்தணாளர்க்கு அரசு வரைவு இன்றே"

இக்காலத்தில் தமிழ்ச் சமுகத்தில் உள்ளது போன்ற சாதிப் பிரிவினை, சங்ககாலத் தமிழ்ச் சமூகத்தில் இருந்ததாக நினைக்கத் தரும் குறிப்புக்கள் சங்க நூல்களில் இல்லை. 'களவியல்' இலக்கணம் கொண்டிருந்த தமிழ்ச் சமுதாயத்தில், சாதிப் பிரிவினைக்கு

இடமேது. ஆரியர் இனத்தில் 'பிராமணர்', 'க்ஷத்திரியர்', 'வைசியர்'' 'சூத்திரர்' என்ற நான்கு வருணங்களிருந்ததை ஆரியர் வேதமும் ஆரியரின் வடமொழி இலக்கியமும் கூறுகின்றன.* ஆரியர் இனத்தார் இந்நான்கு வருணங்களாக வட இந்தியாவில் வேதகாலத்திலிருந்து வாழந்து வந்தனர். ஆரியர் இம்முறையைச் ''சதுர்வருணம்'' என்றனர். ஆரிய இனத்து வைசியர், சூத்திரர் ஆகியவர்களைத்தான், திருமூலர் 1721 ஆவது திருமந்திரத்தில் குறிப்பிடுகிறார். இந்நிலையை வடக்கே நாம் இன்றும் காண்கிறோம். க்ஷத்திரியர், சூத்திரர் என்ற சொற்கள் தொல்காப்பியத்திலோ சங்க இலக்கியத்திலோ கிடையாது. மேலும், வடக்கே பஞ்சமர் (ஹரிஜன்) என்ற ஐந்தாவது பிரிவும் உள்ளது. ஆனால், தமிழ்ச் சமூகம் தங்களிடையே வளர்ந்த பணி, கடமை அடிப்படையில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நான்கு வகையினராக இருந்ததைப் பண்டைய தமிழ் இலக்கியத்திலிருந்து அறிகிறோம். இந்நிலையைத் தொல்காப்பியப் பொருளதிகார மரபியல் சூத்திரங்கள் தெரிவிக்கின்றன. கீழ்க்காணும் தொல்காப்பியச் சூத்திரங்களில் வருகிற 'நால்வர்க்கு' என்ற சொல், தமிழினத்து அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகிய நான்கு வகையினரைத்தான் குறிக்கிறது.

''மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்தே''

''பால்கெழு கிளவி நால்வர்க்கும் உரித்தே''

''பரத்தைவாயில் நால்வர்க்கும் உரித்தே''

சிலப்பதிகாரத்தின் 'அழற்படு காதையில்' 'ஆதிப் பூதம்', 'அரைச பூதம்', 'வணிக பூதம்', 'வேளாண் பூதம்', என, அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகிய நாற்பாலரின் பூதங்களை இளங்கோவடிகள் குறிப்பிடுவது கவனத்துக்குரியது; 'நாற்பால் பூதமும் பாற்பாற் பெயர'.

தமிழர் சமூகத்திலிருந்த இந்த நான்கு வகையினரைக் குறிப்பிட்டுத்தான் சேக்கிழாரும்,

---

* Acharya Vaidyanath Shastr's ''Vedie Caste System'' Om Prakash Tyagis ''Untouchability'' Both published by Sawadeshik Arya Pratinidhi Sabha, New Delhi.

''குறியில் நான்கு குலத்தின ராயினும்
நெறியின் அக்குலம் நீங்கின ராயினும்''

எனக்கூறியுள்ளார். 'குலம்', 'பால்' என்பதற்கு 'வகையார் 'வகை யறா', 'பிரிவு' என்று பொருள் கொள்வதுதான் முறையாகும்.

பண்டையத் தமிழ் இலக்கியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள சாதி', 'குலம்', ஆகிய சொற்களைக் குறிப்பிட்டு, தமிழ்ச் சமூகத் தில் 'சாதிகள்' ஆதியிலிருந்தே உள்ளன என்ற கருத்து வெகு காலமாகத் தெரிவிக்கப்பட்டுவருகிறது. இக்கருத்து, 'சாதி', 'குலம்', ஆகிய சொற்களுக்கு இப்பொழுது வழக்கத்தில் உள்ள பொருளைக் கொள்வதால் ஏற்பட்டுள்ளது. இவ்விரண்டு சொற்க ளும் இப்பொழுதுள்ள பொருளில் அக்காலத்தில் பயன்படுத்தப்பட வில்லை என்பதை கீழே கொடுக்கப்பட்டுள்ள மேற்கோள்களி லிருந்து அறியலாம்.

சம்பந்தர் :

'சந்தமா ரகிலொடு சாதி தேக்கம் மரம்'

'சந்தமா ரகிலொடு சாதியின் பலங்களும்'

'விளவுதேனொடு சாதியின் பலங்களும்'

'சாதிகீத வர்த்தமானர்'

'நீதியானினைத் தேத்தி யுள்கிடச்
சாதியாவினையானதானே'

'..... ............ பொறியில் சமண் சாதியுரைப்பன'

'பிரிவிலிய மர்ந்த பதிதான்
சாதிமணி தெண்டிரை கொணர்ந்துவயல்'

'எரித்தார்க்கு இடம் போலும் புலிமானும்
அல்லாத சாதிகளும்'

'குலமில ராகிலும் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சிவாயவே'

அப்பர் :

'சாதிகளாய பவளமுமுத்துக் தாமங்கள்'

'குலம்பலம் பாவரு குண்டர் முன்னே
நமக்குண்டு கொலோ'

சுந்தரர் :

'தம்மானை யறியாத சாதியாருளரே'

'குலமிலா தானைக் குலவனோயன்று
கூறினும் கொடுப்பாரிலை'

மாணிக்கவாசகர் :

'என் தொழுகுலமே'

'குலம்பாடிக் கொக்கிற கும்பாடி'

'......சிவகருமஞ் சிதைத்தானை
சாதியும் வேதியன் தாதைதனை'

மேலே 'சாதி' எனும் சொல் 'தரமான', பிரிவு, வகை, பிரிவினர், வகையினர், இனம் (category, section, species, sort, kind, group, denomination) முதலிய பொருள்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது; 'குலம்' எனும் சொல் மேன்மை, சிறப்பு போன்ற பொருளில் பயன் படுத்தப்பட்டுள்ளது.

'சாதி' என்ற சொல்லைச் சிவனைச் குறிப்பிடவும் பயன்படுத்தி யுள்ளனர்.

சம்பந்தர் :

'சாதியான் மிக்க சீராற்றருவார் தொழுஞ் சாத்தமங்கை'

அப்பர் :

'சாதியைச் சங்க வெண்ணீற்றண்ணலை'

'சாதியாஞ் சதுர்முகனுஞ் சக்கரத்தானுங் காணா'

'சாதியாம் நான்முகனுஞ் சக்கரத்தானும் காணா'

வடமொழி வேதங்களைச் சாத்திரங்களாகக் கொண்டுள்ள ஆரியர் சமூகத்தின் நான்கு வருணங்களில் முதல் வருணமாகிய பிராமணர்கள், அச்சமூகத்தில் முதன்மை இடம் பெற்றிருந்தனர். அவர்கள், ஏனைய மூன்று வருணங்களுக்கு ஆன்மீகத் தலைவர் களாகக் கருதப்பட்டனர், ஆரியரின் வேத மதத்தில் பிராமணர்கள் தனிப்பட்ட உயர்ந்த இடம் பெற்றிருந்ததாலேயே, ஆரியரின் வேத மதம் பிராமணர் மதம் (Brahminical religion) என்றும் அக்காலத் தில் வழங்கலாயிற்று. இந்த ஆரிய வேத மதம், இதே நிலையில் இந்தோனீசியா நாட்டைச் சேர்ந்த பாலித் (Bail) தீவில் இன்றும் நிலவி வருகிறது. ஆரியரின் சதுர் வருணங்கள் பாலித்தீவில் உள்ளன. இவர்களின் ஆரிய வேத மதம் அதாவது பிராமணர் மதம், இப்பொழுது இந்து மதம் என்றும் வழங்குகிறது; இவர்கள் எல்லோரும் இந்துக்கள் என்றும் அழைக்கப்படுகின்றனர். வட

இந்தியாவில் சமண புத்த மதங்கள் தோன்றுவதற்கு, ஆரியசமூகத்தில் அன்றிருந்த பிராமணர் ஆதிக்கம் (Brahmin Priesthood, Brahmin Supremacy) ஒரு காரணம் என்பது வரலாறு தெரிவிக்கும் செய்தி. இத்தகையதொரு ஆதிக்க நிலை, சங்கப்பாடல்களில் குறிப்பிடப்படும் தமிழின அந்தணர்க்கு அக்காலத்தில் தமிழ்ச் சமூகத்தில் கிடையாது என்பது குறிப்பிடத்தக்கது.

அம்+தண் = அந்தண் — அதவது குளிர்ச்சியுடைய, குளிர்ச்சி பொருந்திய; அம் + தண்ணன் = அந்தணன்; அதாவது நல்ல குளிர்ந்த தன்மையுடையவன், அன்புள்ளம் கொண்டவன், அருள் உள்ளம் கொண்டவன். 'அந்தணன்' தமிழ்ச்சொல்.

திருமந்திரம்

2105 – 'போற்றிசெய் அந்தண் கயிலைப் பொருப்பனை'

795 – நடுவுநில்லாமல் இடம் வலம் ஓடி
அடுகின்ற வாயுவை அந்தணன் கூடி'

சேக்கிழார்

'அந்தண் மறையோர் ஆகுதிக்கும்'

'அந்தணன்' எனும் தமிழ்ச்சொல்லுக்குள்ள பொருள் பிராமணர் என்ற சொல்லுக்குக் கிடையாது. அந்தணர் என்ற சொல் வழக்கு ஆரியரின் மொழியில இல்லை. வடமொழியில் உள்ள சொல் ,பிராமணர்'; 'பிராமணர்' வடமொழிச் சொல். தமிழ்நாட்டில், 'பிராமணர்' என அழைக்கப்படுகிறவர்கள் வடமொழியில் ஈடுபாடு உள்ளவர்கள்; ஆரிய வேதங்களின் நெறியை கடைப்பிடித்து வருபவர்கள். இவர்களை ஒத்தவர்கள். 'பிராமணர்' என்ற பெயரில் இந்தியாவின் எல்லா பகுதிகளிலும் இருப்பதைக் காண்கிறோம். தமிழைத் தாய்மொழியாகக்கொண்டு, வடமொழியில் இயல்பான தொடர்பு இன்றியும், ஆரிய வேத நெறி முறைகளுக்கு உரியவராக இல்லாமலும் உள்ள தமிழினத்தவருக்கும் பிராமணருக்கும் இடையே, வாழ்க்கைமுறையிலும், பழக்க வழக்கங்களிலும் பல வேறுபாடுகள் இயற்கையாக இருந்து வரும் நிலை யாவரும் அறிந்ததே. ஆக, 'அந்தணர்' சொல் ஆரியருக்குரியதல்ல, ஆரியரையும் குறிக்கவுமில்லை. ஆதியில் 'அந்தணர்' என்ற சொல்லிக்கும் ஆரிய பிராமணருக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை.

இவைகளிலிருந்து, தொல்காப்பியத்திலும் சங்கப் பாடல்களி லும் வரும் 'அந்தணர்' என்ற சொல் ஆரிய சமூகத்து பிராமணரைக் குறிக்கவில்லை என்பதும், இச்சொல் தமிழ் இனத்திலிருந்த ஒரு வகையினரையே குறித்தது என்பதும் தெளிவாகின்றன. பிரா மணரைக் குறிக்க 'பிராமணர்' என்ற பெயரைத்தானே பயன்படுத் தியிருக்கவேண்டும்.

ஆக, சங்க நூல்களில் எந்த வேதம் சிவனருளிய வேதம் என்று குறிப்பிடப்படுகிறதோ, எந்த வேதம் தமிழ் இன அந்தணரோடு தொடர்புபடுத்திக் குறிப்பிடப்படுகிறதோ அந்த வேதம் ஆரியர் வேதம் அல்ல என்றும், அந்த வேதம் ஆரியர் வேதத்திற்கு வேறான தமிழர் வேதம் என்றும், தமிழர் வேதத்தோடு தொடர்புபடுத்தப் பட்டுள்ள அந்தணர், தமிழ் இனத்தைச் சார்ந்தவரே, பிராமணர் அல்ல என்றும், சங்கப்பாடல்களிலிருந்தே அறிகிறோம். இவை களையே பிற்காலத்தில் தோன்றிய திருமுறைகள் வலியுறுத்திக் கூறி உறுதிப்படுத்தியுள்ளன.

சிவன், நான்கு பிரிவு வேதத்தை நால்வர்க்கு அருளி, ஆக மத்தையும் அருளியதாகக் கருதப்படுவதற்கும், 'அந்தணர்' என்ற சொல் ஆதியில் தமிழினத்தினரைக் குறித்தது என்பதற்கும் ஆதாரமாகத் திருமுறைகளில் உள்ளவை கீழே கொடுக்கப்படு கின்றன.

திருமூலர் திருமந்திரம் (பத்தாம் திருமுறை).

திருமந்திரம் 72—"............................ அண்ணல்
கொழுந்தண் பவளக் குளிர்சடையோடே
அழுந்திய நால்வர்க்கு அருள்புரிந்தானே"

" 2087—"விரைந்தன்று நால்வர்க்குமெய்ப்பதி சூழ்ந்து
புரந்த கல்லால் நிழற் புண்ணியன்
சொன்ன"

" 1765—"நால்வர் பிரானை"

" 52—"வேதம் உரைத்தானும் வேதியனாகிலன்
வேதம் உரைத்தானும் வேதா விளங்கிட
வேதம் உரைத்தானும் வேதியர் வேள்விக்
காய்
வேதம் உரைத்தானும் மெய்ப்பொருள்
காட்டவே"

" 227—"...................நால்வேதத் திருநெறியான கிரியை இருந்து"

" 55—'ஆறங்கமாய் வரு மாமறை ஓதியை"

" 626—"நம்பனை ஆதியை நான்மறை ஓதியை"

" 1098—"சாற்றிய வேதம்............"

" 1733—"அத்திசைக்குள்ளே அமர்ந்தன நால் வேதம்"

" 59—"அண்ட முதலான் அறஞ் சொன்ன வாறே"

" 61—"பரனாய் பராபரங் காட்டி உலகில்
தரனாய்ச் சிவதன்மந் தானே சொல் காலத்
தரனாய் அமரர்கள் அர்ச்சிக்கு நந்தி
உரனாகி ஆகமம் ஓங்கி நின்றானே

" 2404—"முதலாகும் வேத முழுதா கமமகப்
பதியான ஈசன் பகர்ந்த திரண்டு
முதிதான வேத முறைமுறை யாலமர்ந்து
அதிகாதி வேதாந்த சித்தாந்த மாமே"

" 2403—"மன்னிய சோகமா மாமறை யாளர்தஞ்
சென்னியதான சிவயோகமாம் ஈதென்ன
அன்னது சித்தாந்த மாமறை யாய்பொருள்
துன்னிய ஆகம நூலெனத் தோன்றுமே"

" 894—"வாறே சதாசிவ மாறிலா ஆகமம்
வாறே சிவகதி வண்டுறை புன்னையும்
வாறே திருக்கூத்து ஆகம வசனங்கள்
வாறே பொதுவாகு மன்றின் அமலமே"

" 895—"அமலம் பதிபசு பாசங்கள் ஆகமம்
அமலம் திரோதாயி யாகுமா னந்தமாம்
அமலஞ்சொல் ஆணவ மாயை காமியம்
அமலந் திருக்கூத்தங் காமிடந் தானே"

" 2384—"விவற வேதாந்த சித்தாந்த மேன்மையைக்
கூறி யருளிய கோனைக் கருதுமே"

" 2385—"கருதும் அவர்தம் கருத்தினுக்கு ஒப்ப
அரனுரை செய்தருள் ஆகமந் தன்னில்
வருசமயப் புறமாயை மாமாயை
உருவிய வேதாந்த சிந்தாந்த
உண்மையே"

" 247—"அத்தன் சிவன் சொன்ன ஆகம
நூல்நெறி"

" 2379—"ஆகும் அனாதி கலை ஆகம வேதம்"

" 2399—"ஆகு மறையாகம மொழிந்தானன்றே"

" 2397—"வேத மோடாகமம் மெய்யாம் இறைவன்
நூல்"

" 2994—"வள்ளற் றலைவனை வான
நன்னாடனை
வெள்ளப் புனற்சடை வேத
முதல்வனை"

" 2604—"கைகலந்தானைக் கருத்தினுள் நந்தியை
மெய்கலந்தான் தன்னை வேத
முதல்வனை"

" 2636—"அறிவுடையானரு மாமறையுள்ளே
செறிவுடையான் ............"

" 53—"இருக்கு உருவாம் வேதத்தினுள்ளே
உருக்கு உணர்வாய் உணர் வேதத்தின்
ஓங்கி
வெருக்கு உருவாகிய வேதியர் சொல்லும்
கருக்குருவாய் நின்ற கண்ணனுமாமே"

" 2700 –"............ சிவவேதமே ........"

" 2578—"..............சிவவேதத் திரியிலும்......"

" 2791—"சிவமாடும் வேதாந்தச்
சித்தாந்தத்துள்ளே"

" 2856—"வேதம் ஓதுஞ் சொருபதன்
மேன்மையே'

" 1871—"பண்டை மறையும் படைப்பளிப்
பாதியுங் கண்ட சிவனும்'

” 190 “வேங்கடநாதனை வேதாந்தக்
கூத்தனை”

” 2729—“வேதங்களாட மிகு ஆகம மாட
...............................
...............................
நாதங்கொண் டாடினான் ஞானாந்தக்
கூத்தே”

” 1565—“மினற்குறி யாளனை வேதியர் வேதத்
தனற்குறி யாளனை ஆதிபிரான்தன்னை
நினைக்குறி யாளனை ஞானக்
கொழுந்தின்
நயக்குறி காணில் அரனெறியாமே”

” 234—“அந்தண்மை பூண்ட அருமறை
அந்தத்துச்
சிந்தைசெய் அந்தணர் சேரும்
செழும்புவி
நந்துதல் இல்லை நரபதி நன்றாகும்
அந்தியும் சந்தியும் ஆகுதி பண்ணுமே”

” 57—“அஞ்சன மேனி அரிவையோர் பாகத்
தன்
அஞ்சொ டிருபத்து மூன்றுள ஆகமம்
அஞ்சலி கூப்பி அறுபத் தறுவரும்
அஞ்சா முகத்தில் அரும்பொருள்
கேட்டதே”

” 1714—“போகமும் முத்தியும் புத்தியுஞ் சித்தியும்
ஆகமும் ஆறாறு தத்துவத் தப்பாலாம்
ஏகமும் நல்கி யிருக்குஞ் சதாசிவம்
ஆகம வத்துவா வாறுஞ் சிவமே.”

” 1719—“முத்துடன் மாணிக்கம் மொய்த்த
பவளமுங்
கொத்துமக் கொம்பு சிலை நீறு கோமளம்
அத்தன்றன் னாகம மன்ன மரிசியாம்
உய்த்ததின் சாதனம் பூமண லிங்கமே”

” 800—“அறங்கேட்டும் அந்தணர் வாய்மொழி
கேட்டு

,, 216— 'அணைத்துணை அந்தணர் அங்கியுள் அங்கி
அணைத்துணை வைத்து..........''

,, 215 –''ஆகுதி வேட்கும் அருமறை அந்தணர்''

,, 214—'' . ...................... வேத முதலாம்
அசைவிலா அந்தணர் ஆகுதி வேட்கிலே''

,, 1861—''ஆறிடும் வேள்வி அருமறை நூலவர்
கூறிடும் அந்தணர்''

,, 224 — ''அந்தணராவோர் அறுதொழில் பூண்டுளோர்''

,, 233 — ''அறிவோர் மறைதெரிந்த அந்தணராம்''

,, 230 — ''நூலது அந்தணர் காணும் நுவலிலே''

,, 1860— ''அகரம் ஆயிரம் அந்தணர்க் கீயிலென்''

காரைக்காலம்மையார் :

''வேதியனை வேதப் பொருளானை வேதத்துக்கு ஆதியனை''

சம்பந்தர் :

''ஓரால் நீழல் ஒண் கழலிரண்டும்
முப்பொழுது ஏத்திய நால்வர்க்கு ஒளிநெறி காட்டினை''

''நூலடைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு
மாலடைந்த நால்வர் கேட்க நல்கிய நல்லறத்தை
ஆலடைந்த நீழல்மேவி அருமறை சொன்னது என்னே
சேலடைந்த தண் கழனிச் சேய் ஞலூர் மேயவதே''

''விரித்தவன் வேதங்கள் வேறு வேறு தெரித்தவன்''

''பூதநாயகன் நால் வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவாய்
ஆவதும் இதுவே

''வேதம் ஓதி வெண்ணூல் பூண்டு வெள்ளை எருது ஏறிப்
பூதம் சூழப் பொலிய வருவார் புலியின் உரித்தோலார்''

''மறை ஓதும் எங்கள் பரமன்''

''தொகுத்தவன் அருமறை அங்கம் ஆகமம் வகுத்தவன்''

"விண்ணுனார்மறைள் வேதம் விரித்தோதுவார்'
"விரித்தவன் அருமறை"

"தூயானைத் தூயவாயம் மறையோதிய வாயானை"

"வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம்
நமச்சிவாயவே"

"இருக்கு நான்மறை ஈசனையே தொழும்"

"வெந்தபொடிப் பூசிய வேத முதல்வன்"

"மாறா மறை நான்காய்"

"மறையோனுறை கேயில்"

"நான்மறை ஓதி ஐவகை வேள்வி
அமைத்து ஆறு அங்க முதலெழுத்து ஓதி"

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்"

"அங்கமும் வேதமு மோது நாவ
ரந்தனர்"

"புண்ணிய நான்மறை யோர்கள் ஏத்தும்'

"புரிநூல் மறையாளர் ஏத்த"

அப்பரடிகள் :

"விரித்தானை நால்வர்க்கு வெவ்வேறு வேதங்கள்
புரித்தானை"

"அங்கங்களாறு நான்கும் அந்தணர்க் கருளிச்செய்து"

"ஆலின் கீழ் நால்வர்க் கறத்தான் கண்டாய்"

"அறங்காட்டி அந்தணர்க்கு அன்று ஆல நிழல்
அறமருளிச் செய்த அரனார்"

"அரிய நான்மறை யோதிய நாவரோ"

"நெறியும் அறிவும் செறிவு நீதியு
மறை நான்கும் விரித்துகந்நீர்"

"நாலாய மறைக் கிறைவரானார் போலும்"

"நிறைவுடையாய் மறைவல்லாய் நீதியானே'

"வேதந்தான் விரித்தோத வல்லானை"

''நீங்காமை வைத்துகந்த நீதியானே''

''விரித்தானை நான்மறையோடங்க மாறும்''

'' ......... ...... உணர் மெய்ஞ்ஞானம்
விரித்தவன்காண் விரித்த நால்வேதத்தான் காண்''

''அருளாகி ஆதியாய் வேதமாகி''

''நால் வேதத் துருவானை''

''மறை நான்கு மாயினான் காண்''

''ஆயந்தவன்காண் அருமறையோடு அங்கம் ஆறும்
அணிந்தவன் காண்''

''நான்மறையொ டாறங்கம் வல்லானை''

''நால்வேத மாறங்க மாயினான்'

''அருமறையவை அங்கம் வல்லானை''

''வேதத்தின் பொருளானாய்''

''மறை நான்கும் ஆனாய் ஆறு அங்கம் ஆனாய்''

''அரியானை அந்தணர்தம் சிந்தையானை
அருமறையின் அகத்தானை அணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனை ..... .........''

''மறையோன் தன்னை''

' தீதிலா மறையவனை''

''மலங்கெடுத்து மாதீர்த்தம் ஆட்டிக் கொண்ட மறையவனை''

''வேதியா வேதகீதா விண்ணவர் அண்ணா என்று என்று''

''வேதப் படையனை''

''மறைவிரி நாவன்''

''மறையார்ந்த வாய்மொழியான்''

''நாவார்ந்த மறைபாடி நட்டமாடி''

''மந்திரமுந் தந்திரமும் மருந்து மாகி''

''அந்தணர்க்கு அருங்கல மருமறை ஆறங்கம்''

சுந்தரர் :

''அன்றாலின்னிழற்கீ ழறநால்வர்க் கருன்புரிந்து''

"போர்த்த நீள்செவி யாளரந்தணர்க்குப் பொழில் கொளா
னிழற்கீழறம் புரிந்து"

'மறைநான்குங் கல்லானிழற்கிழ்ப்பண்ணிய வெங்கள் பிரான்"

"நால்வர்க் காலின் கீழுரைத்த அறவனை"

"நான்மறை அங்க மோதிய நாவன்"

"வேதநான்கும் விரித்தோதியோர் நம்பி"

"மறை நான்கும் விரித்துகந்தீர்"

"வேதந்தான் விரித்தோத வல்லான்"

"பன்னு நான்மறை பாடவல்லானை"

"வேதத்தின் பொருளானை"

"அருமறையின் பொருளை"

"அருமறையவை அங்கம் வல்லானை"

"மறைப் பொருளே"

"மறைப் பொருளை"

"மறையின் பொருளான வனே"

"தூய மறைப்பொருளாம் நீதியை"

"பாடு மாமறை பாடவல்லானை"

"அங்கமாறு மாமறையொரு நான்கு மாய நம்பனை"

"வேதமோதி வெண்ணீறு பூசி"

"மறையவனை வாய்மொழியை"

"அகத்தடிமை செய்யு மந்தணன்"

"புண்ணிய நான்மறையோர் முறையாலடி போற்றிசைப்ப"

மாணிக்கவாசகர் :

"நன்றாக நால்வர்க்கும் நான்மறையின் உட்பொருளை
அன்று ஆலின் கீழிருந்து அங்கு அறம் உரைத்தான்
காணேடி"

"அன்று ஆல நிழற்கீழ் அருமறைகள் தானருளி"

''மிக்க வேதமெய்ந்நூல் சொன்னவனே''

''வேத மொழியர் வெண்ணீற்றர்''

''..........வேதங்கள்
ஐயா என ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே''

''வேத முதல்''

''வேத விழுப்பொருளை''

''வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு''

''மூவா நான்மறை முதல்வா போற்றி''

''நந்தம்பாடியில் நான்மறை போனாய்
அந்தமில் ஆரிய னாயமர்ந்தருளியும்''

''ஆய நான்மறையவனும் நீயே யாதல்''

''மறையுமாய் மறையின் பொருளுமாய்
வந்தென் மனத்திடை மன்னிய மன்ன''

''வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடி''

''மறையிலீறு''

''மறையான்''

''மறையோன்''

''கோல மறையோனே''

''மாமறையோன்''

''மன்னு மாமலை மகேந்திரமதனிற்
சொன்ன ஆகமம் தோற்றுவித்தருளியும்''

''ஆகமம் ஆகி நின் றண்ணிப்பான் தாள் வாழ்க''

''தென்னன் பெருந்துறையின் மேயானை வேதியானை
மாதிருக்கும் பாதியனை''

''மெய்யானை வேதியனை''

''வேதி போற்றி''

''மெய்தரு வேதியனாகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி''

"வெளிய நீறாடும் மேனி வேதியன்"

"உருநாம் அறியவோர் அந்தணனாய் ஆண்டு கொண்டான்"

"அளிவந்த அந்தணனை"

"அருவாய் மறைபயில் அந்தணனாய் ஆண்டு கொண்ட"

"அந்தணனாகி வந்திங்கே அழகிய சேவடி காட்டி"

"அந்தணனாவதுங் காட்டி வந்தாண்டாய்"

சேந்தனார் :

"மாலுக்குச் சக்கரம் அன்றருள் செய்தவன் மன்னிய தில்லை
தன்னுள்
ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற சிற்றம்பலமே இடமாக"

சேக்கிழார் :

"முந்தை மறை ஆயிரம் மொழிந்த திருவாயான்"

"முந்தை மறை முதல்வர்"

"எழுதாத மறையளித்த எழுத்தறியும் பெருமானை"

"தூமறை பாடும் வாயார்"

"எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர்"

"நான்மறையின் கோமானை நதியினுடன் குளிர்மதி வாழ்
சடையன்"

"வேத மொழி மூலத்தை"

"விடையானை வேதியனை"

"வேத நன்னெறியின் வாய்மை விளங்கிட"

"நான்மறை முனிவனார்க்கு நம்பியாரூரர் தோற்றீர்"

"நான்மறைகள் ஏத்தும் சீலமே! ஆலவாயிற் சிவ
பெருமானே!

"ஆட்கொள வந்த மறையவனே"

"வேதப் பயனாஞ் சைவம் போல்"

"செழுமறை முனியை நோக்கி"

"புண்ணிய முனிவர்"

"அந்தணனாம் எந்தை பிரான் அருமறையோர் முன்
பகர்வான்"

"அந்தண் மறையோர் ஆகுதிக்கும்"

"அந்தணர் தேவர் ஆன் இனங்கள் வாழ்க"

"சைவ அந்தணர் குலத்துள்"

"நான்மறையோர் முன்னர்"

"நன்பல மறையோர் முன்னர்"

"நான்மறைப்பொருள் விளக்கிய நலத்தார்"

"ஏய்ந்த சீர் மறையோர் வாழும்"

"முந்நூல் முனிவர்"

"ஆதி மாமறை ... ..........
...............வேள்வி
வேத வேதியர்........"

"நலஞ்சிறந்த ஞான யோகக் கிரியா சரியை யெலாம்
மலர்ந்த மொழித் திருமூலர்"

'உள்ளுணர் வான ஞானம் முதலிய ஒரு நான்குண்மை
தெள்ளுதீந் தமிழாற் கூறும் திருமூலர்"

"இந்திரன் மால் அயன் முதலாம் இமையவர்க்கு நெறியருளும்
நந்தி திருவருள் பெற்ற நான்மறையோகிகள் ஒருவர்"

"ஊனுடம்பிற் பிறவி விடம் தீர்ந்துலகத்தோர் உய்ய
ஞான முதல் நான்குமலர் நற்றிருமந்திரமாலை"

பின்னர் வந்த, தாயுமானவர்

"கல் ஆலின் நீழல்தனில் ஒரு நால்வர்க்கும்
கடவுள் நீ உணர்த்துவதும் கைகாட்டென்றால்" எனவும்,

இ மலிங்க சுவாமிகள்

"பொருட்சாரும் மறைகள் எலாம் போற்று
கின்ற தெய்வம்" எனவும் பாடியுள்ளார்கள்.

திருமூலர் திருமந்திரம், காரைக்காலம்மையார் பாடல்கள் நால்வர் பாடல்கள், சேக்கிழார் பெரியபுராணம் ஆகியவைகளி

லிருந்து எடுத்து மேலே கூறப்பட்டுள்ளவை, சங்கப் பாடல்கள் நால்வேதம் பற்றித் தெரிவித்ததை உறுதிப்படுத்தி மேலும் சில விளக்கங்களைக் கொடுப்பதையும் காண்கிறோம். இந்நூல்கள் எல்லாம் சேர்ந்து தெரிவிக்கும் விவரங்களை இங்கே தொகுத்துக் காண்போம்.

தமிழினத்தார் வழிபடும் இறைவனான சிவன் வேதமும் ஆகமமும் அருளினான். வேதம், மறை ஆகிய இரண்டு சொற்களும் ஒன்றைத் தான் குறிக்கின்றன. சிவனே வேதத்தை அருளியதால், சிவனே வேதத்தின் முதல்வனானான், மறைமுதலானான், வேதமே ஆனான், மறையேயானான், வேதத்தின் (மறையின்) உட்பொரு ளானான், மெய்ப்பொருளானான். நான்கு வேதத்திலும் மெய்ப் பொருளாக உள்ளது நமச்சிவாயமே. இந்தத் தமிழ் வேதத்தில் விளைந்தது தமிழரின் சைவ சமயம். வேதம், ஆகமம் ஆகிய இரண்டையும் சிவன் நால்வர்க்கு அருளினான். இந்நால்வர் சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமரர், ஆகிய பெயர்களை யுடைய நால்வர் என நூல்களில் விளக்கம் கொடுப்பது மரபாக இருந்து வருகிறது. இப்பெயர்களைச் சங்க நூல்களோ திருமுறை களோ குறிப்பிடவில்லை. அதனால், இப்பெயர்களையுடைய நால்வர்க்கு சிவன் வேதத்தை அருளினான் என்று கூறப்படுவது பொருத்தமற்றதாகும். திருமுறைகளும் தமிழ்ச் சாத்திரங்களும் தமிழரின் சைவ சமய அடிப்படையில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நெறிகளை அல்லவா விளக்குகின்றன. இந்நெறிகளை முறையே ‘சீலம்’, ‘நோன்பு’, ‘செறிவு’, ‘அறிவு’, எனவும், ‘ஒழுக்கம்’, ‘செயல்’, ‘உள்ளொருமை’, ‘தெள்ளறிவு’ எனவும், ‘தாசமார்க்கம்’ (தொண்டு நெறி), ‘சற்புத்திர மார்க்கம்’ (மகனெறி), சகமார்க்கம் (தோழமை நெறி), சன்மார்க்கம் (அறிவு நெறி) எனவும் சித்தாந்தச் சாத்திரங்களும், தோத்திரங்களும், குறிப்பிடுகின்றன. தமிழகத்தில் இந்நான்கு நெறிகளும் அறநெறி, நன்னெறி, நீதி எனப் பொதுவாக ஆதியிலிருந்து கருதப்பட்டு வருகின்றன என்பதை முன்னர்க் குறிப்பிட்டுள்ள சங்கப் பாடல் களிலிருந்தும், திருமுறைப்பாடல்களில் இருந்தும் அறிகிறோம். சேக்கிழார் ‘வேத நன்னெறி’ என்றும் பாடியுள்ளார். வேதத்தையே அறம் என்று பதிற்றுப்பத்து கூறுகிறது (பா. 64). இதை உறுதி செய்கின்ற வேறு பாடல்களும் கீழே கொடுக்கப்படுகின்றன.

திருமந்திரம்:

51—“வேதத்தை விட்ட அறம் இல்லை வேதத்தின்
ஓதத் தகும் அறம் எல்லாம் உள”

59—''அண்ட முதலான் அறஞ் சொன்னவாறே''

1544—''அரிதவன் வைத்த அறநெறி தானே''

கந்தபுராணம் :

''வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்
கோன் முறை அரசு செய்க குறைவு இலாது உயிர்கள் வாழ
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலகம் எல்லாம்

இந்த அறநெறியின் உறுதிப்பொருளாக (புருஷார்த்தங்கள்) உள்ளவை அறம், பொருள், இன்பம், வீடு ஆகும். இவற்றைத்தான் 'புருடார்த்த நன்னெறி' எனும் திருமந்திர சொற்றொடர் குறிப்பிடுகிறது (1898). இவைகளில் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றையும், தமிழர்கள் மும்முதற் பொருளாகக் கருதுகிறார்கள். இதைத்தான்,

''அந்நிலை மருங்கின் அற முதலாகிய
மும்முதற் பொருட்கும் உரிய என்ப'' எனவும்,

''இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு'' எனவும்,
தொல்காப்பியச் சூத்திரங்கள் குறிப்பிடுகின்றன,

''அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்
ஆற்றும் பெரும'' என்றும் பா. 28

''சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம்போல'' என்றும் 31
புறநானூறு கூறுகிறது.

''ஆற்றல்சால் கேள்வி அறம் பொருள் இன்பத்தைப்
போற்றிப் புனைந்த பொருளிற்றே'' என்று குறிஞ்சிப்
பாட்டின் தனிப் பாடலில் வருவதையும் காண்கிறோம்.

தமிழ் இனத்தின் அன்றைய அறநெறியின் வெளிப்பாடாக அமைந்துள்ளவை திருக்குறளும் திருமந்திரமும் (குறிப்பாக முதல் தந்திரம்) என நாம் பெருமை கொள்ளலாம். கீழ்க்காணும் குறள்கள் கவனத்துக்குரியவை :

ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல்.

அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன் பழிப்பது இல்லாயின் நன்று.

சிறப்புஈனும் செல்வமும்ஈனும் அறத்தி னூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு.

அறத்தான் வருவதே இன்பம் மற்றும் எல்லாம்
புறத்த புகழும் இல.

யான்எனது என்னும்செருக்கு அறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்.

திருமூலர், அறவாழ்க்கைபற்றிக் கூறும் முதல் தந்திரத்துடன், தன் சாத்திரத்தைத் தொடங்கியுள்ளார் என்பதைக் கவனிக்க வேண்டும். இதில் திருக்குறளில் உள்ள அதிகாரங்கள் சிலவற்றின் தலைப்புக்களைக் காண்கிறோம். அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய உறுதிப் பொருள்களின் முடிவினைத்தான் திருமூலர் 'நாற் போத அந்தமும்' எனக் குறிப்பிடுகிறார் (2792). ஆக, இவ் உறுதிப் பொருள்கள், சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு நெறிகளுக்கு அடிப்படையான அறநெறியில், அடங்கி உள்ளன. இந்த அறநெறிதான் சிவனருளிய வேதத்தின் அடிப்படை அதனால்தான்,

"......................... ஐம்புலனும்
அழிந்த சிந்தை அந்தணாளர்க்கு அறம் பொருள் இன்பம் வீடு
மொழிந்த வாயான் முக்கண் ஆதி மேயது முது குன்றே"

எனத் திருஞானசம்பந்தரும்,

"........ஆலதன் கீழிருந்து நால்வர்க்
கறம் பொருள் வீடின்பம் ஆறங்கம் வேதம்
தெரித்தானை ............"

எனத் திருநாவுக்கரசரும்,

அருந்தவருக் காலின்கீழ் அறமுதலா நான்கனையும்
இருந்தவருக்கு அருளுமது எனக்கறிய இயம்பேடீ
அருந்தவருக்கு அறம் முதல் நான்கு அன்றருளிச்
செய்திலனேல்
திருந்த அவர்க்கு உலகியற்கை தெரியாகாண் சாழலோ !

என மாணிக்கவாசகரும்

''அறம் பொருள் இன்பமான அறநெறி''
என சேக்கிழாரும் பாடியுள்ளார்கள்.

ஆக, உறுதிப் பொருளான அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கினையும் அடிப்படையாகக் கொண்டுள்ள அற நெறியின்பாற்பட்ட வாழ்வில், கடைபிடிக்க வேண்டிய நெறிகளாக அமைந்துள்ளவையே சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்குமாகும். இந்நான்கு நெறிகளைத் திருமூலர் 1443 முதல் 1506 முடிய உள்ள திருமந்திரங்களில் விளக்கியுள்ளார். இந்நான்கு நெறியாளர்களின் நிலை கீழுள்ள திருமந்திரத்தில் (1447) குறிப் பிடப்பட்டுள்ளது.

சார்ந்த மெய்ஞ்ஞானத்தோர் தானவனாயினோர்
சேர்ந்தவெண் யோகத்தர் சித்தர் சமாதியோர்
ஆய்ந்த கிரியையோர் அருச்சனை தப்பாதோர்
நேர்ந்த சரியையோர் நீள் நிலந்தோரே.

திருமூலர், இந்நான்கு நெறிகளைப் பாடவல்லார் நெறி (அடியார் நெறி), ஆடவல்லார் நெறி (பத்தர் நெறி), நாடவல்லார் நெறி (யோக நெறி), தேடவல்லார் நெறி (ஞான நெறி) என்ற பெயர் களாலும் குறிப்பிடுகிறார்,

''நலஞ்சிறந்த ஞானயோகக் கிரியா சரியை யெல்லாம்
மலர்ந்த மொழித் திருமூலர் தேவர்'' என்றும்.

''உள்ளுணர் வான ஞானம் முதலிய ஒரு நான்குண்மை
தெள்ளுதீந் தமிழிற் கூறும் திருமூலர்'' என்றும்

''ஞான முதல் நான்கு மலர் நற்றிருமந்திரமாலை''
என்றும் சேக்கிழார் திருமூலரைப் பாராட்டியுள்ளார்.

''விரும்புஞ் சரியை முதல் மெஞ்ஞான நான்கும்'' என்று கூறி யுள்ளார் தாயுமானவர்.

இந்நான்கு நெறிகளையும் மேற்கொள்பவர்களை, அடியார் (தொண்டர்), பத்தர் (பக்தர்), யோகி, ஞானி என்ற பெயர்களால் திருமுறைகளும் சாத்திரங்களும் குறிப்பிடுகின்றன.

''இந்திரன்மால் அயன்முதலாம் இமையவர்க்கு நெறியருளும்
நந்தி திருவருள் பெற்ற நான்மறை யோகிகள் ஒருவர்''

என்பது சேக்கிழார் வாக்கு. சைவ சமயகுரவர்களாகிய சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் முறையே சத்புத்ர மார்க்கம், தாச மார்க்கம், சக மார்க்கம், சன்மார்க்கம் ஆகிய நெறிகளைப் பின்பற்றியவர்கள் என்பது தமிழகத்துச் சைவ சமயத்தின் வரலாற்றுச் செய்தியாக விளங்கிவருகிறது.

ஆக, இந்நான்கு நெறிகளில் ஈடுபடுகிற நான்கு வகையினருக்குச் சிவன் வேதத்தை அருளினான் என்று பொருள் கொள்வதுதான் முறையாகவும், பொருத்தமாகவும் இருக்கும். இந்நான்கு நெறிகளும் சிவப்பேற்றை அடைவதற்கான வழிகளாகும். இவ்வாறு நான்கு வகையினருக்கு நான்கு நெறிகளைச் சிவன் உணர்த்தியதால், சிவன் உணர்த்திய வேதம் நான்கு பிரிவு வேதமாயிற்று. அதாவது நாஅல் வேதம், நான்கு வேதம், நான் மறை, நான்குமறை என ஆயிற்று. 'நால் வேதத் திருநெறியான கிரியை யிருந்து' எனத் திருமூலர் திருமந்திரத்தில் (227) கூறியிருப்பதைக் கவனிக்கவேண்டும். ஆரிய வேதம்பற்றி இத்தகைய கருத்து கிடையாது.

மேலும், ஆரிய வேதத்தின் மெய்ப்பொருள் 'பிரமம்', 'நாராயணா'. ஆனால் தமிழ் வேதத்தின் மெய்ப்பொருள் 'நமச்சிவாய'. தமிழ் வேதத்தின் அஞ்செழுத்து மந்திரம் 'நமசிவாய','சிவாயநம'. (திருமந்திரங்கள் 809, 903, 905, 912, 922, 923, 930, 2499, 2703, 2704, 2962).

திரும. '2708—பிரான் வைத்த ஐந்தின் பெருமை உணரா'

2962—ஒன்றுகண்டீர் உலகுக் கொரு தெய்வமும்
ஒன்றுகண்டீர் உலகுக்குயி ராவது
நன்றுகண்டீர் இனி நமச்சிவாயப் பழந்
தின்று கண்டேற்கிது தித்தித்த வாறே.

அப்பர் :

'நமச்சிவாயவென்னு மஞ்செழுத்தும்'
'நாமவெழுத் தஞ்சாய நம்பர்போலும்'

சம்பந்தர் :

பஞ்சாக்கரத் திருப்பதிகம்.
நமச்சிவாயத் திருப்பதிகம்.

'வேதம் நான்கினு மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே'

ஆரிய வேத சமயத்தில் 'நமஸ்வாயா' பிற்காலத்தில் சேர்ந்தது.

அதுவுமன்றி, சிவன் ஆலமரத்தின் கீழிருந்து வேதத்தை அருளினான் என்று கூறப்பட்டு வரும் மரபைச் சங்க நூல்களிலும் திருமுறைகளிலும் காண்கிறோம். ஆரிய வேதத்திற்கு இத்தகைய மரபு கிடையாது.

இந்நான்கு வகையினர் 'அந்தணர், என்ற பெயரால் திருமுறைகளிலும் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காண்கிறோம், மேலும், சங்கப் பாடல்களில் 'அந்தணர்' பற்றி என்ன விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளதோ, அதே விளக்கம் திருமுறைகளிலும் கொடுக்கப்பட்டுள்ளதையும் பார்க்கிறோம். ''அந்தண்மை பூண்ட அருமறை அந்தத்துச் சிந்தைசெய் அந்தணர்'' என்றுள்ள திருமந்திரத்திலும் (234),''அந்தணராவோர் அறுதொழில் பூண்டுள்ளோர்'' என்றுள்ள திருமந்திரத்திலும் (224), திருமூலர் 'அந்தணர்' யார் என்பதுபற்றிக் கொடுத்துள்ள விளக்கம் தனிக்கவனத்துக்குரியது இந்த இடத்தில்

''அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ் வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுலான்''

''அந்தணர் நூற்கும், அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்''

ஆகிய குறள்களையும் கவனத்தில் கொள்ளவேண்டும. திருமூலர் ''அந்தணர் ஒழுக்கம்'' என்ற தலைப்பிலேயே 14 திருமந்திரங்களில் அந்தணர் பற்றி விரிவாகக் கூறியுள்ளார் (224—237). அந்தணரான பார்ப்பார், கிரியை நெறியில் உள்ளவர் என்று 227 ஆவது திருமந்திரத்தில் கூறியுள்ளார். இவ்வாறே நமது சைவ சமயக் குரவர்கள் நால்வரும் சேக்கிழாரும் அந்தணர் பற்றி விளக்கம் கொடுத்திருப்பதை முன்னர் கண்ட மேற்கோள்கள் காட்டுகின்றன. சேக்கிழார், 'சைவ அந்தணர் குலத்துள்' என்கிறார். வடமொழி நூல்களில் பிராமணர் 'சைவ அந்தணர்' என்ற பெயரால் குறிப்பிடப்படவில்லை. இவையெல்லாம் தமிழினத்தின் நான்கு வகையினரில் ஒரு வகையினரைத்தான், தமிழ் மொழியில் உள்ள 'அந்தணர்' என்ற சொல் குறித்தது என்பதை உறுதிப்படுத்துகின்றன. தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியத்திலும் திருமந்திரத்

திலும், நால்வர் திருமுறைகளிலும் வரும் 'அந்தணர்' தமிழினத்தார் என்பதில் எவ்வித ஐயத்திற்கும் இடமில்லை. 'அந்தணர்' என்றழைக்கப்பட்டவர்களை, 'மறையோர்', 'நான்மறையோர்' அந்தண மறையோர், முனிவர் என்றும் நம்முன்னோர்கள் அழைத்திறிக்கின்றனர் என்பதையும் கொடுக்கப்பட்டுள்ள மேற்கோள்களிலிருந்து அறிகிறோம். "மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்" என்று தொல்காப்பியத்தில் வந்துள்ளதைக் கவனிக்கவும்.

நம் முன்னோர்களைச் சேர்ந்த அந்தணர், நான்மறை ஓதி சிவத்தை சிந்தையில் வைத்திருந்தனர். அதனாலன்றோ, அப்பரடிகள், "அரியானை அந்தணர்தம் சிந்தையானை" என்று பாடியுள்ளார். 'அந்தணர்தம் சிந்தையான்' ஆகிய சிவனை 'அந்தணன்' என்ற பெயரில் நமது சங்கப் புலவர்களும், அருளாளர்களும் குறிப்பிட்டிருப்பதையும் கண்டோம். இதற்கு, மேலும் சில மேற்கோள்கள் இங்கே கொடுக்கப்படுகின்றன.

சம்பந்தர் :

"........... செங்குன்றூர் நின்ற
அந்தணனைத் தொழுவார்........."

அப்பர் :

"ஐயன் அந்தணன் ஆணொடு பெண்ணுமாய"

"திருமார்பிற் புரிவெண்ணூ றிகழப்பூண்ட அந்தணனை"

சுந்தரர் :

"நம்பினார்க் கருள் செய்யுமந்தணர்"

சேக்கிழார் :

"அந்தணனாம் எந்தை பிரான்"

"அரவச் சடை அந்தணனாரை"

இவற்றால் தமிழர்கள் 'அந்தணர்' என்ற சொல்லை எவ்வளவு சிறப்புடையதாகக் கருதியிருக்கிறார்கள் என்பதை நன்றாக உணரவேண்டும்.

"தில்லை வாழ் அந்தணர்" என்று திருமுறைகளில் குறிப்பிடப் படுபவர்களும், மேலே விளக்கப்பட்டுள்ளவாறு தமிழ்ச் சமூகத்தின் அந்தணர்களே. இவர்கள்தான்,

''ஆடினாய் நறு நெய்யொரு பால் தயிர்
அந்தணர் பிரியாத சிற்றம்பலம்''

''நட்டமே நவில்வாய் மறையோர் தில்லை
நல்லவர் பிரியாத சிற்றம்பலம்'' எனவரும்
ஞானசம்பந்தர் தேவாரத்திலும்,

''திருவுடை யந்தணர் வாழ்கின்ற தில்லைச் சிற்றம்பலவன்''
எனவரும் அப்பர் தேவாரத்திலும்,

''மன்னிய தில்லைதன்னுள் ஆலிக்கும் அந்தணர்
வாழ்கின்ற சிற்றம்பலமே'
எனவரும் சேந்தனார் திருப்பல்லாண்டிலும் குறிக்கப்படுகின்றனர்.

இவர்களைத்தான் 'தில்லை நான்மறையோர்' எனச் சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார்.

'அந்தணர்', 'மறையோர்', 'நான்மறையோர்' ஆகிய சொற்கள் தமிழினத்தைச் சேர்ந்தவர்களையே குறிக்கின்றன என்பது முன்னே விளக்கப்பட்டுள்ளது. அதனால், தில்லையில் வாழ்ந்துவந்த தமிழனத்து அந்தணர், தில்லைவாழ் அந்தணர் என அழைக்கப் பட்டிருக்கிறார்கள் என்று புலனாகிறது. இவ்விளக்கத்தின்படி. 'தில்லை வாழ் அந்தணர்' என்ற சொற்றொடருக்கும் பொருள் கொண்டால், இச்சொற்றொடர், தில்லையில் இப்பொழுது உள்ள தீட்சதர்களின் முன்னோர்களைக் குறிக்கிறது என்று தெரிவிக்கப் பட்டு வருகிற!கருத்து எவ்வளவு பொருத்தமற்றது, தவறானது என் பது புலனாகும். சங்க நூல்களில் தமிழின 'அந்தணர்' எவ்வாறு வர்ணிக்கப்பட்டுள்ளனரோ, அவ்வாறே சேக்கிழாரும் தில்லை அந்தணரை வர்ணித்துள்ளதைக் கீழே காணும் பாடல்களில் பர்ர்க்கலாம்.

சேக்கிழார் (தில்லை வாழந்தணர் புராணம்).

''பொங்கிய திருவில் நீடும் பொற்புடைப் பணிகள் ஏந்தி
மங்கலத் தொழிகள் செய்து மறைகளால் துதித்து மற்றும்
தங்களுக் கேற்ற பண்பில் தரும் பணித்தலை நின்றுய்த்தே
அங்கணர் கோயில் உள்ளார் அகம்படித் தொண்டு
செய்தார்''

''மறுவிலா மரபின் வந்து மாறிலா ஒழுக்கம் பூண்டார்
அறுதொழில் ஆட்சி யாலே அருங்கலி நீக்கி உள்ளார்
உறுவது நீற்றின் செல்வம் எனக்கொளும் உள்ளம் மிக்கார்
பெறுவது சிவன்பால் அன்பாம் பேறெனப் பெருகி வாழ்வார்''

"ஞானமே முதலா நான்கும் நலவயறத் தெரிந்து மிக்கார்
தானமும் தவமும் வல்லார் ...... ..."

"செம்மையால் தணிந்த சிந்தைத் தெய்வ வேதியர்களானார்
மும்மை ஆயிரவர் தாங்கள் போற்றிட முதல்வனாரை
இம்மையே பெற்று வாழ்வார் ...... .."

மேலும், இச்செய்யுட்களில் குறிக்கும் மறைகள், தமிழ்மறைகள் தமிழ் வேதம் என்று விளங்கவில்லையா? சேக்கிழார், தில்லை அந்தணரின் (வேதியரின்) அறுதொழிலையும் குறிப்பிடுகிறாரே, தீட்சதர்கள் தமிழ்வேதத்தையா ஓதுகிறார்கள்? அவர்கள் தில்லைக் கோயிலில் தேவாரம், திருவாசகம் பாடுவதற்குக் கூட எதிர்ப்புத் தெரிவிக்கின்றனரே.

'தீட்சதர்கள்' என்ற பெயர் சங்க இலக்கியத்திலோ, திருமுறைகளிலோ, எங்கும் வரவில்லை. தீட்சதர்களைக் குறிப்பிடுவதாக இருந்தால் 'தீட்சதர்கள்' என்ற பெயரிலேதானே குறிப்பிடப் பட்டிருப்பர். தில்லைத் தீட்சதர்கள், ஆரிய இனத்திற்கு மாறுபட்ட தமிழினத்தைச் சேர்ந்தவர்கள் எனக் கருதப்படவில்லை. அவர்கள் ஆரிய இனவழியில் வந்தவர்களே. அதனால், 'தில்லை வாழ் அந்தணர்' எனக்குறிப்பிடப்பட்டவர்கள் இத்தீட்சதர்களின் முன்னோர்கள் அல்ல என்றாகிறது. தீட்சதர்களை 'தில்லைவாழ் அந்தண'ரோடு தொடர்பு படுத்துவதற்குச் சங்க நூல்களிலோ, திருமுறைகளிலோ ஆதாரம் கிடையாது என்பது தெளிவாக உணரப் படவேண்டும்.

ஆக, சங்க நூல்களிலும், திருமுறைகளிலும் 'அந்தணர்' எனக் குறிப்பிடப்படுபவர் தமிழ் இனத்தவரே; அது பிராமணர்களைக் குறிக்கவில்லை; அன்றைய தில்லைவாழ் அந்தணரும் தமிழினத்தவரே.

தமிழனத்து அந்தணர், ஐய, ஐயா ஐயன் ஐயர், வேதியன்' வேதியர், மறையோர், நான்மறையோர், முனிவர், பார்ப்பார், பார்ப்பான் ஆகிய பெயர்களாலும் அக்காலத்தில் அழைக்கப்பட்டிருக்கின்றனர். தமிழர்கள் இச்சொற்களைச் சிவனைக் குறிக்கவும் பயன்படுத்தியிருக்கின்றனர்.

சிவனை, அந்தணன், வேதியன், மறையோன், மறையவன் என்கிற பெயர்களில் குறிப்பிட்டிருப்பதற்கு ஆதாரமாக, நம் அருளாளர்களின் செய்யுட்களில் உள்ளவை மேற்கோள்களாக முன்பு கொடுக்கப்பட்டுள்ளன. சிவன், வேதியன், மறையோன் மறையவன் எனக் குறிப்பிடப்பட்டுள்ளான் என்பதற்கான

மேற்கோள்கள் மேலும் சிலவும், சிவன், ஐய, ஐயா, ஐயன், ஐயர், பார்ப்பான் எனற பெயர்களாலும் குறிப்பிடப்பட்டுள்ளான் என்பதற்கான மேற்கோள்களும் இங்கே கொடுக்கப்படுகின்றன.

பரிபாடல் :

'............... எய்து அமரர் வேள்விப்
பாகம் உண்ட பைங்கட் பார்ப்பான்
உமையொடு புணர்ந்து'

திருமந்திரம் :

870—'வேதியன் அங்கே வெளிப்படும்'

2606—'ஐயனும் அங்கே அமர்ந்து நின்றானே'

874—'அகம்படிகின்ற நம் ஐயனை ஓரும்'

2883—'பார்ப்பான் அகத்திலே........
.........................
.........................
பார்ப்பான் பசு ஐந்தும் பாலாச் சொரியுமே'
(பார்ப்பான்—ஆன்மா)

காரைக்காலம்மையார் ;

'விரைக்கின்ற வன்னியும் சென்னித் தலைவைத்த
வேதியனே'

சம்பந்தர் ;

'வெந்து நீறு மெய் பூசிய வேதியன்'

'விடையேறும் வேதியனே'

'கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே'

'எம் ஐயன் மேய........'

'செய்யனே திருவாலவாய் மேவிய
'ஐயனே ...........'

'விடைமிக வேறிய மறையோனுறை கோயில்'

'மூக்கண் மறையோனே'

அப்பர் :

'விரிசடை வேதியன்'
'நீதியான் கான் வேதியன் கான்'
'மதிசூடிய வேதியர்'
'புரமெரித்த வேதியனே'
'ஐயன் கான் குமரன்கான் ஆதியான்கான்'
'ஐய நீ யருளிச் செய்யாய்'

சுந்தரர்:

'விடையார் வேதியனே'
'வாயாடி மாமறை யோதியோர், வேதியனாகி வந்து'
'.........................துறையூர்
ஐயா ........'
'ஐயனை யத்தனை'

மாணிக்கவாசகர்

'வினை கடிந்த வேதியனே'
'விண்ணாளுந் தேவர்க்கு மேலான வேதியனை'
'ஐய நின்னதல்ல தில்லை மற்றோர் பற்று'
'ஐயனே அரனே'
'ஐயன் பெருந்துறையான்'
'ஐயா போற்றி'
'ஞானவாள் ஏந்தும் ஐயர் நாதப் பறையறைமின்
பார்ப்பானே எம் பரமா'

சேக்கிழார் :

'வேதியன் அதனைக்கேட்டு'

'ஐயன் திரு நடம்'

'புவனங்கள் உய்ய ஐயர் பொங்கும் நஞ்சுண்ண'

'ஐயர் திருவடி நீழல் அருளாகிக் குளிர்ந்ததே'

சிவனைப் 'பார்ப்பான்' என்றழைத்த நம் அருளாளர்கள், அச் சொல்லுக்குப் பெண்பால் சொல்லான 'பார்ப்பதியை' உமையைக் குறிக்கப் பயன்படுத்தியுள்ளனர்:

**திருமூலர் :**

திருமந்திரம் 1038—'பார்ப்பதி பாகன் பரந்தகை நாலு'

,, 1769—'பரந்திடங்காணிற் பார்ப்பதிமேலே
திரண்டெழக் கண்டவன் சிந்தையுளானே'

**சம்பந்தர் :**

'பக்க நுந்தமைப் பார்ப்பதி யேத்தி'

'பஞ்சுலாவிய மெல்லடிப் பார்ப்பதி பாகனை'

'பார்ப்பதியோடுடன வீற்றிருந்த பரமனன்றே'

**அப்பர் :**

'பயம் புன்மை சேர்தரு பாவந் தவிர்ப்பன பர்ப்பதி தண்
புயம் பொன்மை மாமலராக......'

**சுந்தரர் :**

'பாடுவன் பாடுவன் பார்ப்பதி தன்னடி பற்றி'

**மாணிக்கவாசகர் :**

'பார்ப்பதியைப் பகைசாற்றிய தக்கனை'

தமிழினத்து அந்தணன், வேதியன், மறையோன், நான்மறையோன் ஆகிய பெயர்களால் குறிப்பிடப்பட்டுள்ளதற்கு ஆதாரமாக மேலும் சில மேற்கோள்களும், தமிழினத்து அந்தணன், ஐயர், பார்ப்பான், பார்ப்பார், முனிவர் ஆகிய பெயர்களாலும் குறிப்பிடப் பட்டுள்ளான் என்பதற்கு ஆதாரமான மேற்கோள்களும் இங்கே கொடுக்கப்படுகின்றன.

தொல்காப்பியம் :

'பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப'

'ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும்'

'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்'

'பார்ப்பார் அறிவர் என்றிவர் கிளவி
யார்க்கும் வரையார் யாப்பொடு புணர்ந்தே'

'மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்'

பதிற்றுப்பத்து :

'கேள்வி உயர்நிலை உலகத்து ஐயர் இன்புறுத்தினை'

'பார்ப்பாருக்குக் கபிலையொடு குடநாட்டு ஓர் ஊர் ஈத்து'

'பார்ப்பார்க்கு அல்லது பணிபு அறியலை'

புறநானூறு :

'ஆவும் ஆன் இயற் பார்ப்பன மாக்களும்'

'பார்ப்பார்த் தப்பிய கொடுமையோர்க்கும்'

'ஆர் புனை தெரியல் நின் முனனோர் எல்லாம்
பார்ப்பார் நோவன செய்யலர்'

'உயவலூர்திப் பயலைப் பார்ப்பான்
எல்லிவந்து நில்லாது புக்கு'

'ஏற்ற பார்ப்பார்க்கு ஈர்ங்கை நிறையப்
பூவும் பொன்னும் புனல் படச்சொரிந்து'

'நான்மறை முனிவர்'

'நான்மறை முதல்வர்'

அகநானூறு :

'தூது ஓய் பார்ப்பான் மடி வெள்ஓலைப்
படையுடைக் கையர் வருதொடர் நோக்கி'

கலித்தொகை :

'நம் சேரியின் போகா முட முதிர் பார்ப்பான்'

'முது பார்ப்பான் அஞ்சினன் ஆதல் அறிந்து'

'.....................என்றும் தன்
வாழ்க்கை அதுவாகக்கொண்ட முது பார்ப்பான்'

குறுந்தொகை :

'பார்ப்பன மகனே! பார்ப்பன மகனே!
செம்பூமுருக்கின் நல் நார் களைந்து
தண்டொடு பிடித்த தாழ் கமண்டலத்துப்
படி உண்டிப் பார்ப்பன மகனே'

நற்றிணை :

'பார்ப்பன மகளிர்'

ஐங்குறு நூறு :

'பார்ப்பார் ஓதுக'

பரிபாடல் :

'இனி மணல் வையை யிரும் பொழிலுங் குன்றப்
பனிமொழி சாரலும் பார்ப்பாரும்'

'ஈப்பாய் அடுநறாக் கொண்டது இவ்வறு எனப்
பார்ப்பர் ஒழிந்தார்'

'ஐயர் வாய்ப் பூசுறார் ஆறு'

திருமுருகாற்றுப்படை :

'விண்செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது ஒருகை'

குறிஞ்சிப்பாட்டு :

'ஆசு அறு காட்சி ஐயர்க்கும்'

முல்லைப்பாட்டு :

'கல் தோய்த்து உடுத்த படிவப் பார்ப்பான்
முக்கோல் அசை நிலை கடுப்ப'

திருமந்திரம் :

1977—'வேதியர் வேண்டினும் விண்ணவர் சொல்லினும்'

1565—'வேதியர் வேதத்குனற் குறியாளனை'

232—'துரிய சமாதியாந் தூய் மறையோர்க்கே'

227— பெருநெறியான பிரணவம் ஓர்ந்து
குருநெறியானுரை கூடி நால்வேதத்
திருநெறியான கிரியை யிருந்து
சொருபம தானோர் துகளில் பார்ப்பாரே'

சிலப்பதிகாரம் :

'அறு தொழில் அந்தணர்'

'அறக்களத்து அந்தணர்'

'நான்மறை அந்தணர்'

'அறவோர்க்கு அளித்தலும் அந்தணர் ஓம்பலும்
துறவோர்க்கு எதிர்தலும்......'

'பார்ப்பார், அறவோர், பசு, பத்தினிப் பெண்டிர்'

'.........தகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட
தீ வலம் செய்வது காண்பார் கண் நோன்பு என்னை"

'வண்டமிழ் மறையோர்க்கு வானுறை கொடுத்த
திண்டிறல் நெடுவேற் சேரலன் காண்கு'

மணிமேகலை :

'நான்மறை அந்தணர் நல்நூல் உரைக்கும்'

'பார்ப்பன முதுமகன்'

சம்பந்தர் :

'அங்கமும் வேதமுமோது நாவரந்தணர்'

'நான்மறை வேதியர் தொழுதொழு விசயமங்கையே'

'வேதியர் ஏத்தி வாழ்த்த'

'வேதியர் வாழுஞ் செய்ஞலூர்'

'...மெய்ம்மொழி நான்மறையோர்'

'மறையோர்கள் ஏத்த'

'கேள்வியர் நாடொறு மோதுநல் வேதத்தார் கேடிலா
வேள்விசெ யந்தணர் வேதியர் வீழிமிழலையார்'

அப்பர் :

'பித்தர் நான்மறை வேதியர் பேணிய
அத்தன்'

சுந்தரர் :

'கலை பயிலந்தணர் வாழுங் கலையநல்லூர் காணே'

'மறை வளர்க்கும் அந்தணர்'

'அரிய நான்மறை யந்தணரோவா
தடி பணிந்தறிதற் கரியானை,

'மறையோர் வானவருந் தொழுதேத்தி வணங்க நின்ற
இறைவா'

'நிறைந்த வந்தணர் நித்த நாடொறு
நேசத்தாலுமைப் பூசிக்குமிடம்'

'திரிசெய் நான்மறையோர் சிறந்தேத்தும்'

'வேதவேதியர் வேதநீதிய ரோதுவார்'

மாணிக்கவாசகர் :

'ஐயனை ஐயர் பிரானை'

சேக்கிழார்:

'சிவவேதியன் மகளும்'
'வேத வேதியர் அனைவரும் செய்யவும் மிகுமால்'

'மாதொரு பாகனார்க்கு வழிவழி அடிமை செய்யும்
வேதியர் குலத்துள் தோன்றி மேம்படு சடையனார்க்கு'

'தந்தையார் சடையனார் தம் தனித் திருமகற்குச் சைவ
அந்தணர் குலத்துள் தங்கள் அரும்பெரும் மரபுக்கேற்ப
வந்த தொல்சிறப்பிற் புத்தூர்ச் சடங்கவி மறையோன் தன்பால்
செந்திரு அனைய கன்னி மணத்திறஞ் செப்பிவிட்டார்'

மேலே,'வேதியர், 'அந்தணர், 'மறையோன்' ஆகிய மூன்று சொற்களை, ஒன்றையே குறிக்கச் சேக்கிழார் பயன்படுதியுள்ளது தமிழரின் சிறப்புக் கவனத்துக்குறியது.

இது காறும் விளக்கப்பட்டுள்ளதை மனதில் வைத்துக் கொண்டு,

மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பு ஒழுக்கம்குன்றக் கெடும்.

எனும் திருக்குறளைப் படிப்பது நன்று. அந்தணன் அல்லது பார்ப்பான் தொழில் அல்லது பணி, வழிவழி வருவதை 'பிறப்பு' எனும் சொல்லினால் திருவள்ளுவர் குறிப்பிடுகிறார்.

ஐய, ஐயன், ஐயர் ஆகிய சொற்கள், மூத்தோர், பெரியவர், தலைவர், தந்தை, தமையன் முதலியவர்களைக் குறிக்கவும் தமிழர் காளல் பயன்படுத்தப்பட்டுள்ளன. எக்காலம் என்றால், குறைந்தது எட்டு அல்லது ஒன்பது நுற்றாண்டுகளுக்கு முந்திய காலம் என்பதை நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும்.

அகநானூறு :

'... .....................தன் ஐயர்
காலைத்தந்த கணைக்கோட்டு வாளைக்கு'

'........................ நின் ஐயர்
புலி மருள் செம்மல் நோக்கி'

கலித்தொகை :

'தந்தையொடு ஐயன்மார் எல்லாம் ஒருங்கு'

'ஐயனை ஏத்துவாம் போல'

'தம் ஐயரும் தாம் பிழையார்'

'இம்மாலை, ஐயர் அவிர் அழல் எடுப்ப'

**நற்றிணை :**

'ஐய ! ,குறுமகட் கண்டிகும்'

'கல்லாக் கதவர் தன் ஐயர் ஆகவும்'

**ஐங்குறுநூறு :**

'அதுவே ஐய, நின் மார்பே'

'செல்லல், ஐய !'

இவைகளிலிருந்து, பண்டைக் காலத்தில் அந்தணர், மறையோர், ஐயன், ஐயர், வேதியர், பார்ப்பான், பார்ப்பார், முனிவர், ஆகிய சொற்கள் எல்லாம் தமிழினத்திலிருந்த ஒரு வகையினரையே குறித்தன என்பதும், ஆரிய பிராமனர்களைக் குறிக்கவில்லை என்பதும் தெளிவாகவிளங்குகின்றன. பிராமனர்களைக் குறிக்கவேண்டுமென்றிருந்தால் அவர்களுக்கு உள்ள 'பிராமணர்' என்ற பெயரைத் தானே பயன்படுத்தியிருப்பார்கள். இவ்வாறு கூறக்கூடாது என்ற தடைக்கு தமிழர்கள் உள்ளாகியிருந்தார்கள் என்று கூறமுடியுமா.

அக்காலத்தில் தமிழின அந்தணர் முந்நூல் (முப்புரிநூல்) அணிந்திருந்தனர், கையில் முக்கோல் ஏந்தியிருந்தனர் என்று தொல்காப்பியம், சங்கநூல்கள், திருமுறைகள் ஆகியவை தெரிவிக்கின்றன. அவர்கள் 'விரிநூல்அந்தணர்', 'புரிநூல் அந்தணர்' 'இருபிறப்பாளர்' எனவும் குறிப்பிடப்பட்டார்கள். முதுகுடுமி (முன்குடுமி) வைத்துக் கொள்ளும் வழக்கமும் அன்றிருந்திருக்கிறது.

**புறநானூறு :**

'ஒன்று புரிந்து அடங்கிய இருபிறப்பாளர்
முத்தீப் புரையக் காண்தக இருந்த' 367

**திருமுருகாற்றுப்படை :**

'மூன்று வகைக் குறித்த முத்தீச் செல்வத்து
இருபிறப்பாளர் பொழுதறிந்து நுவல' 181, 182

சேக்கிழார் :

'செம்மை வெண்ணீற் றொருமையினார் இரண்டு பிறப்பின் சிறப்பினார்'

'இரு பிறப்புடை அந்தணர்'

ஐங்குறுநூறு :

"நம் ஊர்ப் பார்ப்பனக் குறுமகப் போல
தாமும் குடுமித்தலைய மன்ற"

புறநானூறு :

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி-இவனைக் 'குடுமி' என்று பெயரைச் சுருக்கியும் புலவர்கள் அழைத்திருக் கின்றனர்.

மதுரைக்காஞ்சி :

'பல்சாலை முது குடுமியின்'

திருமந்திரங்கள் 230, 241, 242, 1665 ஆகியவற்றையும் பார்க்கவும்

இந்நிலை இருந்த காலம் 1000, 1200 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்பதை மறந்துவிடக்கூடாது.

'பிராமணர்' என்ற சொல்லைத் திருமூலரே, 231-ஆவது திரு மந்திரத்தில் பயன்படுத்தியுள்ளார். தமிழகத்து அந்தணர் பிரிவைச் சேராது, 'பார்ப்பான்' என்ற பெயர் மட்டும் கொண்டுள்ளவர்பற்றி திருமூலர் 519-ஆவது திருமந்திரத்தில் கூறியுள்ளார்.

மேலும்,

"'பார்ப்பான் பாங்கன் தோழி செவிலி
சீர்த்தகு சிறப்பிற் கிழவன் கிழத்தியொடு
அளவியன் மரபின் அறுவகை யோரும்
களவியற் கிளவிக் குரியர் என்ப'

"தோழி, தாயே, பார்ப்பான் பாங்கன்
பாணன் பாடினி இளையர் விருந்தினர்
கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்
யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப".

"பாணன் கூத்தன் விறலி பரத்தை
யாணஞ் சான்ற அறிவர் கண்டோர்
பேணுதகு சிறப்பில் பார்ப்பான் முதலா
முன்னுறக் கிளந்த அறுவரொடு தொகை இத்
தொன்னெடு மரபிற் கற்பிற் குரியர்",

"காமநிலை உரைத்தலும் தேர்நிலை உரைத்தலும்
கிழவோன் குறிப்பினை எடுத்துக் கூறலும்
ஆவொடுபட்ட நிமித்நங் கூறலும்
செலவுறு கிளவியும் செலவழுங்கு கிளவியும்
அன்னவை பிறவும் பார்ப்பார்க்கு உரிய"

ஆகிய தொல்காப்பியச் சூத்திரங்களில் வருகிற 'பார்ப்பான்' என்ற சொல், தமிழினத்தவரைக் குறிக்காமல் வேறு இனத்தினரைக் குறிக்கிறது என்று யார்தான் எடுத்துக் கொள்வர். இச்சூத்திரங்களில் குறிப்பிடப்பட்டுள்ள பணிகளை ஆரியப் பிராமணர்கள் செய்து வந்ததாக வடமொழி வேதங்கள் கூறுகின்றனவா?

இதுவரை விளக்கப்பட்டுள்ள பெயர்கள் தமிழினத்துப் பெயர்களாக ஆதியில் இருந்திருந்தும், ஏதோ ஒருவிதப் போக்கில், ஆரிய சமூகத்தின் நான்கு வருணங்களில் ஒன்றின் பெயரான 'சூத்திரர்' தமிழினம் முழுவதையும், தமிழினத்திலிருந்த அந்தணர், ஐயர், பார்ப்பான், பார்ப்பார், வேதியர் ஆகிய பெயர்கள் ஆரிய பிராமணர்களையும் குறிக்கும் நிலை உருவாகி, அத்தகைய பெயர் மாற்றத்தால் தமிழகத்தில் அன்றிருந்த சமுதாயத்தில் ஏற்பட்ட சூழ்நிலை, தமிழினத்தாரால் கருத்துடன் கவனிக்கப்படாததால், அக்காலத்தில் தோற்றுவிக்கப்பட்ட பெயர் மாற்றம் காலப்போக்கில் நிலைபெற்றுவிட்டது எனக் கருதவேண்டியுள்ளது. இவ்வாறு பெயர் மாறிய நிலையைத் தொடர்ந்து பின்னர், தமிழர்கள் ஆரியரின் மனு முதலிய ஸ்மிருதிகளின் அடிப்படையிலான சட்ட திட்டங்களுக்கும் உள்ளாகினர் அந்தணர், ஐயர், வேதியர் ஆகிய தமிழ்ப் பெயர்கள் ஆரிய பிராமணர்களைச் சார்ந்தபோது, ஆதியில் இப்பெயர்களைக் கொண்டிருந்த தமிழினத்தாரை ஆதிசைவர், சிவாச்சாரியார் என்றழைக்கப்படும் வழக்கு தமிழகத்தில் தொடங்கி இருக்கவேண்டுமெனத் தோன்றுகிறது. இவர்களை அர்ச்சிப்பார், அருச்சகர், அர்ச்சிக்கும் மறையோர் எனவும் சேக்கிழார் குறிப்பிடுகிறார். அருச்சகர், குருக்கள், சிவாச்சாரியர்கள் என்றழைச்கப்படுபவர்கள், மற்ற பிராமணர்களிலிருந்து வேறாக இருந்து வருவதை இன்றும் காண்கிறோம்,

தமிழகத்தோடு, தமிழினத்தோடு நேரடித் தொடர்பின்றி வட இந்தியாவில் வாழ்ந்து வருகிற பிராமணர்களிடத்தில் ஐயர், ஐயங்கார் போன்ற பெயர்கள் இல்லாததை இங்கே குறிப்பிட வேண்டும்.

மேலும், தமிழகத்தில் உள்ள விரசைவர்களும் சாத்தாணியர் களும் (இருவரும் தமிழர்கள்) தங்கள் பெயர்களோடு 'ஐயா, வைச் சேர்ந்திருப்பதையும் செளரஷ்டிரார்களில் சிலர் தங்கள் பெயர் களோடு 'ஐயரை'ச் சேர்த்திருப்பதையும் கவனிக்கவேண்டும்.

ஆக, சங்க இலக்கியத்திலும், திருமுறைகளிலும் உள்ள குறிப்புக்கள் ஆரிய அல்லது வடமொழி வேதத்திற்குப் பொருந்தாதன என்பதை இதுகாறும் கொடுக்கப்பட்டுள்ள விளக்கங்களிலிருந்து அறியலாம். இந்நூல்களில் சிவனிக்குத்தான் முக்கியத்துவமும் சிறப்பும் கொடுக்கப்பட்டுள்ளன. ஆரிய வேதத்தில் சிவனுக்கு இத்தகைய உயர் நிலை கொடுக்கப்படவில்லை. இவ் உண்மைக்கு ஆதாரமாக உள்ள மேலும் சிலவற்றையும் இங்கே எடுத்துக் கூற வேண்டும்.

தமிழரின் சைவ சமயத்தின் முழு முதற்கடவுளாகவும், தமிழரின் வேதம், ஆகமம் ஆகியவற்றை அருளிய கடவுளாகவும் உள்ள சிவன் ஆரியவேதங்கள் கூறும் தெய்வங்களுக்கு மாறுபட்டவன். அத்தெய்வங்களுக்கெல்லாம் முதலானவன் என்ற சமயக்கொள் கையைத் தமிழர்கள் ஆதியிலிருந்து கொண்டிருப்பவர். இதற்குச் சான்றாக உள்ள தமிழகத்து அருளாளர்களின் கூற்றுக்கள் கீழே கொடுக்கப்படுகின்றன.

மதுரைக்காஞ்சி :

'தொல்முது கடவுட் பின்னர் மேய' 41

நக்கீரர் :

திருஎழுகூற்றிருக்கை :

"நின் ஆதி காணாது இருவர்
மூவுலகு உழன்று நாற்றிசை உழிதர
ஐம்பெருங் குன்றத்து அழலாய்த் தோன்றினை"

கயிலைபாதி காளத்தி பாதி அந்தாதி :

'அலரோன் நெடுமால் அமரர் கோன் மற்றும்
பலராய் படைகாத்து ஆண்டு'

''இவ ரா முதல் தேவர் எல்லார்க்கும் மிக்கார்
இவரல்லர், என்றிருக்க வேண்டாம்''
''நடமாடுஞ் சங்கரன் தாள் நான்முகனுக்காணான்
படமாடு பாம்பணையன் காணான்''

காரைக்காலம்மையார் :

'......................;........ மாலுக்கும் நான்முகற்கும்
அன்றும் அளப்பரியன் ஆனானை'

திருமூலர் :

திருமந்திரம் 36—'ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை'

,, 2967—'தானே யுலகில் தலைவனுமாமே'

,, 319—'ஆதிப் பிரான் அமரர்க்கும் பரஞ்சுடர்
சோதி அடியார் தொடரும் பெருந்
தெய்வம்'

,, 1767—'ஆதி பரந்தெய்வம் அண்டத்து
நற்றெய்வஞ்
சோதி யடியார் தொடரும் பெருந்
தெய்வம்'

,, 3009—'போற்றும் பெருந்தெய்வந் தானே
பிறரில்லை'

,, 105—'ஈசன் இருக்கும் இருவினைக்கப்புறம்
பீசம் உலகில் பெருந்தெய்வமானது'

,, 11—'அயலும் புடையும் எம் ஆதியை
நோக்கில்
இயலும் பெருந்தெய்வம் யாது
மொன்றில்லை'

,, 5—'சிவனொடொக்குந் தெய்வந்
தேடினும் இல்லை
அவனொடொப்பார் இங்கு யாவரும்
இல்லை'

,, 109—‘தேனமர் கொன்றைச் சிவனருள் அல்லது
தானமர்ந்தோருந் தனித்தெய்வம்
மற்றில்லை’

,, 9—‘என்னால் தொழப்படும் எம் இறை
மற்றவன்
தன்னால் தொழப்படு வாரில்லை தானே’

,, 2626—‘ஒத்துல கேழும் அறியா தொருவன்
என் அத்தன்’

,, 7—‘முன்னையொப் பாயுள்ள மூவர்க்கு
மூத்தவன்
தன்னையொப்பா யொன்றும்
இல்லாத் தலைமகன்’

,, 1—‘ஒருவன்தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள்’

,, 110—‘சோதித்த பேரொளி மூன்றைந்தென
நின்ற
ஆதிக்கன் ஆவதறிகிலர் ஆதர்கள்’

,, 1838—‘மூவரிற் பன்மை முதல்வனாய் நின்றருள்
நீர்மையை யாவர் நினைக்கவல்லாரே,

,, 6‘—‘அவனன்றி மூவரால் ஆவதொன்றில்லை’

,, 1731—‘வேதா நெடுமால் உருத்திரன் மேலீசன்’

,, 111—‘வரத்தினுள் மாயவனாய் அயனாகி
தரத்தினுள் தான் பல தன்மையனாகி’

,, 2731—‘தேவர் சுரர் நரர் சித்தர் வித்தியாதரர்
மூவர்கள் ஆதியின் முப்பத்து மூவர்கள்
தாபதர் சத்தர் சமயஞ் சராசரம்
யாவையும் ஆடிடும் எம்மிறை யாடவே.

,, 2800—‘மூர்த்திகள் மூவர் முதல்வனிடை
செல்லப் பார்த்தனள்’

,, 2964—'பண்டெங்கள் ஈசன் நெடுமால் பிரமனைக்
கண்டங் இருக்குங் கருத்தறி வாரில்லை'

,, 3038—'நின்றனன் மாலொடு நான்முகன் தானாகி'

,, 2003—'தானே யயன் மாலென நின்று தாபிக்கும்'

,, 2365 'மாயனுமாகி மலரோன் இறையுமாய்'

,, 349—'ஆழி வலங்கொண் டயன் மால் இருவரும்
ஊழி வலஞ்செய்ய ஒண்சுடராதியும்
ஆழி கொடுத்தனன் அச்சுதற் கவ்வழி
வாழி பிரமற்கும் வாள் கொடுத்தானே.

,, 88— அடிமுடி காண்பார் அயன்மால் இருவர்
படிகண்டிலர் மீண்டும் பார்மிசைக் கூடி
அடிகண்டிலேன் என்றச்சுதன் சொல்ல
முடிகண்டேன் என்றயன் பொய் மொழிந்தானே

,, 372— பிரமனும் மாலும் பிரானே நான் என்னப்
பிரமன் மால் தங்கள்தம் பேதைமையாலே
பரமன் அனலாய்ப் பரந்துமுன் நிற்க
அரனடி தேடி அரற்றுகின்றாரே.

,, 2406—பசுப்பல கோடி பிரமன் முதலாய்ப்
பசுக்களைக் கட்டிய பாசமூன்றுண்டு
பசுத்தன்மை நீக்கியப் பாசம் அறுத்தாற்
பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே.

,, 21— வானப் பெருங்கொண்டல் மாலயன் வானவர்
ஊனப் பிறவி ஒழிக்கும் ஒருவனைக்
கானக் களிறு கதறப் பிளந்தஎங்
கோனைப் புகழுமின் கூடலுமாமே.

,, 391— காரணன் அன்பிற் கலந்தெங்கும் நின்றவன்
நாரணன் நின்ற நடுவுடலாய் நிற்கும்
பாரணன் அன்பிற் பதஞ்செய்யும் நான்முகன்
ஆரணமாய் உலகாயமர்ந்தானே

,,   630– 'ஆதிப்பிரமன் பெருங்கடல் வண்ணனும்
ஆதி அடிபணிந் தன்புறுவாரே'

திருஞானசம்பந்தர் :

'படைத்தாளித் தழிப்பமும் மூர்த்திகளாயினை'

'மூத்தானை மூவுலகுக்கொரு மூர்த்தியாய்க் காத்தானை'

'மூவரிலும் முதலாய் நடுவாய மூர்த்தியை'

'மேவராய விரை மலரோன் செங்கண்மாலீச னென்னும்

மூவராய முதலொருவன் மேயது முதுகுன்றே'

'மூவரும்மிவ ரென்னவு முதல்வரும் மிவ ரென்னவும்'

'மாலினுக்கன்று சக்கரமீந்து மலரவற் கொருமுக மொழித்து'

'திருமாலடி விழத் திசைநான்முக னேத்தப்
பெருமானென நின்ற பெம்மான்'

'திகழுந் திருமாலொடு நான்முகனும்

'புகழும் பெருமான்'

'நெடியமாலொ டயனேத்த நின்றார்'

'கரியவ னான்முகன் கைதொழுதேத்தக் காணலுஞ்சாரலு மாகா
எரியுரு வாகி'

'தேடிக் காணார் திருமால் பிரமன் தேவர்பெருமானை'

'பிரமன்னோடு மலெறியாத பெருமை யெம் பரமன்'

'நாற்றமா மலரானொடு மாலுமாய்த்
தோற்றமும் மறியாதவர்'

'தூய மலரானு நெடியானு மறியாரவன் தோற்ற நிலையின்'

'நாரணன் றன்னொடு நான்முகன் தானுமாய்க்
காரணன் னடிமுடி காண வொண்ணானிடம்'

'நாற்ற மலர்மிசை நான்முக னாரணன் வாது செய்து
தோற்ற முடைய வடியு முடியுந் தொடர்வரியிர்'

'தேவரும் மமரர்களுந் திசைகள் மேலுள தெய்வமும்
யாவரும் மறியாத தோமைதியாற் றழலுருவினார்'

'ஓங்கிய நாரண னான்முகனும் முணராவகை
நீங்கிய தீயுரு வாகி நின்ற நிமலன்'

'நெடியானொடு நான்முகனே டலுறச்
சுடுமா லெரியாய் நிமிர் சோதியனே'

'மாலொடு நான்முகனு நேட வளரெரியாய்
மேலோடு கீழ்காணா மேன்மையான்'

'மாலு மலரானு மறியாமை வளர் தீயுருவமான வரதன்'

'பிரமனுந் திருமாலுங் கைதொழப் பேரழலாய பெம்மான்'

'திருமகள் காதலனானுந் திகழ்தரு மாமலர் மேலைப்
பெருமகனும்மவர் காணாப் பேரழலாகிய பெம்மான்.'

'அரியோடயனு மறியாவண்ண மளவில் பெருமையோ
டெரியாய் நிமிர்ந்த எங்கள் பெருமான்'

'அந்தமாதி யயனுமாலு மார்க்குமறிவறியான்'

'நெடியான் பிரம னேடிக் காணார்'

'கண்ணனு நான்முகனுங் காணா விண்ணினை'

'நாற்ற மலர்மேலயனு நாகத்தில்
ஆற்ற லணை மேலவனுங் காண்கிலா'

'நெடியா னான்முகனு நிமிர்ந்தானைக் காண்கிலார்'

'நன்மையா னாரணனு நான்முகனுங் காண்பரிய'

'நன்மலர் மேலயனுயந் நண்ணு நாரணனு மறியா
தன்மையன்'

'மாலும் பிரமனு மறியா மாட்சியான்'

'மாலொடு நான்முகன் காணாத இறையானே'

திருநாவுக்கரசர் :

'ஊழி முதல்வனை'

'ஊழி முதல்வனாய் நின்றாய் நீ'

'முக்கணா போற்றி முதல்வா போற்றி'

முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி'

'முத்தினை முதலாகிய மூர்த்தியை
வித்தினை விளைவாய விகிர்தனை'

'முத்தனே முதல்வா முகிழும் முளை ஒத்தனே'

'விரித்தாய் மிழலை முளைத்தானை'

'முந்தித்தானே முளைத்தானை'

'முந்தி யுலகம் படைத்தான் தன்னை'

'மூவுலகந் தானாய முதல்வன் தன்னை'

'மூவுலகு மாயினான் காண்'

'மூத்தவனா யுலகுக்கு முந்தி னானே'

'மூன்னெறியாகிய முதல்வன் முக்கணன்'

'மூலனா மூர்த்தியா முன்னேதானா'

'பண்டை உலகம் படைத்தான் தானும்'

'உலகுக்கு ஒருவனாய் நின்றாய் நீயே'

'முந்தி மூவெயி லெய்த முதல்வனார்'

'உலகுக் கொருவிளக்காய் நின்றான் தன்னை'

'எல்லாமுன் றோன்றாமே தோன்றினான் காண்'

'பெரியார்கட் கெல்லாம் பெரியாய் நீயே'

'ஒருத்தனை மூவுலகொடு தேவர்க்கும்
அருத்தனை'

'மூவரின் முதலாகிய மூர்த்தியை'

'மூவராய் முதலாய் நின்ற மூர்த்தியை'

'மூவா முதலாய மூர்த்தி தன்னை'

'மூர்த்தியே யென்பனுன்னை மூவரின் முதல்வனென்பன்

'மூலமாகிய மூவர்க்கு மூர்த்தியை'

'மூவர்க்கு முதல்வன் தன்னை'

'முன்னனந்த மூவர்க்கு முதலானான் காண்'

'முந்தை காண் மூவரின் முதலானான் காண்'

'மூவனாய் முதலாயிவ் வுலகெலாம்
காவனாய்'

'மூவுருவின் முதலுருவாய்'

'நூறு கோடி பிரமர்க ளொந்தினார்
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறி லாதவ னீச னொருவனே'

'சங்கு சக்கர தாரி சதுர்முகன்
அங்க கத்தியனும் மர்ச்சித் தாரன்றே'

'நாரணனொடு நான்முக னிந்திரன்
வாரணன் குமரன் வணங்குங் கழற் பூரணன்'

'நெடியன் நான்முகனும் இரவியொடும் இந்திரனும்
முடியால் வந்திறைஞ்ச'

'நான்முகனும் இந்திரனும் மாலும் போற்ற'

'அரிய ரண்டத்து ளோரயன் மாலுக்கும்
பெரியர்'

'மாயனாய் மாலனாகி மலரவனாகி மண்ணாய்'

'தாமரையா னான்முகனுந் தானே யாகி'

'நாரணன்காண் நான்முகன்காண் நால்வேதன்காண்'

'பாம்பணைப் பள்ளி கொண்ட பரமனும்
பூம்பணைப் பொலிகின்ற புராணனும்
தாம் பணிந்தளப் பொண்ணாத் தனித்தழல்'

'தண்டாமரை யானு மாலுந் தேடத்
தழலுருவா யோங்கி நிமிர்ந்தார் தாமே,

'அயனவனு மாலவனு மறியா வண்ண
மாரழலாய் நீண்டுகந்த வண்ணல் கண்டாய்'

'பிரமனு மாலு மேலைமுடியோடு பாத
மறியாமை நின்ற பெரியோன்'

'தேடுவார் பிரமன் திருமாலவர்
ஆடு பாத மவரு மறிகிலார்'

'நன்றவ னாரணனு நான்முக னாடிக் காண்குற்
றன்றவர்க் கரியர் போலும்'

'மண்ணை யுண்டமால் காணான் மலரடி
விண்ணை விண்டயன் காணான் வியன்முடி

'மாலொடும் மறையோதிய நான்முகன்
காலொடும் முடிகாண்பரி தாயினான்'

'பிரமன் மாலறியாத பெருமையன்'

'கோவலனு நான்முகனுங் கூடியெங்கும்
எல்லை காண்பரியானை'

'நெடியானு நான்முகனு நேடிக் காணா
நீண்டானே'

'திருமாலொடு நான்முகனும் தேடித்
தேடொணாத் தேவனை'

'நாரணனு நான்முகனு மறியாதானை'

'அயனும் மாலுந் தேடிக் காணாச் சுடரானை'

'திருமாலு நான்முகனுந் தேர்ந்துங் காணா'

'கண்ணனும் பிரமனோடு காண்கிலாராகி வந்தே'

'மாலு நான்முகனுங் கூடிக் காண்கிலா வகையுணின்றாய்'

'படமூக்கப் பாம்பணையிற் பள்ளியானும்
பங்கயத்து மேலயனும் பரவிக் காணா'

'ஞாலத்தை யுண்டதிருமாலு மற்றை
நான்முகனு மறியாத நெறியான்'

சுந்தரர் :

'மூவரின் முதலாயவன் தன்னை'

'முந்தியாகிய மூவரின் மிக்க மூர்த்தியை'

'பிரமற்கும் பிரான் மற்றை மாற்கும் பிரான்'

'மாலொடு நான்முக னிந்திரன் மந்திரத்தால் வணங்க'

'நாரணன் பிரமன் தொழுங்கறையூரிற் பாண்டிக் கொடுமுடி
காரணர்'

'வணங்கித் தொழுவா ரவர்மால் பிரமன்
மற்றும் வானவர் தானவர் மாமுனிவர்'

'நெடுமாலயன் போற்றி செய்யும் குறியே'

'குமரன் திருமால் பிரமன் கூடிய தேவர் வணங்கும்
அமரன்'

'பேழ்வாய ரவி னணையானும் பெரிய மலர் மேலுறைவானும்
தாழாதுன்றன் சாண்பணியத் தழலாய் நின்ற தத்துவனே'

'பண்டைய மால் பிரமன் பறந்து மிடந்து மயர்ந்தும்
கண்டிலராயவர் கள்கழல் காண்பரிதாய பிரான்'

'மாலயனுங் காண்பரிய மாலெரியாய் நிமிர்ந்தோன்'

'அயனோ டனறரியு மடியு முடி காண்பரிய'

'வெள்ளத்து மாலவனும் வேதமுதலானும்
அடியினையுந் திருமுடியுங் காணவரிதாய சங்கரனை'

.கரிய மாலயனுந் தேடிக் கழலிணை காணமாட்டா
அரியனாய்'

'சங்கேந்து கையானுந் தாமரையின் மேலானுந் தன்மைகாணா'

'நெடியானோடு நான்முகனு மறிவொண்ணாப்
படியான்'

'தேடி மாலயன் காண்பரி யானை'

மாணிக்கவாசகர் :

'ஊழி முதல்வ'

'ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை'

'முன்னோன் காண்க முழுதோன் காண்க'

'முத்தா போற்றி முதல்வா போற்றி'

'முன்னைப் பழப் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே'

'முன்புமாய்ப் பின்பும் முழுதுமாய்ப் பரந்த
முத்தனே முடிவிலா முத்தனே'

'காப்பாய் படைப்பாய் காப்பாய் முழுதுங்
கண்ணார் விசும்பின் விண்ணோர்க் கெல்லாம்
மூப்பாய் மூவா முதலாய நின்ற
முதல்வா'

'மூத்தானே மூவாத முதலானே முடிவில்லா
ஓத்தானே'

'படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை
காப்போற் காக்கும் கடவுள் காப்பவை
கரப்போன்'

'செங்கணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்கும் இல்லாதோர் இன்பம் நம்பாலதா'

'இந்திரனும் மாலயனும் ஏனோரும் வானோரும்
அந்தரமே நிற்கச் சிவனவனி வந்தருளி'

'முழுமுதலே ஐம்புலனுக்கும் மூவர்க்கும் என்தனக்குப்
வழிமுதலே'

'முன்னானை மூவர்க்கும்'

'மூவர் கோனாய் நின்ற முதல்வன் மூர்த்தி'

'அந்தரர் கோன் அயன்தன் பெருமான்
ஆழியான் நாதன்'

'நான்முகன் மாலுக்கும் நாதர் இந்நாதனார்'

'வானவன் மாலயன் மற்றுமுள்ள தேவர்கட்கும்
கோனவனாய் நின்று'

'அல்லிக் கமலத் தயனும் மாலும்
அல்லாதவரும் அமரர் கோனுஞ்
சொல்லிப் பரவும் நாமத்தானை'

'புத்தன் புரந்தராதி அயன் மால் போற்றி செயும்
பித்தன்'

'மால் அயன் வானவர் கோனும் வந்து
வணங்க அவர்க்கருள் செய்த'

'... ...வெண்மலரான் பாற்கடலான் செப்புவ போல்
எம்பெருமான் தேவர் பிரான் என்று'

'ஆலாலம் உண்டிலனேல் அன்றயன் மால் உள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவர் காண் சாழலோ !'

'முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய்
மூவரும் அறிகிலர் யாவர் மற்றறிவார்'

'முந்தும் நடுவும் முடிவுமாகிய மூவரறியாச்
சிந்துரச் சேவடியானை'

'மாலே பிரமனே மற்றொழிந்த தேவர்களே
நூலே நுழைவரியான்'

'மூவராலும் அறியொணா முதலாய ஆனந்த மூர்த்தியான்'

'மூவரும் முப்பத்து மூவரும் மற்றொழிந்த
தேவருங் காணாச் சிவபெருமான்'
'பண்டாய நான்மறையும் பாலணுகா மாலயனுங்
கண்டாருமில்லை'

'பிரமன் அரியென் றிருவருந் தம் பேதைமையால்
ப்ரமம் யாம் பரமம் என்றவர்கள் பதைப்பொடுங்க
அரனார் அழலுருவாய் அங்கே அளவிறந்து
பரமாகி நின்றவா தோணோக்கம் ஆடாமா.'

'அலரவனும் மாலவனும் அறியாமே அழலுருவாய்
நிலமுதற்கீழ் அண்டமுற நின்றது தான் என்னேடீ
நில மூதற்கீழ்அண்டமுற நின்றிலனேல் இருவருந்தம்
சல முகத்தால் ஆங்காரந் தவிரார் காண சாழலோ'

'நீண்ட மாலும் அயனும் வெருவ
நீண்ட நெருப்பை'

'திகழுத் திகழும் அடியும் முடியுங்
காண்பான் கீழ்மேல் அயனும் மாலும்
அகழப் பறந்துங் காண மாட்டா'

'நாராயணன் அறியா நான்மலர்த்தாள்'
'செங்கண் நெடுமாலுஞ் சென்றிடந்துங் காண்பரிய
பொங்கு மலர்ப்பாதம்'

'போற்றி மால் நான்முகனும் காணாத புண்டரிகம்'

'பரமன் காண்க பழையோன் காண்க
பிரமன் மால் காணாப் பெரியோன் காண்க'

'பிரமன் மாலறியாப் பெற்றியோனே'

பூங்கமலந் தயனொடு மால் அறியாத நெறியானே'

'மலரோன் நெடுமாலறியாமல் நின்ற அரும்பெருமான்'

'வெளிவந்த மாலயனும் காண்பரிய வித்தகன்'

'கமல நான்முகனுங் கார்முகில் நிறத்துக்
கண்ணனும் கண்ணுதற் கரிய விமலனே'

வளைக்கையானொடு மலரவன் அறியா வானவா'

'பூமேல் அயனொடு மாலும் புகலரிதென்றேமாறி நிற்க'

'அரியோடு பிரமற் களவறி யொண்ணான்'

'அரியோடு பிரமற் களவறி யாதவன்'

'வேண்டும் அயன் மாற்கு அரியோன் நீ'

'மாலறியா நான்முகனும் காணா மலையினை'

'அயன் மால் அறியொண்ணா'

'நெடியவனு நான்முகனு நீர்கான்றுங் காணவொண்ணா'

சேக்கிழார் :

'ஆதி முதல்வர் அரனெறியார் கோயில்'
'தேவரையும் மாலயன் முதல் திருவின் மிக்கார்
யாவரையும் வேறடிமைபாவுடைய எம்மான்'

'அரி அயற்கரியார்'

'மாலும் அயனுக்கும் அரியார் ஒருவர் வந்தார்'

ஆக, நம் அருளாளர்கள் திருவாக்குப்படி, தமிழர்கள் வணங்கும் சிவன், ஆரிய வேதத்தின் மும்மூர்த்திகளாகிய பிர்மா, விஷ்ணு (நாராயணா), ருத்ரா ஆகியவர்களுக்கு மேலானவன், முதலானவன்; பிர்மா, அரி (விஷ்ணு, திருமால், மால்) ஆகியோரால் காணமுடியாதவன்; அதனால் சிவன் பரம்பொருளாய் முழுமுதற்கடவுளாயிருக்கிறான். சிவனே, முதலானவன், மேலானவன் ஆனதால், ஆரிய வேத மதத்திற்குரிய மும்மூர்த்திகளாகவும் சிவன்தானிருக்கிறான் என்ற சமயத் தத்துவத்தைக் கொண்டது. தமிழரின் சைவ சித்தாந்தம். ஆனால், ஆரிய வேதங்களில், சிவன், இவ்வாறு தனிப்பட்ட சிறப்புநிலையிலிருப்பதாகக் கூறப்படவில்லை. ஆரிய வேதங்களின் முழுமுதற்பொருள், மெய்ப்பொருள், 'நாராயணா' என்றுமல்லவா எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. இங்கு, மறைக்கப்பட்ட, மறக்கப்பட்ட மற்றுமொரு தமிழரின் சமய உண்மையை விளக்கவேண்டும். சங்க இலக்கியத்திலும் திருமுறைகளிலும் குறிக்கப்படுகிற தமிழரின் வேதத்தில் சிவன்தான் இறைவன், மெய்ப்பொருள். திருமுறைகளில் சிவன், 'சங்கரன்' 'உருத்திரன்' ஆகிய பெயர்களாலும் அழைக்கப்படுகிறான். இவ்விரண்டு பெயர்களும் வடமொழி வேதத்திலுள்ள 'ருத்ர'னைத்தான் குறிக்கின்றன. அதனால் சிவன் வடமொழி வேதத்தின் தெய்வம்தான் என வடமொழியாளர்கள் புகுத்திய விளக்கம் தமிழர்களால் ஏற்றுக்

கொள்ளப்பெற்று இதன் காரணமாகவும் வேதம்,மறை என்றால் அவை ஆரிய வேதம்தான் என்ற பிழையான கருத்து தமிழகத்தில் நிலைபெற்றுள்ளது. 'சங்கரன்', 'உருத்திரன்' ஆகிய இரு சொற்களும் தமிழ் சொற்களே; இச்சொற்களைச் சிவனைக் குறிக்கப் பயன்படுத்திய நம் அருளாளர்கள் வடமொழி வேதத் தெய்வமான 'ருத்ர'னை நினைக்கவே இல்லை. 'சங்கரன்' என்ற பெயரை, சில நூற்றாண்டுகளாக, ஆரியரின் வேத மதத் தாக்கத்தால் வழக்கத்தில் உள்ள 'சங்காரன்' 'சம்காரன்', அதாவது 'அழிப்பவன்' என்ற பொருளில் நம் அருளாளர்கள் அன்று பயன்படுத்தவில்லை என்பதை மிகத் தெளிவாக நம்மால் அறியக்கூடும். சிவனுக்கு 'அரன்' என்ற தமிழ்ப் பெயர் இருப்பதை அறிவோம், 'சங்கு', 'அரன்' ஆகிய இரு தமிழ்ச்சொற்கள் சேர்ந்து 'சங்கரன்' என்று வந்துள்ளது. இதன் பொருள் சங்கின் நிறத்தையுடைய அரன் என்றாகிறது. இந்த உண்மை நிலைக்கு ஆதாரமாக உள்ள மேற்கோள்கள் கீழே கொடுக்கப்படுகின்றன.

சம்பந்தர் :

'சங்கொடு சாயலெழில் கவர்ந்த சைவர்'

'சங்கேயொத் தொளிர் மேனிச் சங்கரன்'

'சங்கு செம்பவளத்திரண்'

அப்பர் :

'சங்கொத்த நீற்றெஞ் சதுரா போற்றி'

'பாலொத்த வெண்ணீற்றர்'

'சங்கொத்த மேனிச் செல்வா'

'சங்க வெண்ணீற் றண்ணலை'

சுந்தரர் :

'பால் வெண்ணீற்றன்'

'சங்கரன், எனும் பெயருக்கு பிழையான பொருள் கொண்டிருப்பது போலவே, 'உருத்திரன்' எனும் சிவனின் பெயருக்கும் நாம் பிழையான பொருள் கொண்டுள்ளோம். நம் அருளாளர்கள் உருத்திரன் என்ற சொல்லை சிவனைக் குறிக்கத்தான் பயன்படுத்தினார்களேயன்றி, வடமொழி வேதத்தில் உள்ள 'ருத்ர'னைக் குறிப்பிட்டு

பயன்படுத்தவில்லை. 'உருத்திர'னும் தமிழ்ச் சொல்லே. 'உரு' 'திரன்' ஆகிய இரு தமிழ்ச் சொற்கள் சேர்ந்து 'உருத்திரன்' என வந்துள்ளது, இத்தமிழ்ச் சொல் 'உருவத்தில் மூன்று' அல்லது மூன்று உருவம்' என்ற பொருளுடையது. 'திரு 'எனும் சொல்லி லிருந்து வந்தது திரன். சிவன் மூன்று உருவமுடையவன் என்பதைக் குறித்து, நம் அருளாளர்கள் அவனுக்கு (சிவனுக்கு) 'உருத் திரன்' என்ற பெயரைக் கொடுத்துள்ளார்கள்.

சம்பந்தர் :

'திருவுருவன்'

'மூன்றுருவாகி'

'மலரோன் செங்கண் மாலீசனென்னும்
மூவராய முதலொருவன்'

'மூவருமாகி யிருவருமாகி முதலவனுமாய் நின்ற மூர்த்தி'

'திருத்தனே'

'கருத்தன் உருத்திரன்'

'திருவுருச் சைவனே'

அப்பர் :

'உருவ மூன்றாய்'

'ஓர் உருவே மூவுருவ மான நாளோ'

'மூவனாய் முதலாயிவ் வுலகெலாம் காவனாய்'

'தீண்டற்கரிய திருவுருவை'

'திருத்தனாய் நின்ற தேவன்'

'உருத்திர மூர்த்தி போலும்'

மூவுருவாய முதல்வர்'

'மூவன்காண் மூவர்க்கு முதலானான் காண்'

'ஒருவராயிரு மூவரு மாயவன்'

'திருவனே'

'திருத்தனே'

'உரு மூன்றாய்'

சுந்தரர் :

'மூவருருத்தனதா மூல முதற்கருவை'

'மூவராயு மிருவராயு முதல்வனவனே'

'மூவரென விருவரென முக்கண்ணுடை மூர்த்தி'

மாணிக்கவாசகர்

'உள்ளப்படாத திருவுருவை'

'உரு மூன்றுமாகி'

ஆக, தமிழ்க்கடவுள் சிவனைக் குறிக்க தமிழ் இலக்கியத்தில் பயன்படுத்தப்பெற்றுள்ள 'சங்கரன்', 'உருத்திரன்' ஆகிய தமிழ்ப் பெயர்களுக்கும் வடமொழி வேத தெய்வமான 'ருத்ரா' விற்கும் எவ்வித தொடர்புமில்லை என்பது தெளிவாகவில்லையா? தமிழரின் அரநெறி அதாவது சிவநெறி தத்துவத்தின்படி சிவன் வெறும் அழித்தல் தொழிலை மட்டும் செய்யவில்லையே. அங்ஙனமிருக்க, 'சங்காரம்' என்ற சொல்லிலிருந்து 'சங்கரன்' வந்ததாகத் தமிழர் ஏற்றுக் கொண்டனர் என்பது எவ்வளவு பொருத்தமற்றது.

அடுத்து, தமிழரின் வேதத்திற்கும் ஆரியரின் வடமொழி வேதத்திற்கும் இடையே உள்ள முக்கியமானதொரு தத்துவ வேறுபாட்டினைக் காண்போம்.

ஆரிய வேதத்தின்படி, பிர்மா, விஷ்ணு, ருத்ர (தமிழகத்துத் தொடர்பு ஏற்பட்ட பிறகு ஆரியரால் சிவன் எனக் குறிப்பிடப் பட்டவன்) முறையே படைத்தல், காத்கல், அழித்தல் தொழில் களைச் செய்கிறார்கள். ஆனால் தமிழரின் சைவ சமய சிந்தாந்தத் தின்படிப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்களையும் சைவ சித்தாந்தப் பரம்பொருளாகிய சிவனே நிகழ்த்துகின்றான். தமிழரின் சைவ சமயச் சிவன், இவ் ஐந்தொழில்களைச் செய்வதை விளக்கும் வகையில் தமிழர்கள் அமைத்துக்கொண்டதுதான் ஆடவல்லான் (கூத்தன், நடராசர்) திருவுருவம்.

திருமூலர் :

அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம்
அரன் அங்கி தன்னில் அறையிற் சங்காரம்
அரனுற் றணைப்பில் அமருந் திரோதாயி
அரனடி யென்றும் அனுக்கிரகம் என்னே.

படைப்பு மளிப்பும் பயிலிளைப் பாற்றுந்
துடைப்பு மறைப்புமுன் தோன்ற அருளுஞ்
சடைத்தை விடுத்த அருளுஞ் சகலத்
தடைத்த அனாதியை ஐந்தெனலாமே.

மருவுந் துடியுடன் மன்னிய விச்சு
மருவிய அப்பும் அனலுடன் கையுங்
கருவின் மிதித்த கமலப் பதமும்
உருவில் சிவாய நமவென வோதே.

உண்மை விளக்கம் :

"தோற்றம் துடியதனில் தோயும் திதி அமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் ஊற்றமாய்
ஊன்றும் மலர்ப்பதத்தில் உற்ற திரோதம் முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"

தமிழகத்தில் எல்லாச் சிவன்கோயில்களிலும் நடராசர் திருவுருவம் வைத்துப் போற்றி வழிபடப்பெற்று வருகின்றது. இத்தோற்றம் சைவ சித்தாந்தத் தத்துவத்தை விளக்கும் நிலையில் உள்ளது. சிவனின் இந்த ஐந்தொழிற் திருக்கூத்து வடிவத்தின் மாட்சிமையும், சமயம் சார்ந்த நுட்பமும், கலைச் சிறப்பும் உலகளாவிய பாராட்டுதலையும் புகழையும் பெற்றிருக்கின்றன. இவ்வடிவின் ஒவ்வொரு பகுதியும் உயிர்த்தன்மையுடன் அறிவியல் உண்மையையும், நுண்மையையும், நலத்தையும் உள்ளடக்கிக்கொண்டு ஒப்புயர்வற்றுத் திகழ்கின்றது. தமிழர் வேதத்தின் இயல்பினை இக்கூத்து விளக்குவதாக உள்ளது என்பதைத் திருமூலர்,

"நீலாங்க மேனியன் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்ப வந்தேனே" (திரும.77)

என்றும் "வேதாந்தக் கூத்தனை" (190) என்றும் கூறி உணர்த்துகிறார் ; 'மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே' (1726) என்றும் விளக்குகிறார். இவ்வாறான சிவனின் ஐந்தொழில் தத்துவமும், நடராசர் திருவுருவத் தத்துவமும் ஆரிய வேதத்திற்குரியவையல்ல என்பதும் உரைப்படவேண்டும்.

மேலும், திருமுறைகள், தமிழரின் முழுமுதற் கடவுளான சிவனைத் தமிழோடும் தமிழரோடும் நெருக்கமாகத் தொடர்பு படுத்தியுள்ளன.

திருமூலர் :

திருமந்திரம் 81—'என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே'

,, 87 -- அங்கி மிகாமை வைத்தான் உடல் வைத்தான்
எங்கு மிகாமை வைத்தானுலகேழையுந்
தங்கி மிகாகை வைத்தான் தமிழ்ச் சாத்திரம்
பொங்கி மிகாமை வைத்தான் பொருள் தானுமே.

,, 1089 –'செந்தமிழாதி தெளிந்து வழிபடு
நந்தி இதனை நவமுரைத்தானே'

,, 2115 –'முத்தியை ஞானத்தை முத்தமிழ் ஓசையை'

சம்பந்தர் :

'செந்தமிழர் தெய்வமறை நாவர்செழு
நற்கலை தெரிந்த வரோடு'

'செந்தமிழோர்கள் பரவி யேத்தும்'

அப்பர் :

'முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்'
'செந்தமிழோ டாரியனைச் சீரியானை'

சுந்தரர் :

'தண்டமிழ் நூற்புல வாணர்க்கோர் அம்மானே'

''நமக்கும் அன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க
அர்ச்சனை பாட்டே ஆகும் ஆதலால் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடு' என்றார் தூாமறை பாடும் வாயார்''

என்று, சுந்தரரைப் தடுத்தாட் கொண்டபின், சிவன் சுந்தரரைப் பணித்ததாகச் சேக்கிழார் பாடியுள்ளார்.

'சீரார் நாவலர்கோன் ஆரூரன் உரைத்த தமிழ்
பாரோர் ஏத்தவல்லார் பரலோகத் திருப்பாரே'

என்கிறார் சுந்தரர்,

இவ்வாறு தமிழ்மேல் சிவனுக்குப் பற்று இருந்த நிலை ஆரிய வேதத்தால் ஏற்றுக் கொள்ளக்கூடியதல்லவே. 'ஆரிய வேத சப்தங்களெல்லாம் ஸமஸ்கிருத பாஷையிலேயே இன்றும் இருந்து வருகின்றன' என்றல்லவா காஞ்சி சங்கராச்சாரியார் அவர்கள் கூறியுள்ளார். இத்தகைய வேதமா தமிழ்ச் சாத்திரமாகும்; இந்த வடமொழி வேதம்தான் சங்க இலக்கியத்திலும் திருமுறைகளிலும் குறிப்பிடப்பட்டுள்ள வேதம் என்று தமிழர் எடுத்துக்கொள்வது சரிதானா?

தமிழரின் சமயத்திற்கு 'சிவநெறி' என்ற பெயர் ஆதியிலிருந்து வருவது யாவரும் அறிந்ததே. 'சிவநெறி' எனும் சொல் திருமந்திரத்திலும் இதர திருமுறைகளிலும் வருகிறது. சேக்கிழார், தமிழகத்துச் சைவசமய நெறியை 'வேத நெறி', 'வேத நன்னெறி', 'தெய்வ நெறி' 'சைவநெறி' என்றெல்லாம் கூறியுள்ளார். ஆரியர்கள் ஆரிய வேத மதத்தை 'சிவநெறி' என்றோ 'சைவ நெறி' என்றோ குறிப்பிடுவதில்லை.உண்மையில் ஆரிய வேதங்கள், ஆரிய வைணவ நெறிக்குமல்லவா இடங்கொடுத்துள்ளன. அவர்களின் இரண்டு நெறிகளுக்கும் நான்கு ஆரிய வேதங்கள்தானே மூலம் மேலும் ஆரிய வேதங்களில் வாயு, வருணன், இந்திரன், அக்னி, யமன் என்று பல கடவுள்கள் உளளன. இவைகளிலிருந்தும், ஆரிய வேத நெறி வேறு, தமிழரின் சைவ நெறி வேறு என்று விளங்கவில்லையா. ஆக, தமிழர் குறிப்பிடும் வேதம் ஆரியருடைய வேதமல்ல என்பது தானே முடிவு.

சங்க நூல்களும் தமிழகத்துச் சைவ சமய அருளாளர்களும் சிவனருளியதாகக் குறிப்பிடுகிற வேதத்திற்கும் ஆரியரின் வடமொழி வேதத்திற்கும் உள்ள மற்றுமொரு முக்கியமான அடிப்படை வேறுபாட்டை இப்பொழுது காண்போம்.

ஆரிய வேதங்களின் அடிப்படையில் பின்பற்றப்படுகிற மதமான வேத மதத்தின் தத்துவத்தை ஆரிய இனத்தைச் சேர்ந்த ஆதி சங்கரர், இராமானுசர், மாத்வாத்சாரியர் ஆகிய மூன்று தத்துவ ஞானிகள் மூன்றுவிதமாக நிலைநாட்டியுள்ளார்கள். இம்மூவருடைய காலமாவது :

| | |
|---|---|
| ஆதிசங்கரர் | ... கி. பி. 788 - கி. பி. 820. |
| இராமானுசர் | ... கி. பி. 1017 - கி. பி. 1137. |
| மாத்வர் | ... கி. பி. 1199 - கி. பி. 1298 |

வியாசரால் வடமொழியில் எழுதப்பட்டுள்ள பிரம்மசூத்திரத்திற்கு இம்மூவரும், தனித்தனியே!உரை எழுதி ஆரிய வேத மதத்தின் தத்துவத்தை விளக்கியுள்ளார்கள். தமிழகம் பற்றிய குறிப்பினைக் கொண்டுள்ள வடமொழி மகாபாரதத்தை எழுதிய வியாசர் இயற்றிய பிரமசூத்திரத்திற்கு உரை எழுதியவர்கள் ஆதிசங்கரர், இராமானுசர், மாத்வர் என்று இந்நூலின் தொடக்கத்தில் குறிப்பிட்டிருப்பதையும் நினைவுபடுத்திக் கொள்ளலாம். ஆதிசங்கரர் விளக்கியுள்ள தத்துவம் அத்வைதம் (இரண்டல்ல) எனவும், இராமானுசர் விளக்கியுள்ள தத்துவம் விசிஷ்டாத்வைதம் எனவும், மாத்வாச்சாரியார் விளக்கியுள்ள தத்துவம் த்வைதம் (இரண்டு) எனவும் வழங்கப்படுகின்றன. இம்மூன்று தத்துவங்களும் ஒன்றுக்கொன்று சற்று மாறுபட்டுள்ளன. இம்மூன்று தத்துவங்களிலிருந்தும் தமிழரின் சைவ சித்தாந்தம் மாறுபட்டுள்ளது என்பது அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள பொதுக்கருத்தாகும். பதி, பசு, பாசம் அல்லது இறை, உயிர், தளை என்னும் முப்பொருள் உண்மையினை வலியுறுத்தல் சைவ சித்தாந்தத்தின் தனிச் சிறப்புக்களில் முதன்மையானதாகும். இம்முப்பொருள் முறையே கடவுள், உயிர், உலகம் எனவும் குறிப்பிடப்படுகின்றன. பதி, பசு, பாசம் ஆகிய மூன்றும் அனாதி எனத் திருமூலர் கீழ்க்காணும் திருமந்திரங்களில் கூறியுள்ளார்.

திருமந்திரம் 115—பதி பசு பாசம் எனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற் பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசம்.

பதி என்பது சிவனைக் குறிக்கிறது என்பது யாவரும் அறிந்ததே.

''சைவ சமயத் தனி நாயகன் நந்தி' என்றும்
''சைவப் பெருமைத் தனிநாயகன் தன்னை
உய்ய வுயிர்கின்ற ஓண்சுடர் நந்தி''

என்றும் திருமூலர் கூறியுள்ளார். (திரும. 1567, 1559).

திருமூலர் திருமந்திரம் 448-ல், ''சிவன் றான் பலபல சீவனும் ஆகி'' உள்ள நிலையைக் குறிப்பிட்டு, அதன் காரணமாகப் பதியைப் போலப் பசுவும் அனாதி எனக் கொள்ளப்படுகிறது என்று தெரிவித்து அதுபற்றி, மேலும் விளக்கத்தை திருமந்திரம் 2405-ல் கொடுத்துள்ளார்.

திருமந்திரம் 2405—அறிவறி வென்ற அறிவு மனாதி
அறிவுக் கறிவாம் பதியும் அனாதி
அறிவினைக் கட்டிய பாசம் அனாதி
அறிவு பதியிற் பிறப்பறுந் தானே

,, 2017—'சிவனெனச் சிவனென்ன வேறில்லை'

திருமந்திரங்கள் 445, 446 ஆகியவற்றையும் கவனத்தில் கொள்ளவும்,

குமரகுருபரர் :

'என்று நீயுளை மற்று அன்றே யானுளன்'

தாயுமானவர் :

'என்று நீ அன்று நான் உன்னடிமை யல்லவோ'

இந்த தத்துவத்தின் பேரில்தான், சிவன், 'பசுபதி' என்றழைக்கப்படுகிறான்.

அத்வைதத் தத்துவப்படி, ஈஸ்வரா (கடவுள்), ஜீவா, பிரபஞ்சம் (உலகம்) ஆகிய மூன்றில், ஈஸ்வரா, ஜீவா ஆகிய இரண்டின் முக்கியத் தன்மை 'பிரம்மன்'. 'எல்லாம் சிவன்' என்பது தமிழகததுச், சைவ சமயத்தின் தத்துவம். ஆரியன் வேத மதத்தின் மூலத்திற்கும், தமிழரின் சைவ சமயத்தின் மூலத்திற்கும் அடிப்படையில் வேறுபாடு இருப்பதனால்தான் இவ்விரண்டு சமயங்களின் தத்துவங்களில் வேறுபாடு தோன்றியுள்ளது. அதாவது, ஆரிய வேதமும், சிவனருளியதாகத் தமிழர் குறிப்பிடுகிற வேதமும் வெவ்வேறாகத்தான் இருந்திருக்க வேண்டும், சிவனைப் பரம்பொருளாகக் கொண்டுள்ள தமிழர் வேதம் வேறு. 'பிர்மா', 'நாராயணன்' ஆகியவர்களைப் பரம்பொருளாகக் கொண்டுள்ள ஆரியரின் வடமொழி வேதம் வேறு என்று உறுதிப்படுத்துவதற்கு இந்தத் தத்துவ வேறுபாடு துணை செய்யவில்லையா ? ஆதிசங்கரர், இராமானுசர், மாத்வாச்சாரியார் ஆகியவர்களின் ஆரிய வேத மதத் தத்துவங்களை விளக்கி நூல்கள் எழுதியதைக் கண்ட தமிழகத்துச் சைவ சமய அருளாளர்களுக்கு சைவ சமயத் தத்துவங்களை விளக்கும் நூல்கள் எழுதப்பட வேண்டுமென்ற எண்ணம் ஏற்பட்டிருக்க வேண்டும். இந்நிலையில்தான், சைவ சமயச் சாத்திரங்கள் தோன்றியிருக்க வேண்டும்.

ஆதிசங்கரர் காலம் பற்றி அண்மையில் தோற்றுவிக்கப் பட்டுள்ள சர்ச்சயை இங்குச் சிறிது ஆராயலாம் எனக் கருது கிறேன். ஆதிசங்கரர் காலம் கி.பி. 788—கி பி, 820 என்று அத்வைதப் பேராசிரியர் அமரர் டாக்டர் டி.எம்.பி. மகாதேவன், வடமொழி, தமிழ்மொழிப் பேரறிஞர் மு. அருணாசலம் போன்றவர் ள்ள் கூறியுள்ளனர். இதுவே அநேகமாக எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனால், இதற்கு முற்றிலும் மாறுபட்ட கருத்தினை, ஆதிசங்கரரின் தத்துவ மரபுவழி வருபவர்கள் சிலர், கடந்த சில ஆண்டுகளாகத் தெரிவித்து வருகின்றனர். இச்சிலர், ஆதிசங்கரரின் காலத்தைப் பல நூற்றாண்டுகளுக்கு முன் கொண்டு செல்கின்றனர். அதாவது ஆதிசங்கரர், ஏசுகிறிஸ்து பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன் தோன்றியவர் என்பது இவர்கள் இப்பொழுது தெரிவிக்கும் கருத்து, இவர்களே, ஆதிசங்கரர், சிருங்கேரி, துவாரகை, பத்ரிநாத், பூரி, காஞ்சிபுரம் ஆகிய இடங்களில் பீடங்களை நிறுவினார் என்றும், ஒவ்வொரு பீடத்துத் தலைவரும் ஆதிசங்கரருக்குப் பின், சங்கராச்சாரியார் என்ற பெயருடன் தொடர்ந்து பீடாதிபதியாக இருந்து வருவதாகவும் கூறுகிறார்கள். சிருங்கேரி சாரதா பீடத்தில் இப்பொழுது உள்ள ஜகத்குரு ஸ்ரீ பாரதி தீர்த்த மகா ஸ்வாமிகள் 36 ஆவது பீடாதிபதி யாகும். இப்பீடத்தின் 35 ஆவது பீடாதிபதியாயிருந்த ஸ்ரீ அபினவ வித்யாதீர்த்த சுவாமிகள் 21—9-89 ஆம் நாள் முத்தி அடைந்தார் கள். காஞ்சி காமாட்சி பீடத்தில் இன்று ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் 69 ஆவது சங்ராசாரியராக உள்ளார்கள். இவர்களுக்கு முன் 68 ஆவது பீடாதிபதியாக இருந்த ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் இப்பொழுது பரமாச்சாரியராக இருந்து வரு கிறார்கள். 69 ஆவது சங்கராச்சாரியராக ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் இப்பொழுது பீடத்திலிருக்கும் போதே, அவர்களுக்குப் பின் பீடத்திற்கு வர ஸ்ரீ சங்கர விஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் 70 ஆவது சங்கராச்சாரியாராக நியமனம் செய்யப்பட்டுள்ளார்கள். ஆக, காஞ்சியில் ஒரே காலத்தில் 68 ஆவது, 69 ஆவது, 70 ஆவது சங்கராச்சாரியர்கள் மூவர் உள்ளனர். ஆக, ஆதிசங்கரர் நிறுவிய பீடங்களில் இப்பொழுது பீடாதிபதிகளாக உள்ள சங்கராச்சாரியார் களின் எண்ணிக்கையைக் கொண்டு பார்க்கும் பொழுது, ஆதிசங்கரர் காலம் கி, பி, 8, 9 நூற்றாண்டுகளாகத்தான் இருக்க முடியுமென்பதும், அவர் காலத்தை கி. மு. காலத்திற்கு கொண்டு செல்வது பொருந்தாது என்பதும் தெளிவாகின்றன. 1988 ஆம் ஆண்டில், ஆதிசங்கரர் அவர்களின் 1200 ஆவது பிறந்த ஆண்டு விழாவினை இந்திய அரசே நாடு முழுவதும் கொண்டாடியுள்ளது என்பதையும் கவனிக்க வேண்டும்.

ஆரிய இனத்தினரின் நான்கு வேதங்களாகிய ரிக், யசுர், சாம, அதர்வன ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு, ஆதி சங்கரர், இராமானுசர், மாத்வாச்சாரியார் ஆகிய மூவரும் விளக்கியுள்ள தத்துவங்களைச் சார்ந்துள்ள ஆரிய வேத மதக் கோட்பாடு 'வேதாந்தம்' என்றழைக்கப்படுகிறது. ஆரிய வேத மதத்தினர் பயன்படுத்தும் 'வேதாந்தா' (ஆங்கிலத்தில் Vedanta) எனும் சொல் ஆரிய வேதத்தைச் சார்ந்த முடிவு எனப் பொருள்படுகிறது. இங்ஙனம், ஆரிய வேத மதத்தில் (இப்பொழுது Hinduism) குறிப்பிடப்பட்டுவருகிற 'வேதாந்தம்' ஆரிய வேதங்களைச் சார்ந்துள்ள சமய நெறியாகும். சங்க நூல்களிலும் திருமுறைகளிலும் குறிப்பிடப்படுகிற வேதம், ஆரிய வேதம் என்ற தவறான கருத்தை நூற்றாண்டுகளாகக் கொண்டுள்ள தமிழர், வேதம் என்ற சொல்லுக்குத் தாங்கள் தவறாகக் கொண்டிருந்த பொருளை வைத்தே, பண்டைய தமிழ்ச் சமய இலக்கியத்தில் வருகிற 'வேதாந்தம்' என்ற சொல்லிற்கு ஆரிய வேத மதக் கொள்கை என்றே பொருள் கொண்டு, அவ்வாறே தமிழ்ச் சமய இலக்கியத்தில் வருபவைகளுக்குத் தொடர்ந்து விளக்கம் கொடுத்து வருகின்றனர். மேலும், ஆரிய மதத்தில் உள்ள வடமொழிச் சொல்லின் ஒலியிலேயே 'வேதாந்தம்' என்ற தமிழ் சொல்லுமிருந்ததால், ஏற்கனவே தவறான கருத்துக் கொண்டிருந்த தமிழர், தமிழ் நூல்களில் கண்ட 'வேதாந்தம்' என்ற சொல்லை, வடமொழிச் சொல்லான 'வேதாந்தம்' என்றே எடுத்துக்கொண்டு, அதன்பேரில், தமிழ் நூலில் வருகிற 'வேதாந்தம்' ஆரிய மத 'வேதாந்தம்' தான் என்ற முடிவை உறுதியாக மேற்கொண்டு, அந்த முடிவை ஒத்து, தமிழ் நூல்களில் வரும் 'வேதம்', 'வேதாந்தம்' ஆகிய சொற்களுக்கு 'ஆரியவேதம்', 'ஆரிய வேதாந்தம்' என்று தவறான விளக்கம் கொடுக்கும் மரபை நிலைபெறச் செய்து விட்டனர்.

தமில் நூல்களில் வரும் 'வேதாந்தம்' என்ற சொல்பற்றி நம்மிடத்தே மரபாக வந்துள்ள பொருள் விளக்கம சரியானதா, பொருத்தமானதா என்று நன்கு ஆராய வேண்டும். சங்க நூல்களிலும் திருமுறைகளிலும் குறிப்பிடப்படுகிற வேதம் தமிழரின் வேதம், ஆரிய வேதமல்ல எனற உண்மை, தமிழகத்துப் பண்டைய இலக்கியங்கள் அனைத்திலிருந்தும் எடுக்கப்பட்டுள்ள சான்றுகளோடு முன்னரே தெளிவாகப் புலப்படுத்தியுள்ளதை நினைவில் கொள்ள வேண்டும். தமிழ் நூல்களில் வருகிற 'வேதம்' ஆரிய வேதமல்ல, தமிழ் வேதம் என்ற உண்மை உணரப்பட்ட நிலையில், தமிழ் நூல்களில் வரும் 'வேதாந்தம்' என்ற சொல்லின் பொருள் பற்றி குழப்பத்திற்கே இடமில்லை. 'வேதம்' தமிழ் வேதமன்றால் 'வேதாந்தம்' தமிழ் வேதத்தின் அந்தம், அதாவது முடிவு.

என்று பொருள்படும். இப்பொருளில்தான் 'வேதாந்தம், என்ற சொல் திருமந்திரத்திலும், இதரத் திருமுறைகளிலும் பயன்படுத்தப் பட்டுள்ளது. 'வேதத்தின் அந்தம்' 'எழுதா மறையீறும்', 'மறை யீறுகள்', 'வேதநூல் அந்தமுமாமே' ஆகிய சொற்கள் திருமந்திரங் களில் (1426, 2358, 1088 2792) வந்துள்ளதைக் கவனிக்கவும். தமிழ்மொழி, வடமொழி ஆகிய இரண்டிலும் வருகிற சொல்லான 'வேதம்' எப்படி வெவ்வேறான இரண்டு வேதங்களைக் குறிக் கின்றதோ, அதேபோல் இவ்விருமொழிகளிலும் வருகிற 'வேதாந்தம் என்ற சொல்லும் வெவ்வேறான இரண்டைக் குறிக்கின்றது. தமிழ் மொழியில் வருகிற 'வேதாந்தம்', தமிழ்மொழியில் உள்ள 'வேதம்' என்ற சொல்லிலிருந்து வந்தது. இங்கே வேதம் தமிழ் வேதத்தைக் குறிக்கும்போது, இச் சொல்லிலிருந்து வந்துள்ள 'வேதாந்தம்' தமிழ் வேதத்தின் அந்தந்தைத்தானே குறிக்கும். ஆக இவ்விரண்டு சொற் களையும், வடமொழியில் வருகின்ற சொற்களோடு இணைத்துப் பொருள் கொள்ளக் கூடாது. அவ்வாறு பொருள் கொண்டால் உண்மைப் பொருள்தெரியாமல் போகும்.

சைவ சமய நெறியை விளக்கும் பத்தாம் திருமுறையான திரு மந்திரத்தில் 'வேதாந்தம்', 'சித்தாந்தம்,' வேதாந்த சித்தாந்தம்', 'சித்தாந்த வேதாந்தம்' ஆகிய சொற்கள் பல இடங்களில் பயன் படுத்தப்பட்டுள்ளன. தமிழ் வேதத்தைக் குறிக்கும் பொருளில் இச்சொற்கள் எல்லாம் திருமந்திரத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளன. 'வேதாந்தம்' என்ற சொல் எவ்வாறு தமிழ் வேதச் சொல்லாகிறது என்பது மேலே விளக்கப்பட்டுள்ளது. அதையே,

திருநெறியாவது சித்த சித்தன்றிப்
பெருநெறி யாய பிரானை நினைந்து
குருநெறி யாஞ்சிவ மாநெறி கூடும்
ஒரு நெறி ஒன்றாக வேதாந்தம் ஓதுமே'

எனும் திருமந்திரமும் (54), திருமந்திரம் 190ல் உள்ள 'வேதாந்தக் கூத்தனை' என்பதும் உறுதிப்படுத்துகின்றன.

'சித்தாந்தம்' எனும் சொல் சைவ சமய சித்தாந்தத்தைக் குறிக் கிறது என்பதில் ஐயமில்லை. அச்சொல் பற்றிப் போட்டியில்லை. அதனால் விளக்கம் தேவையில்லை. இனி நாம் விளக்கத்திற்கு எடுத்துக் கொள்ளவேண்டியவை ''வேதாந்த சித்தாந்தம்'', ''சித்தாந்த வேதாந்தம்'' ஆகிய இரண்டு சொற்றொடர்களாகும். இவ்விரு சொற்றொடர்களும் தமிழகத்துச் சைவ சமய சித்தாந் தத்தைத்தான் குறிக்கின்றன என்று இங்குத் தொடகத்திலேயே கூறலாம். சொற்றொடரில் உள்ள சொற்களை இரண்டு சொற் களாகத் தனித்தனியே பிரித்து, ஒவ்வொரு சொல்லுக்

ஒம் தனித்தனியே பொருள் கொள்ளும் மரபினால்தான் குழப்ப மேற் பட்டுள்ளது. உண்மைப் பொருளும் மறைந்து விட்டது. 'வேதாந்த சித்தாந்தம்' என்பதை 'வேதாந்தம், சித்தாந்தம்' என்று பிரித்து, பிரிக்கப்பட்ட 'வேதாந்தம்' எனும் சொல் ஆரிய வேதக்கோட்பாட் டைக் குறிக்கிறது என்றும், பிரிக்கப்பட்ட 'சித்தாந்தம்' எனும் சொல் சைவ சித்தாந்தத்தைக் குறிக்கிறது என்றும் பொருள் கொண்டு, அதன் பேரில் ஆரிய வேதாந்தம், சைவ சித்தாந்தம் ஆகிய இரண்டும் சேர்ந்துள்ள சமயநிலைக்குத் திருமந்திரம் துணை யாக இருக்கிறது என்ற பிழையான விளக்கம் கொடுக்கப்படுகிறது. இதே பிழைதான் ஏற்படும் 'சித்தாந்த வேதாந்தம்' என்பதை 'சித்தாந்தம்' 'வேதாந்தம் என்று தனித்தனிச் சொல்லாக பிரித்துப் பொருள் கொண்டால் திருமூலர், இவ்விருசொற்றொடர்கள் மூலம் தமிழ் வேதத்தின் அந்தத்தையும் சித்தாந்தத்தையும் குறிப்பிடுகிறார் என்பதைத் திருமந்திரங்களிலிருந்தே அறியலாம். 'வேதாந்த சித்தாந்தம்' என்ற சொற்றொடர் 'வேதத்தின் அந்தமாக உள்ள (முடிவாக உள்ள) சித்தாந்தம்' என்றும், சித்தாந்த வேதாந்தம்' என்ற சொற்றொடர் 'சித்தாந்தமாய் உள்ள வேதாந்தத்தின் முடிவு' என்றும் பொருள்படுமாறு திருமூலர் பயன்படுத்தியுள்ளதை திரு மந்திரங்களே தெளிவுபடக் காட்டுகின்றன. ,சித்தாந்தம்,, 'வேதாந்த சித்தாந்தம்', 'சித்தாந்த வேதாந்தம்' ஆகிய சொற்கள் ஒரே தத்துவத்தைக் குறிப்பதைக் கீழ்க்காணும் திருமந்திரங்களி லிருந்து தெளிவாக அறியலாம்.

2373 – நித்தம் பரனோ டுயிருற்று நீள்மனஞ்
சத்த முதல் ஐந்துந் தத்துவத்தால் நீங்கிச்
சுத்த மசுத்தந் தொடரா வகை நினைந்
தத்தன் பரன்பால் அடைதல் சித்தாந்தமே.

2401 – அனாதி சிவனைம் மலமற்றப் பாலாய்
அனாதி யடக்கித் தனைக்கண் டானாய்த்
தனாதி மலங்கெடத் தத்துவா தீதம்
வினாவு நீர் பாலாதல் வேதாந்த வுண்மையே

1437, 2545 – 'சிவமாதல் சித்தாந்த சித்தியே'

2393 – 'சிவமாதல் வேதாந்த சித்தாந்த மாகும்'

2571 – துவந்தத் தசியே தொந்தத் தசியும்
அவை மன்னா வத்து வயத்தேக மான
தவமுறு தத்துவ மசி வேதாந்த
சிவமா மதுஞ்சித்தாந்த வேதாந்தமே

1422 – 'வேதாந்தஞ் சுத்தம் விளங்கிய சித்தாந்தம்'

2394—'சித்தாந்த வேதாந்தஞ் செம்பொருளாதலாற்
சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே'

2395—'சிவனைப் பரமனுட் சீவனுட் காட்டும்
அவமற்ற வேதாந்த சித்தாந்த மானான்'

2791—''சிவமாடும் வேதாந்த சித்தாந்தத்துள்ளே''

2400—அன்றாகு மென்னாதை வகையந்தந் தன்னை
ஒன்றான வேதாந்த சித்தாந்த முள்ளிட்டு
நின்றால் யோகாந்த நேர்படு நேர்பாட்டால்
மன்றாடி பாத மருவலு மாமே.

2792—நாதத்தின் அந்தமும் நாற்போத அந்தமும்
வேதத்தின் அந்தமும் மெய்ச் சிவானந்தமுந்
தாதற்ற நல்ல சதாசிவா னந்தத்து
நாதப் பிரமஞ் சிவநட மாமே

2384—''வீவற வேதாந்த சித்தாந்த மேன்மையைக்
கூவி யருளிய கோனைக் கருதுமே''

1428-- கேடறு ஞான கிளர்ஞான பூபதி
பாடறு வேதாந்த சித்தாந்த பாகத்தின்
ஊடுறு ஞானோ தயனுண்மை முத்தியோன்
பாடுறு சுத்தசைவப்பத்த நித்தனே.

1429— ஆகமம் ஒன்பா னதிலான நாலேழு
மோகமி னாலேழு முப்பேத முற்றுடன்
வேகமில் வேதாந்த சித்ாந்த மெய்மையொன்
றாக முடிந்த வருஞ் சுத்த சைவமே.

1449— சரியாதி நான்குந் தருஞான நான்கும்
விரிவான வேதாந்த சித்தாந்த மாறும்
பொருளானது நந்தி பொன்னகர் போந்து
மருளாகு மாந்தர் வணங்க வைத்தானே.

233—மறையோ ரவரே மறையவ ரானால்
மறையோர் தம் வேதாந்த வாய்மையில் தூய்மை
குறையோர்தன் மற்றுள்ள கோலா கலமென்
றறிவோர் மறை தெரிந் தந்தணராமே.

ஆக, 'வேதாந்த சித்தாந்தம்', 'சித்தாந்த வேதாந்தம்' ஆகிய இருசொற்றொடர்கள் மூலம் திருமூலர் விளக்குவது என்ன என்றால்

சிவன் பற்றினை விட்டுச் சிவமாதல் தத்துவத்தைத் தமிழகத்து வேதாந்தம் உணர்த்த, அத்தத்துவ இலட்சியத்தை அடைவதற் கான நெறியாகத் தமிழகத்துச் சைவசமயத்தின் சித்தாந்தம் அமைந் துள்ளது என்பதுதான். அதாவது பற்றினைவிட்டு சித்தாந்தச் செந்நெறியில் சென்று சிவமாதல் தமிழரின் வேதாந்தத்தின் இலட் சியமாகும். 'சிவமாவது வீடே' என்கிறது திருமந்திரம் 979. பற்று விடப்படவேண்டியதின் அவசியம்பற்றி பல குறள்களில் திருவள்ளுவர் அழகாகக் கூறியுள்ளதை இங்கே நினைவு கொள்ள வேண்டும்.

''யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்'' என்னும் குறளும்

''ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்த மாமே'' என்னும் திருமந்திரமும்

(2615) எவ்வளவு பெரிய வாழ்வியல் உண்மையை, எவ்வளவு எளிய முறையில் தெரிவிக்கின்றன. இந்த இடத்தில்,

பற்றுக பற்று அற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

பற்று அற்ற கண்ணே பிறப்பு அறுக்கும் மற்று
நிலையாமை காணப்படும்.

பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்று விடாஅ தவர்க்கு.

ஆகிய குறள்களையும்,

ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்
நடுங்குவ தில்லை நமனுமங்கில்லை
இடும்பையும் இல்லை இராப்பகல் இல்லை
படும்பயன் இல்லை பற்றுவிட்டோர்க்கே.

பற்றது பற்றிப் பரமனைப் பற்றுமின்
முற்றது எல்லா முதல்வன் அருள்பெறில்
நிற்ற விரகிற் கிளரொளி வானவர்
கற்றவர் பேரின்பம் உற்று நின்றாரே

ஆகிய திருமந்திரங்களையும் குறிப்பிடவேண்டும்.

திருமந்திரம் 229 — வேதாந்தம் கேட்க விரும்பிய வேதியர்
வேதாந்தம் கேட்டுந் தம் வேட்கை ஒழிந்
திலர்
வேதாந்த மாவது வேட்கை ஒழிந்திடம்
வேதாந்தங் கேட்டவர் வேட்கை விட்டாரே

திருமந்திரம் 1702— வேட்கை விடுநெறி வேதாந்த மாதலால்
வாழ்க்கைப்புனல்வழி மாற்றிச்சித்தாந்தத்து
வேட்கை விடுமிக்க வேதாந்தி பாதமே
தாழ்க்குத் தலையினோன் சற்சீடனாமே

மேலே உள்ள திருமந்திரங்களில் குறிப்பிடப்படும் இவ்விரண்டு பொருள்களுள் ஒன்றிற்கொன்று உள்ள தொடர்பினை உணர்த்தும் வகையில் 'சித்தாந்த வேதாந்தம்' அல்லது 'வேதாந்த சித்தாந்தம்' என்ற சொல்லாட்சி திருமுறைகளில் உள்ளது. இதைத்தான் 'வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்' என்பதும் தெரிவிக்கிறது.

இச்சொற்கள், தமிழர்களால் சிவனருளியதாகக் கருதப்படும் தமிழ் வேதத்தோடு இணைக்கப்பட்டுள்ள காரணத்தால்தான், திருமூலர்.

''வீவற வேதாந்த சித்தாந்த மேன்மையைக்
கூவி யருளிய கோனைக் கருதுமே''

என்று திருமந்திரம் 2384-ல் கூறியுள்ளார். இதில், வேதாந்தம் சித்தாந்தம் எனத் தனித் தனியாகப் பிரித்து அதன் பேரில் வட மொழி வேதத்தையும் தமிழரின் சித்தாந்தத்தையும் குறிப்பதாகப் பொருள் கொள்ள இடமில்லாததைக் காண்கிறோம்.வேதாந்தத்தையும் சிவன் அருளியதாகக் அல்லவா இத்திருமந்திரத்தில் கூறப்பட்டுள்ளது சிவன் இரட்டையாக அருளிய தமிழ் வேதம், தமிழ் ஆகமம் ஆகியவற்றிலிருந்து வளர்ந்ததுதான் 'வேதாந்த சித்தாந்தம்' என்று மேலும் தெளிவாக, முடிவாக திருமந்திரம் 2404-ல் திருமூலர் விளக்கியுள்ளார்.

திருமூலர் 2404— முதலாகும் வேத முழுதா கமமகப்
பதியான ஈசன் பகர்ந்த திரண்டு
முதிதான வேத முறைமுறை யாலமர்ந்
ததிகாதி வேதாந்த சித்தாந்தமாமே.

வேதாந்த சித்தாந்தத்தை அருளியவன் சிவனே என்பதையும் உறுதிப்படுத்தும் வகையில் திருமூலர், 2700-ஆம் திருமந்திரத்தில்

"ஈசன் சிகராதிதான் சிவவேதமே" எனவும், 2384-ஆம் திருமந்திரத்தில்,

"விவற வேதாந்த சித்தாந்த மேன்மையைக்
கூவி யருளிய கோனைக் கருதுமே"

எனவும் கூறியுள்ளார்.

ஆக, தமிழரின் 'சித்தாந்தம்', 'வேதாந்தம்', 'சித்தாந்த வேதாந்தம்' அல்லது 'வேதாந்த சித்தாந்தம்', சீவன் சிவமாதலை விளக்குகிறது. ஆனால் ஆரிய வேதத்தின் பகுதியான உபநிடதம் சீவன் பிரமனாகிறது என்கிறது.

இதுகாறும் குறிப்பிடப்பட்டுள்ள திருமந்திரங்களிலிந்து, நாம் கண்ட உண்மையாவது : 'வேதாந்தம்' என்ற சொல்லால் தமிழ் வேதத்தின் அந்தம் அல்லது முடிவு குறிப்பிடப்பட்டுள்ளது என்பதும் 'வேதாந்த சித்தாந்தம்' 'சித்தாந்த வேதாந்தம்' ஆகியவை ஆரிய வேதத்தோடு தொடர்பு படுத்தப்படாமல். தமிழ் வேதத்தோடும், தமிழரின் சைவ சித்தாந்தத்தோடும் தொடர்பு படுத்தப்பட்டுள்ளன என்பதும் ஆகும் 'சிவவேதம்', 'சிவாகமம்', 'அரன் அடைந்த சிவநெறி' எனத் திருமந்திரங்களில் வருவதையும் குறித்துக்கொள்ளவேண்டும்.

இதுவரை விளக்கப்பட்டதிலிருந்து 'வேதாந்த சித்தாந்தம்' "சித்தாந்த வேதாந்தம்" ஆகிய சொற்றொடர்களில் ஆரிய 'வேதாந்தம்' இடம்பெறவில்லை என்றும் இரண்டும் தமிழகத்துச் சைவ சித்தாந்தத்தைக் குறிப்பவைதான் என்றும் முடிவாகவில்லையா ?

திருமூலர், தமிழரின் சைவ சித்தாந்த சமயத்தோடு தொடர்பு படுத்திப்பயன்படுத்திய 'வேதாந்தம்' என்ற சொல்லாலே, ஆரிய வேத மதக் கோட்பாடாகிய. வேதாந்தத்தையும் குறித்திருப்பதையும் காண்கிறோம். ஆரியரின் வடமொழி வேதாந்தத்தை, 'வேதாந்தம்' என்ற சொல்லாலேயே 2372-ஆம் திருமந்திரத்திலும், 'வேதாந்த தத்துவம்' என்ற சொல்லாலே 2172-ஆம் திருமந்திரத்திலும் குறிப்பிட்டுள்ளார் ; 2176-ஆம் திருமந்திரத்தில், ஆரிய மத 'வேதாந்தம்' இருபத்தெட்டு தத்துவங்களைக் கொண்டுள்ளது என்று கூறியுள்ளார். 2179-ஆம் திருமந்திரத்தில், இவ்வேதாந்தக் கோட்பாட்டினை உடையவரை வேதாந்தி எனக் குறிப்பிட்டு, அந்த வேதாந்திக்கு இருபத்தெட்டு தத்துவங்களும், வைணவர்களுக்கு இருபத்து நான்கு தத்துவங்களும், சைவருக்கு முப்பத்தாறு தத்துவங்களும் உள்ளன என்றும் கூறியுள்ளார். இங்கே திருமூலர்

குறிப்பிட்டுள்ள தத்துவங்கள் யோகிகள், ஞானிகள் ஆகியோரால் ஆராயப்படவேண்டியவை

திருமூலர் 'தத்துவமசி'என்ற வடமொழிச் சொல்லின் தலைப்பிலேயும் சில திருமந்திரங்களை இயற்றியுள்ளார். இவைகளில் 'தத்துவமசி' என்ற வடமொழி வாக்கியத்தைத் திருமூலர் பயன்படுத்தியிருப்பதால், திருமூலர் குறிப்பிடுகிற வேதம், சைவ சமக் கோட்பாடுகள் ஆகியவை, ஆரிய வேதம், ஆரிய வேத மதக் கோட்பாடுகள் ஆகியவற்றைச் சார்ந்தவை எனக் கருத்துக் கொள்ள வேண்டியதில்லை.

'தத்துவமசி' என்பதற்குப் பொருள் "அது நீ ஆகிறாய்" (தத் = அது, த்வம் = நீ, அசி = ஆகிறாய்): அதாவது 'நீ அது ஆகிறாய்' என்பதுதான், தமிழரின் சைவ சித்தாந்தத் தத்துவமும் இதுதானே. 'நீ அது ஆகிறாய்' என்றுதான் சைவ சித்தாந்தமும் கூறுகிறது. அதாவது 'நீ சிவம் ஆகிறாய்' என்கிறது. அதாவது "சீவன் சிவனாகும்" என்பதுதான் இதன் பொருள். திருமூலர், சைவ சித்தாந்தத் தத்துவக் குறிக்கோளை கீழுள்ளவாறு தானே திருமந்திரங்களில் குறிப்பிட்டுள்ளார்.

| | | |
|---|---|---|
| திருமந்திரம் | 979 | —சிவமாவதே வீடு (முத்தி) |
| ,, | 2472 | —சிவனுடன் ஒன்றுதல் முத்தியே. |
| ,, | 1989, 2252<br>2545 | —சிவமாதல், சிவமாகுதல். |
| ,, | 2432 | —சிவப்பேறு அடைதல். |
| ,, | 633, 2486 | —சிவபதம் அடைதல் / சேரல் |
| ,,<br>,, | 635, 1821,<br>2054, 2716 | —சிவகதி எய்துதல். |
| | 2060 | —சிவகதி சேர்தல். |
| ,, | 3026 | —சிவயோகம் பெறுதல். |
| ,, | 2331 | —"தன்னை அறிந்து சிவனுடன் தானாக" |
| ,, | 2314 | —"தானே சிவமான தன்மை தலைப்பட" |

,, 2674 —சிவனை வழிப்பட்டுச் சிவமாந்தன்மை எய்தல்

,, 1825 —'சிவனவன் ஆகுமே'

,, 2991 —'சிவனவனாமே'

,, 1783 —'தானவனாட'

,, 2820, 2134, 2324, 1011 } 'தானவனாகி'. 'தானவனாக'.

,, 2646, 2660 —'அவன் இவனாமே'

திருமூலரின் இக்கூற்றுக்கள் ஆரிய வேத சமயக் கொள்கைகளுக்குப் பொருந்தாதவையாகும். மேலும், திருமூலர், சிவனைத்தான் 'வேத முதல்வன்', 'வேதப் பொருள்', 'பெருந்தெய்வம்' என்றும், 'சிவன் சிவத்துள் அடங்கும்' என்றும் குறிப்பிடுகிறார்.

அறிவறியாமை இரண்டு மகற்றி
செறிவறிவாய் எங்கும் நின்ற சிவனைப்
பிறிவறி யாது பிரானென்று பேணுங்
குறியறி யாதவர் கொள்ளறியாரே.

எனும் திருமந்திரத்தில், சிவனை வணங்கவேண்டியதின் முக்கியத்தையும் கூறியுள்ளார். 'சிவகதி' எனும் சொல்லை திருமூலருக்குப் பின் வந்த சைவ சமயாச்சாரியர்களும் பயன்படுத்தியுள்ளனர்.

இவ்வாறு சிவபரம்பொருளையும், சிவனுடன் சம்பந்தப்பட்ட சைவ சித்தாந்தத்தையும் விளக்குகின்ற திருமந்திரத்தை (நூலை), 'தத்துவமசி' என்ற வடமொழிச் சொற்றொடர் அந்நூலில பயன்படுத்தப்பட்டிருப்பதன் காரணமாக, ஆரிய வேதத்தோடும் ஆரிய வேத தத்துவங்களோடும் இணைப்பது முறையாகுமா? சைவ சித்தாந்தத்தின் தத்துவத்தை வடமொழி வாக்கியம் மூலம் விளக்க முடியும் எனத் திருமூலர் காண்பித்துள்ளார் என்று எடுத்துக்கொள்வதுதான் பொருத்தமாகும். சங்க இலக்கியத்திலும் திருமுறைகளிலும் குறிப்பிடப்படுகிற வேதத்திற்கும் ஆரியரின வடமொழி வேதத்திற்கும் உள்ள வேறுபாடுகள் இந்நூலில் முன்னர் விளக்கப்பட்டுள்ளன. சங்க நூல்கள், திருமுறைகள் குறிப்பிடுகிற வேதம், ஆரிய வேதத்திற்கு வேறான, மாறான தமிழர் வேதம் என்ற முடிவு சரியானதல்ல என்று மறுப்பதற்கு, அம்முடிவிற்குத் தடையாக உள்ள கருத்துக்கள், விபரங்கள் அந்நூல்களிலேயே (சங்க

நூல்கள், திருமுறைகள்) இருக்கின்றனவா என ஆராய்ந்து பார்த்து, அவைகளை அல்லவா எடுத்துக்காட்ட வேண்டும். இவ்வாறு மறுக்க விபரங்கள் இல்லையென்றால், அந்நூல்கள் தெரிவிக்கின்ற விபரங்களிலிருந்து காணும் மூடிவு ஏற்றுக் கொள்ளத்தக்கதுதானே.

ஆரிய வேத மதயத்திற்கும் தமிழினத்துச் சமயத்திற்குமிடையே காலப்போக்கில் அதிகக் கலப்பு ஏற்பட்டதன் விளைவாக, இரு சமயத்தினரும், 'இந்து மதம்' என்ற பெயரைப் பிற்காலத்தில் பெற்ற பொதுச்சமயத்தை அக்காலத்தில் பின்பற்றியதைத் தொடர்ந்து, ஆரியரின் நான்கு வேதங்களைப்பற்றிய குறிப்புக்கள் அதிக அளவில் பேச்சு வழக்கிலும், தமிழ நூல்களிலும் வந்தன. இச்சூழ்நிலையில், சங்க நூல்களிலும் திருமுறைகளிலும் குறிப்பிடப் படுகிற வேதம் யாது என்பது பற்றிச் சிந்திப்பதிலோ, அதன் உண்மை நிலையை உணர்ந்து தெளிவுபெறுவதிலோ தமிழினத்தார் அக்கறை கொள்ளாது போயினர். அதனால்தான் தமிழகத்துப் பண்டைய உண்மை நிலை மறைந்தது எனலாம்.

சங்க நூல்களிலும் திருமுறைகளிலும், தமிழினத்தோடு தொடர்பு படுத்திக் குறிப்பிடப்படுகிற வேதம் ஆரிய வேதமல்ல என்று கொள் வதற்கு உதவும் முக்கியமான மற்றொன்றையும் இறுதியாகக் கூற வேண்டும். ஆரிய வேதங்கள், ஆரிய சமுதாயத்தின் வாழ்க்கை முறைகளையும் ஆரிய குடும்பத்தின் வாழ்க்கை முறைகளையும் விரிவாக எடுத்துக் கூறுகின்றன. இத்தகைய விளக்கங்களைத் தமிழ் வேதம் கொண்டிருப்பதாகக் கூறப்படவில்லை. மேலும், ஆரிய வேதத்தில் கொடுக்கப்பட்டுள்ள விவரங்கள் தமிழினச் சமு தாயத்திற்கோ, குடும்பத்திற்கோ பொருந்துவனவாக இல்லாதிருப் பதையும் காணலாம்.

இதுகாறும் விரிவாக, நுட்பமாக எடுத்து விளக்கப்பட்டுள்ள வைகளை நினைவில் கொண்டால், சங்க நூல்களிலும் திருமுறை களிலும் வருகின்ற 'வேதம்', 'மறை' ஆகிய சொற்கள் தமிழரின் வேதத்தைத்தான் குறித்தன, ஆரியரின் வேதத்தைக் குறிக்க வில்லை என்ற ஐயமற்ற முடிவுக்குத்தான் வரமுடியும். இந்த முடி வின் பேரில், "வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க" என்று சேக்கிழார் கூறியுள்ளதற்குப் பொருள் கண்டால் வேதநெறி ஆரிய வேத நெறி அல்ல என்பதும், அது தமிழின வேத நெறியைத்தான் குறிக்கிறது என்பதும் எளிதில் விளங்கும். சேக் கிழாரே, இதைத் 'தெய்வ நெறி', 'சைவ நெறி' யென்றும் வேறு இடங்களில் குறிப்பிட்டுள்ளதைக் காண்கிறோம், மேலும், 'வேத நெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க' 'புனிதவாய்மலர் தழுத' வர் திருஞானசம்பந்தர் என்று சேக்கிழார் கூறியுள்ளதையும்

கவனிக்கவேண்டும். ஞானசம்பந்தர், தழைத்தோங்கச்செய்த வேத நெறி யாது ? ஞானசம்பந்தரே, "வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது நாதன் நாமன் நமச்சிவாயமே" என்று போற்றியுள்ளாரே, நமச்சிவாயத்தை மெய்ப்பொருளாகக் கொண்டது தமிழ் வேதமல்ல வா ; ஆரிய வேதமல்லவே. ஞானசம்பந்தர் குறிக்கும் வேதம் தமிழ் வேதந்தானே. ஞானசம்பந்தர் மேலும்,

"ஈறாய் முதல் ஒன்றாய் இருபெண் ஆண் குணம் மூன்றாய்
மாறா மறை நான்காய் வருபூதம் அவை ஐந்தாய்
ஆறார் சுவை ஏழோசையோடு எட்டுத்திசை தானாய்
வேறாய் உடன் ஆனான் இடம் வீழிம்மிழலையே"

என்றும் சிவனைத்தானே பாடியுள்ளார். தான் பரப்பும் சைவ நெறியை, 'தமிழ்' என்றே வர்ணித்தல்லவா ஞானசம்பந்தர், "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்" என்றும் "சிவநெறிய தமிழ்" என்றும் பாடியுள்ளார். "நற்றமிழ் ஞானசம் பந்தன் நான்மறை கற்றவன்" என்று தம்மைக் கூறிக்கொள்ளும் தமிழரான ஞானசம்பந்தர் கற்றது தமிழ் நான்மறையாகத் தானே இருக்கும்' அதனால், சேக்கிழார், ஞானசம்பந்தரோடு தொடர்பு படுத்திய வேதநெறி, தமிழ் வேத நெறிதான் ஆரிய வேத நெறி அல்ல. 'சைவத்துறை' என்பது சைவ சித்தாந்த வழிபாட்டு நெறியைக் குறிக்கிறது. ஆற்றிலே துறை உள்ளது போல், தமிழ் வேத சமயத்திற்குச் சைவ சித்தாந்தம் துறையாக, அதாவது வழி யாக உள்ளது .

அப்பர் :

"நிலைக்கொள்ளும் வழித்துறை ஒன்றறியேன்"

நம்மாழ்வார் :

"வணங்கும் துறைகள் பலபல ஆக்கி மதி விகற்பால்"

தமிழின வேத நெறியின் இலட்சியம், சைவ சித்தாந்தக் கோட் பாட்டு மூலம் அடையப்படுகிறது. "வேத நெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க" என்பதில் சேக்கிழார் ஆரிய வேத நெறி, சைவ சமயநெறி ஆகிய இரண்டையும் குறிப்பிடவில்லை. வேதநெறி', 'சைவத்துறை' ஆகிய சொற்களால், தமிழ் வேதத்தின் 'அடிப்படையிலான சைவ சமய நெறி ஒன்றைத்தான் குறிப்பிட்டார் என்பதற்கு அவருடைய கீழ்க்காணும் பாடல்களும் சான்றாகும்.

"நன்மை மறையின் துறை விளங்க"

"சைவ நெறி ஏழுலகம் பாலிக்கும் தன்மையினால்
தெய்வ நெறிச் சிவம் பெருக்கும் திருவாம் ஊர் திரு ஆமூர்"

"திருநீற்று நெறித்துறை நீடுவாழ
உலகெங்கும் நிரம்பிய சைவம் உயர்ந்த மன்ன"

"வேதப் பயனாஞ் சைவமும் போல்"

மேலும், சேக்கிழார், ஞானசம்பந்தரை, "நான் மறையின் தனித்துணையை" என்றும், அப்பரடிகளை ,"ஆதி நான்மறை நூல் வாய்மை" என்றும் வர்ணிக்கிறார். ஞானக்கன்றும், அரசும் சைவ நெறி பெற்ற இரண்டு புண்ணியக் கண்கள், அவர்களிருவரும் "நமச்சிவாய" என்ற அஞ்செழுத்தை அன்போடு பற்றிய உணர்வினால் அருமறை சொற் திருப்பதிகங்கள் அருளியவர்கள். இவைகளிலிருந்தும் அவர்களின் நான்மறை ஆரிய வேதமல்ல என்று தெளிவாகவில்லையா ? இந்த இடந்தில், மற்றொரு உண்மை நிலையையும் குறிப்பிடவேண்டும். தமிழகச் சைவ சமயத்தில் அஞ்செழுத்தாகிய 'நமச்சிவாய'வே மந்திரமாகும். தமிழினத்தினர் தான் நமச்சிவாயம், ஞானசம்பந்தன், திருஞானசம்பந்தன், சுந்தரமூர்த்தி, மாணிக்கவாசகம், சோமசுந்தரம், ஆலாலசுந்தரம், சச்சிதானந்தம், சிவானந்தம், பரமசிவம், தட்சணாமூர்த்தி, அண்ணாமலை, முருகன், கந்தசாமி, கந்தன், சண்முகம், ஆறுமுகம், கார்த்திகேயன், பழனிவேல், பழனிச்சாமி, வடிவேலன் கதிர்வேல், சக்திவேல், சக்திவடிவேல், சிங்காரவடிவேல், வேல்முருகன், சக்திமுருகன், கனகசபை, பொன்னம்பலம், சொக்கலிங்கம் முதலான பெயர்களை வைத்துக் கொள்கிறார்கள். இப்பெயர்களை ஆரிய (வடமொழி) வேத மதத்தினர் வைத்துக்கொள்வதில்லை. 'நமச்சிவாய'த்தை வெளிப்படுத்தும் வேதம் ஆரிய வேதமாக இருப்பின் 'நமச்சிவாயம்' எனும் பெயரில் பற்றில்லாமலிருக்குமா? இந்த இடத்தில், தமிழறிஞர்களின் ஆய்வுக்கு ஒன்றை குறிப்பிட விரும்புகிறேன். சைவ சமயாச்சாரியர்கள் நால்வருள் ஒருவரான ஞானசம்பந்தர் கவுண்டின்ய கோத்திரத்தைச் சேர்ந்தவர் என்று வர்ணிக்கப்படுகிறார். ஞானசம்பந்தர் தேவாரத்தின் எந்த இடத்திலும், அவர் கவுண்டின்ய கோத்திரத்தார் என்ற குறிப்பு உள்ளதாகத் தோன்றவில்லை. அவர் தேவாரத்தில் காணப்படுகிற சொல் 'கவுணியன்', 'கவுண்டின்யன்' அல்ல. ஞானசம்பந்தர், தம்மை கீழுள்ளவாறு கூறிக்கொள்கிறார்.

கவுணியன்

கவுணி

கவுணியன் குலபதி

கவுணி நடையார்

தமிழ்நாடு ஞானசம்பந்தன்

தமிழ் ஞானசம்பந்தன்,

தமிழ் விரகன்

அந்தணர்

அந்தண் காழியருமறை ஞானசம்பந்தன்

மறையோன் தூமொழி ஞானசம்பந்தன்

வேதியன் ஞானசம்பந்தன்

நான்மறை ஞானசம்பந்தன்

நான்மறை நாவினற்றமிழ் ஞானசம்பந்தன்

நான்மறை வல் ஞானசம்பந்தன்

நான்மறையான் ஞானசம்பந்தன்

வேதியன் ஞானசம்பந்தன்

தழங்தெரி மூன்றோம்பு தொழிற் றமிழ் ஞானசம்பந்தன்

பூசுரன் ஞானசம்பந்தன்

தம்மை 'பிராமணன்' என்று எந்த இடத்திலும் ஞானசம்பந்தர் சொல்லவில்லை. கவுணி, கவுணியன் ஆகிய சொற்கள் ஏதோ ஒரு பணியை, தொழிலைக் குறிப்பிடுவதாகத் தெரிகிறது. சங்க இலக்கியத்திலும் திருமுறைகளிலும் வரும், மறையோன், வேதியன் அந்தணன், பூசுரர் முதலான சொற்களால் ஞானசம்பந்தர் தம்மை குறிப்பிடுகிறார். சேக்கிழார், ஞானசம்பந்தரை 'திருஞான மாமுனிவர்' என்றும், ஞானசம்பந்தரைப்பற்றி,

'அப்பதியின் அந்தணர்தங் குடிமுதல்வர் ஆசில்மறை
கைப்படுத்த சீலத்துக் கவுணியர் கோத்திரம் விளங்க'

என்றும் கூறியுள்ளார். சேக்கிழாரும் 'கௌடிண்ய' என்று கூற வில்லை. அவர் பயன்படுத்தியுள்ள 'கோத்திரம்' எனும் சொல் ஆரிய வர்ணக் கோத்திரத்தைக் குறிப்பதாகவுமிருக்காது. ஞான சம்பந்தர் அந்தணர் குடியைச் சேர்ந்தவர் என்று சேக்கிழார்

தெளிவாகக் கூறியுள்ளது நம் கவனத்துக்குரியது. அக்காலத்து 'அந்தணர்' தமிழினத்தவர் என்று முன்பே விளக்கப்பட்டுள்ளது. புறநானூற்றுப் பாடல் 166ல், 'பார்ப்பான் கௌணியன் விண்ணந் தாயன்' என ஒருவன் குறிப்பிடப்பட்டிருப்பதும் கவனத்துக் குரியது.

சிவன் அருளியதாகக் கருதப்படுகிற அறத்திற்கு, நெறிக்கு, தமிழர், 'வேதம்' என்ற பெயரைக் கொடுத்துள்ளனர். இப்பெயர் வேறு எதற்கும் தமிழர்களால் கொடுக்கப்படவில்லை இதிலிருந்தே 'வேதம்' என்ற சொல்லுக்குத் தமிழர் கொண்டுள்ள முக்கியத்துவத் தையும், சிறப்பையும், புனிதத் தன்மையையும் உணரலாம். இறை வன் அருளினான் என்று கூறுவது, சமயப் பற்றுள்ளவர்களிடத்தே காணப்படும் ஆன்மீகப் பண்பு, மரபு. அருளாளர்களாலும் சான் றோர்களாலும் உணர்த்தப்பட்டவை இறையருளால், இறையால் உணர்த்தப்பட்டவை எனக் கொள்வதும் சமயவாழ்க்கையின் உணர்வாகும். 'செய்வன எல்லாஞ் சிவமாகக் காண்டலால்' என்கி றார் திருமூலர் (2977).
இவ்வாறன உணர்வுகளின் காரணமாகத்தான், நம் முன்னோர்கள் அன்று தங்கள் சமூகததில் வலியுறுத்தப்பட்டு வந்துள்ள அற நெறியை, நீதியை, தாங்கள் வழிபட்ட சிவனருளியதாகப் போற்றி யுள்ளனர்.

'சிவன்தான் பலபல சீவனுமாகும்' (திரும 1622)

'சிவன்தான் சீவனும் ஆகி'' (திரும 443)

என்ற சமய தத்துவத்னதக் கொண்டிருந்த நம் முனனோர்கள். அருளாளர்கள் வாய்மொழியாக அருளியது பற்றி மேலே குறிப்பிட் டுள்ளளவாறு கருத்தினைக் கொண்டிருத்தல் வியப்பில்லை. மொழி யில் முதலில் வருவது சொல், பிறகுதான் எழுத்து என்வதை யாவ ரும் அறிவர். அதனால்தான், தமிழ் வேதம் வாய்மொழியாக அரு ளப்பெற்றது, வாய்மொழியாகக் கேட்கப் பெற்றது என்று சங்கப் புலவர்களும், சமயச் சான்றோர்களும் கூறியுள்ளனர்.

திருமூலர் :

திருமந்திரம். 2885—'எழுதாத புத்தகத் தேட்டின் பொருளை'

,, 1426—'எழுதா மறையீறும்'

,, 97 —'மன்னிய வாய்மொழியாலும்'

,, 300—'அந்தணர் வாய்மொழி கேட்டும்'

அப்பர் :

'ஓதினார் வேதம் வாயால்'

'சொல்லருளி யறநால்வர்க் கறிய வைத்தார்'

'கல்லாலி னிழற் கலந்து தோன்றுங்
கவின் மறையோர் நால்வர்க்கு நெறிகளன்று
சொல்லாகச் சொல்லியவா'

சேக்கிழார் :

'எழுதாத மறையளித்த எழுத்தறியும் பெருமானை'

சென்னை சைவ சித்தாந்தப் பெருமன்றத்தின் 1985 ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 'சித்தாந்தம்' இதழில், அதன் ஆசிரியர் எழுதியுள்ளதை இந்த இடத்தில் குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும் என்ற கருத்தில் அக்கட்டுரையின் முதல் பத்தி கீழே கொடுக்கப்படுகிறது.

"பிரம்மாவே வேதங்களைச் செய்தாரென்று சொல்வதுமுண்டு. யக்ஞங்களைச் செய்வதே இவற்றின் நோக்கம். அவர் அக்னியிலிருந்து ருக்வேதம், வாயுவிலிருந்து யஜீர் வேதம், சூரியனிலிருந்து சாமவேதம் உண்டு பண்ணினாராம். வேதத்தின் நோக்கம் இரண்டு, ஒன்று இவ்வாறு யாகங்கள் செய்தல் ; இவை நான்கு புருஷார்த்தங்களையும் அடைவதற்காக ; சாயனர் முதலியோர் பிராமணங்களுக்குச் செய்த பாஷ்யங்களெல்லாம் யாகங்களை நோக்கமாய் உடையவை. மற்றொரு நோக்கம், பரஞானம் பெறுதல் என்று சொல்வர்கள். வேதம் செய்யப்பட்ட காலத்தில் முதல் நோக்கமே மேலோங்கியிருந்தது. பிறகு வேதக்காரர்கள் தமிழ் மக்களோடு தொடர்பு கொண்ட காலத்தில் ஞானம் என்ற பொருள் அவர்களுக்குத் தெரிய வந்தது. இதன் விளைவே பின்னர், எழுந்த உபநிடதங்கள்." ஆசிரியர், 'சித்தாந்தம்'.

சித்தாந்தம்' ஆசிரியர்,ஆரிய வேதம் பற்றி கூறியுள்ளவை, தமிழ் வேதம்பற்றிய விவரங்களுக்கு முற்றிலும் வேறுபட்டிருப்பதைக் கவனிக்கவேண்டும்.

நம் அருளாளர்கள் சிவனை 'வித்து' எனப் போற்றி கீழுள்ள வாறு பாடியுள்ளார்கள்.

திருமூலர் :

திருமந்திரம் 4—'அகலிடத்தார் மெய்யை அண்டத்து வித்தை'

,, 2840—'கருவன்றியே நின்று தான் கருவாகும்'

சம்பந்தர் :

'வித்தினை'

'வேத வித்தாய்'

அப்பர் :

'விரிக்கின்ற பொருட்கெல்லாம் வித்துமாகி'

'வித்தினை'

'வேத வித்தை'

'வித்தானை'

'மனத்துக்கோர் வித்துமானாய்'

'வித்தா மூனையாகும்'

'முளையினை'

'வித்தாய் மிழலை முளைத்தானை'

'முந்தித்தான் முளைத்தானை'

'உலகத்தினுயிர்க்கெலாம் கருவனாகி முளைத்தவன்'

'முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி'

சுந்தரர் :

'வித்தனே'

மாணிக்கவாசகர் :

'முத்தனை முதற் சோதியை முக்கண்
அப்பனை முதல் வித்தினைச் சித்தினைச் சிவலோகனை'

'பார் பதம் அண்டம் அனைத்துமாய் முளைத்து'

குமரகுருபரர் :

'வித்து நீ விளைவு நீ'

இவ் அருளாளர்கள் கூற்றிலிருந்து, வித்திலிருந்து முளைத்தது வேதம் எனக் கொள்ளலாம்.

'வேதத்தில்' என்றால் 'மாற்றுதல்' என்று பொருள். 'வேது' என்ற சொல்லும் 'மாற்றம்' என்ற பொருளுடையது.

திருமந்திரம் 2643—'ஆதிப் பிரான்தந்த வாளங்கைக் கொண்டபின்
வேதித்து என்னை விலக்கவல்லாரில்லை'

" 2220—'வேது அறியாவணம் நின்றனன் எம்மிறை'

" 15 -'ஆதியுமாய் அரனாய் உடலுள் நின்ற
வேதியுமாய் விரிந்தார்ந்திருந்தான்'

சம்பந்தர் :

'வேதியாகி விண்ணாகி மண்ணோடெறி காற்றுமாய்
ஆதியாகி நின்றான்'
'ஆதியை யாதியு மந்தமுமில்லாத
வேதியை'

அப்பர் :

'வேதியா வேதகீதா'

மாணிக்கவாசகர்

'வேதி போற்றி'

'வேதம்' எனும் சொல் 'வேது' 'வேதித்தல்' ஆகிய சொற்களிலிருந்தும் வந்திருக்கலாம். 'வேதம்' அருளிய சிவன், 'வேதா', 'வேதன்', 'வேதர்' என்றழைக்கப்பட்டிருக்கிறான்.

சம்பந்தர் :

'வேதர் வேதமெல்லா முறையால் விரித்
தோத நின்ற ஒருவனார்'
'..............இமையோர் தொழும்
வேதனை'
'............பூவணத்துறை
வேதனை'

அப்பர் :

'வேதனாய் வேதம் விரித்திட்டானே'

சுந்தரர் :

'..................வினை கெடுக்கும்

வேதனை'

வேதியாய் உள்ளதால் அல்லது தமிழ் வேதம் உரைத்ததால் அல்லது தமிழ் வேதத்தின் உட்பொருளாய் உள்ளதால், சிவன் 'வேதியன்' என்றழைக்கப்படுகிறான். அன்றைய தமிழ்ச் சமுதாய அந்தணரை, மறையோரை 'வேதியர்', 'வேதியன்' என்றும் திருமுறைகள் குறிப்பிடுவதை முன்னர் கண்டோம்.

திருமந்திரங்கள் 474, 1027 ஆகியவற்றில் 'வேதம்' எப்பொருளில் வந்துள்ளது என்பதையும் கவனிக்க வேண்டும்.

இவற்றையெல்லாம் தமிழ் அறிஞர்கள் ஆராய்ந்து, தமிழ் மொழியில் 'வேதம்' என்ற சிறப்பான சொல்லின் தோற்றம்பற்றித் தெளிவு படுத்தவேண்டும்.

தமிழ் வேதத்தின் கீழ் அல்லது தமிழ் வேதத்தைச் சார்ந்து வருபவையைக் குறிக்க உள்ள சொல்லோடு 'வைதிக' என்ற சொல்லும் சேர்த்துக் கொள்ளப்படலாயிற்று.

சம்பந்தர் :

'வைதிகத்தின் வழியொழுகா'

'மண்ணின் மறையோர் மருவு வைதிகமும்'

அப்பர் :

'வைதிகத் தேர்மிசை நின்றன'

சேக்கிழார் :

'மன்னிய சைவ வாய்மை வைதிக வழக்கமாகும்'

'.........அறுதொழிலின் வைதிகமா நெறியொழுகும்'

'மந்திரங்களான எலாம் அருளிச் செய்து

மற்றவற்றின் வைதிக நூற் சடங்கின் வந்த'

'மன்னவர் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொங்க'

தமிழ் வேதத்தைச் சார்ந்ததைக் குறிக்கத் தமிழர் பயன்படுத்திய தமிழ்ச் சொல்லான 'வைதிக'த்தை, ஆரிய வேதத்தோடு இணைத்து அச்சொல் ஆரியவேத மதத்தை மட்டும் குறிக்கிறது என்ற தவறான எண்ணத்தில் தமிழர்கள் இருந்து வருகிறார்கள்.

ஆரியரோடு சேர்ந்துள்ளதற்கு வடமொழியில் வழங்கும் பெயர் 'வேதா' (Veda). தமிழினத்தோடு சேர்ந்து தமிழில் இருந்ததின் பெயர் 'வேதம்'. இரு வேறு இன மக்களின் வேறுபட்ட மொழிகளில் ஒரே மாதிரியாக அதாவது ஒன்றே போல் காணப்படும் சொற்கள் ஒரே பொருளையுடையவை அல்லது ஒன்றையே குறிப்பவை என்றாகாது. ஒவ்வொரு மொழிச் சொல்லுக்கும் அந்தந்த மொழியில் உள்ள விவரங்களைக் கொண்டு விளக்கம் காண வேண்டும். தமிழ் இலக்கியத்தில் குறிப்பிடப்படுகிற 'வேதம்' வடமொழி வேதமே என்றால், 'வேதம்' பற்றி இருமொழிகளிலும் உள்ள விளக்கங்கள் ஒரே மாதிரி ஒத்தவையாக அல்லவா இருக்க வேண்டும். உண்மையில் இவ்வாறு இல்லை என்பது தக்கச் சான்றுகளுடன் முன்னர் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. முக்கியமாக, ஆரியரின் வடமொழி வேதத்தின் பரம்பொருள் 'பிரமம்' 'நாராயணா' ஆக இரண்டு, வடமொழி வேதத்தில் 'ருத்ரா', 'இந்திரன்', 'அக்னி' போன்ற வேறு தெய்வங்களுமுண்டு. 'பிரமா', 'நாராயணா' ஆகிய இரண்டும் தனித்தனியாக முக்கியத்துவம் வாய்ந்தவை. ஆனால், தமிழர் வேதத்தின் விழுப்பொருளான, முழுமுதற் கடவுளான சிவன், தமிழரின் வேதத்தை அடிப்படையாகக் கொண்டுள்ள தமிழரின் சைவ சமயத்தின் தனி நாயகன். அதனாலன்றோ, ஞானசம்பந்தர் 'வேதத்திலுள்ளது நீறு' என்கிறார். இவற்றின் காரணமாகவே தமிழரின் சமயம் 'சிவநெறி' என்றே அழைக்கப்படுகிறது. இச்சிவனுக்கு ஒப்பார் யாருமில்லை என்பது தமிழரின் சைவ சமயத்தின் சிறப்பான கொள்கை.

திருமூலர் :

திருமந்திரம் 2102—'சிறந்த சிவநெறி சிந்தை செய்யீரே'

,, 2103—'நல்ல அரனெறி நாடுமின் நீரே'

,, 2654—'செகமுகமாந் தெய்வமே சிவமாகும்'

,, 3010—'திகையனைத்துஞ் சிவனேயவனாகின்
மிகையனைத்துஞ் சொல்ல வேண்டா மனிதரே
புகையனைத்தும் புறம் அங்கியிற் கூடு
முகையனைத்தும் எங்கள் ஆதிப் பிரானே'

,, 2977 -'செய்வன எல்லாஞ் சிவமாகக்
காண்டலாற்
கைவள மின்றிக் கருக்கடந்தேனே'

,, 5—'சிவனோடு ஒக்கும் தெய்வம் தேடினும்
இல்லை
அவனோடு ஒப்பார் இங்குயாவரும்
இல்லை'

,, 97—'பின்னை உலகம் படைத்த பிரமனும்
உன்னும் அவனை உணரலுமாமே.

சம்பந்தர் :

'தாயவன் உலகுக்குத் தன்னொப் பிலாத்
தூயவன்'

அப்பர் :

'மற்றாருந் தன்னொம்பாரில்லா தானை'
'மற்றொருவ ரொப்பில்லா மைந்தா போற்றி'
'தன்னானைத் தன்னொப்பாரில்லா தானை'
'இராமனும் வழிபாடுசெய் யீசனை'
'பிரமனாகி'
'முப்போதும் பிரமன் தொழ நின்றவன்'
'வருணனாய்'
'தென்னவன் எனையாளுஞ் சிவனவன்'

மாணிக்கவாசகர் :

'தென்னன் பெருந்துறையின் மேயானை'
'தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டானை'

திருமூலர்,

ஒன்றிரண் டாடவோ ரொன்று முடனாட
ஒன்றினின் மூன்றாட ஓரேழும் ஒத்தாட
ஒன்றினில் ஆடவோர் ஒன்பதும் உடனாட
மன்றினில் ஆடினான் மாணிக்கக் கூத்தே.

எனும் திருமந்திரத்தில், சிவனின் நடனமே இவ்வுலக இயக்கத்துக்கு காரணமாக உள்ளது எனக் கூறியுள்ளார்.

மேலே கூறப்பட்டுள்ளவை, ஆரியரின் வடமொழி வேதத்தில் கூறப்படாதவை, ஆரிய வேதத்திற்குப் பொருந்தாதவை ஆக'

பெயர் ஒன்றாக இருந்தாலும், தமிழரின் தமிழ் வேதமும் ஆரியரின் வடமொழி வேதமும் ஒன்றுக்கொன்று தோற்றத்தில், கருத்தில், பொருளில் விளக்கத்தில் வேறுபட்டடல்லவா இருக்கின்றன.

கிருத்து சமயத்தினர் தங்கள் 'பைபிளை' (Bible) 'வேதம்' என்ற சொல்லாலும் குறிப்பிடுவதைக் காண்கிறோம். அவர்களிடத்தில் 'வேதநாயகம்' என்ற பெயருமுண்டு. ஒருவர், மிக முக்கியமாக, சிறப்பாக ஏதாவது ஒன்றைக் கருதினால் அவருக்கு 'அது வேதம்' என்று வர்ணிகதும் வழக்கு தமிழகத்தில் வெகுகாலமாக இருந்துவருவதையும் காண்கிறோம். அதனால், 'வேதம்' எனும் சொல் ஆரியரின் வடமொழி வேதம் ஒன்றைத்தான் குறிக்கிறது என்று எப்பொழுதும் எடுத்துக்கொள்வதற்கில்லை இச்சொல் வடமொழியில் மட்டும் இல்லை. இது தமிழ்மொழியிலும் சங்க காலத்திலிருந்து இருப்பதைக் கண்டோம்.

நம் அருளாளர்களே ஆரியரின் வடமொழி வேதத்தைக் குறிப்பிட்டு, வடமொழி வேதத்திற்கு பிரமன் முதல்வன் என்பதைக் கீழுள்ளவாறு கூறியுள்ளனர்.

திருமூலர் :

திருமந்திரம் 321—'நடுவு நின்றான் நல்ல கார்முகில் வண்ணன்
நடுவு நின்றான் நல்ல நான்மறை யோதி'

சம்பந்தர் :

'நன்றா நான்மறை யானொடு மாலுமாய்ச்
சென்றார் போலும் திசை யெலாம்'

அப்பர் :

'மாலொடும் மறையோதிய நான்முகன்
காலொடும் முடிகாண்பரி தாயினான்'
மறையினானொடு மாலவன் காண்கிலா'

சுந்தரர் :

'வெள்ளத்து மாலவனும் வேதமுதலானும்
அடியினையுந் திருமுடியுங் காணவரிதாய சங்கரனை'

தமிழர் வேதம் என்ற ஒன்று இல்லாதிருந்து அக்காலத்திலிருந்த ஆரிய வேதத்தை குறிப்பிட வேண்டியிருந்தால், அந்த வேதம் தங்களுடையதல்ல என்ற உண்மையின் காரணமாக, அந்த

வேதத்தை ஆரியர் வேதம் அல்லது வடமொழி வேதம் என்றாவது அல்லது அந்த வேதங்களின் பெயர்களான ரிக், யசுர், சாம, அதர்வன ஆகியவற்றையாவது நம் அருளாளர்கள் கூறியிருப்பர். இச்சொற்களை அவர்கள் இவ்வாறு பயன்படுத்தவில்லை. தமிழினத்தாருக்குத் தனி வேதம் இருந்து, அந்த வேதத்தோடு மட்டும் தங்களுக்கு நேரடி சம்பந்தமிருந்ததால், வேதம், நால்வேதம் மறை, நான் மறை, தமிழ் மறை என்றெல்லாம் நம் அருளாளர்கள் கூறிவிட்டு சென்றுள்ளனர். ஆரியர், வடசொல், வடமொழி ஆகிய சொற்களைச் அவர்கள் பயன்படுத்தியுமிருக்கின்றனர். ஆரிய வேதங்களைக் குறிப்பிட்டு வேதம், நான்மறை, வேதாந்தம், இருக்கு ஆகிய சொற்கள் தமிழ் நூல்களில் வரும்போது அச் சொற்கள் ஆரிய வேதத்தை, வேதாந்தத்தை, ரிக் வேதத்தை குறிக்கின்றன. என்று புரிந்து கொள்வதில் சிரமம் இருக்காது என் பதையும் இங்கே குறிப்பிட வேண்டும்.

மற்றொரு முக்கியமானதையும் இங்கு குறிப்பிடுவது மிக்க பொருத்தமாக இருக்கும். தமிழகத்தில் பல ஊர்கள் வடமொழிப் பெயர்களைக் கொண்டிருக்கின்றன, வடமொழிப் பெயர்களைக் கொண்டிருப்பதால் அவ்வூர்கள் தமிழகத்து ஊர்களாகாமல் வட மொழியாளர்களின் ஊர்களாகி விட்டனவா? (உ-ம்) முதுகுன்றம் விருத்தாசலம்மாயிற்று; மயிலாடுதுரை மாயூரமாயிற்று ; மறைக்காடு வேதாரண்யமாயிற்று. இவைகள் தமிழகத்து ஊர்கள் இல்லையா ? இதே போல், தமிழகத்துக் கோயில்களில் தமிழர்கள் வழிபட்ட தெய்வங்களின் பெயர்கள் தொடக்கத்தில் தமிழ்ப் பெயர்களாகவே இருந்தன. பின்னால், அத்தெய்வகளுக்கு வடமொழிப் பெயர்கள் கொடுக்கப்பட்டன. வடமொழிப் பெயர்களையுடையதால், அத் தெய்வங்கள் தமிழர்களின் தெய்வங்களல்ல என்றாயினவா ? இல்லையே. இத்தகைய நிலையில் வடமொழிப் பெயர் கொண்டிருப்பவை எல்லாம் வடமொழியாளரைச் சார்ந்தவை என்று ஒரே போக்கில்சொல்லி விட முடியுமா ?

ஆக, 'வேதம்' என்றால் அது ஆரியரின் வேதந்தான், வேறில்லை என்று பொருள் கொள்வது பொருத்தமற்றது என்ப தற்கு விளக்கங்கள் மேலும் தேவையா ?

பண்டையத் தமிழ்ச் சமுதாயத்தில் வாய்மொழியாக வெளிப்படுத் தடுப்பட்டு, வளர்க்கப்பட்ட தமிழ் வேதம். 'வேதம் என்ற பெயரி லேயே நூல் வடிவில் இல்லாமலிருக்கலாம். ஆனால், அந்த 'வேதம்' தெரிவித்துள்ளதாகக் கருதப்பட்டவை எல்லாம், தொல் காப்பியம், சங்க நூல்கள், திருக்குறள், திருமுறைகள் ஆகிய நூல் களில் ஆதியிலேயே எடுத்து விளக்கப்பட்டுள்ளன.

இவ் உண்மையையே

> தேவர் குறளும் திருநான்மறை முடிவும்
> மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
> திருவாசகமும் திருமூலர் சொல்லும்
> ஒரு வாசக மென்றுணர்' எனும்

ஔவையார் பாடல் உறுதிப்படுத்துகிறது.

இந்நூல்களில் கூறப்பட்டுள்ள அறநெறிகளுக்கும், நீதிகளுக்கும், ஆதியில் வாய்மொழியாக தமிழ்ச் சமுதாயத்தில் விளங்கி வந்த தமிழ் 'வேதம்' மூலாதாரம் என்றும் இந்தத் தமிழ் வேதத்தைத்தான் சங்க நூல்களும் திருமுறைகளும் குறிபபிடுகின்றன என்றும் கொண்டால், அது தமிழ்மொழி இலக்கண இலக்கியத்திற்கு, தமிழின சமய சமூக வாழ்க்கை வரலாற்றிற்குப் புறம்பானது ஆகாது என்பதை இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ள பல்வேறு விளக்கங்கள் தெளிவாக்கக் கூடும்.

இங்ஙனமிருந்தும், சங்க நூல்களும் திருமுறைகளும் குறிப்பிடுகின்ற 'வேதம்', 'மறை' ஆரியரின் வடமொழி வேதம்தான், தமிழினத்தார்க்கு வேறு தனி வேதம் இருந்ததில்லை என்ற கருத்தைத் தமிழ்ச் சைவ சமயவாதிகள் விடாப்பிடியாக தொடர்ந்து வைத்துக்கொண்டால் அவர்கள் சேக்கிழார் பெருமானுக்கு இழிவு ஏற்படுத்தும் குற்றத்திற்குள்ளாகிறார்கள் என்பதைத் தயக்கத்துடனும் மனவேதனையுடனும் சுட்டிக் காட்டாமலிருக்க முடியவில்லை. சிவனடியார்கள் அருள்கூர்ந்து மன்னிப்பாராக. "எழுதாத மறையளித்த எழுத்தறியும் பெருமானை" என்றல்லவா சேக்கிழார் பாடியுள்ளார். (இந்நூல் பக்கம் 122, 180ல்-திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்). தமிழினம் பின்பற்றிய வேதம் கி.பி 12ஆம் நூற்றாண்டுக்காலம் வரைக்கூட எழுதப்படாமல் இருந்ததுஎன்பதற்குச் சேக்கிழார் வாக்கே சான்றாக உள்ளது. ஆரியரின் வடமொழி வேதம், சேக்கிழார் காலத்திற்கு முன்பிருந்தே எழுதப்பட்டு வழக்கிலிருந்துவந்ததாகும். இந்நிலையில் சேக்கிழார் குறிப்பிடும் "எழுதாத மறை", எழுதப்பட்டிருந்த வடமொழி வேதத்தைக் குறிப்பிடுவதாகப் பொருள் கொள்வது சரிதானா, ஒற்றுக்கொள்ளக்கூடியதா ? திருமுறைகள் குறிப்பிடும் வேதம் ஆரியரின் வடமொழி வேதமாக இருந்திருந்தால் "எழுதாத மறை" என்று சேக்கிழார் கூறியிருப்பாரா ? "எழுதாத மறை" என்று சேக்கிழார் வாக்கே இருக்கும்போது எழுதப்பட்டிருந்த வடமொழி வேதம்தான் தமிழரின் வேதம் என்ற முடிவுடன் தமிழ்ச்சைவ சமயவாதிகள், சேக்கிழாரையே புறக்கணிக்கும் நிலை, ஒரு பெரிய தவறான நிலையாகும் என உணர்வது கடினமா ? அருளாளர்களின் சொற்களை, கூர்ந்து கவனித்து முறையான பொருள் கொள்வது நம் கடமை. ஆதியில் 'சைவ

சித்தாந்தம்' என்ற தலைப்பில் நூல் ஏதுமில்லை. அதைப் போலத் தான், தமிழினத்தாரின் வேதம், அதேப் பெயரில் தமிழ் நூல் வடிவில் இல்லாமல், வாய்மொழியாக வழக்கில் இருந்து வந்திருக்க வேண்டும் இருப்பினும் தமிழ் வேதத்தின் கொள்கைகளும் தத்துவங்களும் அக்காலத்துத் தமிழ் நூல்களில் இடம் பெற்றிருப்தைக் காண்கிறோம். தமிழரின் வேதமும் ஆகமமும் (சிவவேதம், சிவாகமம்) எழுதப்படாமலிருப்பினும், அவைகள் வழக்கில் பரவி யிருந்து, தமிழரால் கடைப்பிடிக்கப்பட்டிருந்ததால்தான், அவைகளை வேத நூல், நான்மறை நூல், ஆகம நூல், இறைவன் நூல் என நம் முன்னோர்கள் அழைத்திருக்கின்றனர். ஒருவிதக் கலப்பினால் ஏற்பட்ட குழப்பத்தின் விளைவான மயக்கத்திலிருந்தும் கலக்கத்திலிருந்தும் விடுபட்டு, நம் பண்டைய இலக்கியம் கூறும் பொருள்களின் உண்மை நிலைபற்றி தெளிவு பெறுதல் இன்றியமைததாகும். மரபுவழி வரும் தவறான எண்ணங்களை எந்தக் காலத்திலும், நூல்களின் அகச்சான்றுகள் அடிப்படையில் ஒதுக்கலாம்.

சங்க இலக்கியத்திலும் திருமுறைகளிலும் கூறப்படுகிற வேதம், 'தமிழ் வேதம்', 'தமிழினத்தாரின் வேதம்' என்ற பேருண்மையை உணர்ந்த நிலையில் கீழுள்ள பாடல்களைப் படித்தால்தான், இப் பாடல்களின் அரிய இனிமை நன்கு விளங்கும்.

தனிப்பாடல் :

'வேதம் பசு அதன் பால் மெய்யாகமம் நால்வர்
ஓதும் தமிழ் அதன் உள்ளுரு நெய் — போதமிகு
நெய்யின் உறுசுவையே நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்த தமிழ் நூலின் திறம்'

குமரகுருபர் :

'ஒரும் வேதாந்த மென்று உச்சியிற் பழுத்த
ஆரா இன்ப அருங்கனி பிழிந்து
சாரம் கொண்ட சைவ சித்தாந்தத்
தேனமுது அருந்தினர் சிலரே'

(பண்டார மும்மணிக்கோவை)

சிவனால் அருளப்பெற்றதாகக் கருதப்பட்டதற்கு, தமிழர்கள் ஆதியிலேயே வேதம்' என்ற பெயரைக் கொடுத்துள்ளனர். தமிழர் சிவனை வாழ்த்தியது 'இருக்கு', 'மந்திரம்' எனப் பெயர் பெற்றது ,இருக்கு' என்ற சொல் ரிக் வேதத்தைக் குறிப்பதாகத் தவறான

எண்ணமுள்ளது. சிவனை வாழ்த்திச் சொல்லப்படுகிற மந்திரத்திற்குத்தான் 'இருக்கு' என்ற பெயரைத் தமிழர் கொடுத்திருக்கின்றனர்.

**தொல்காப்பியர்**

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழிதானே மந்திரம் என்ப"

என்று கூறியுள்ளார். 'மந்திரம்' என்றால் அது ஆரிய வேதமந்திரம் என்று தொல்காப்பியர் கூறவில்லையே.

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டிவிடும்.

எனும் குறள் இங்கு நம் கவனத்துக்குரியது.

**பதிற்றுப்பத்து :**

'கடுஞ் சினம் கடா அய், முழங்கும் மந்திரத்து
அருந்திறல் மரபின் கடவுட் பேணியர்' பா.30

'மந்திர மரபின் தெய்வம் பேணி' 9ஆம் பத்து பதிகம்

அடுத்து, 'மந்திரம்' பற்றி நம் சமயச் சான்றோர்கள் கூறியுள்ளதைக் காண்போம்.

திருமூலர், கீழ்க்காணும் திருமந்திரங்களில் 'மந்திரம்' பற்றி விளக்கம் கொடுத்துள்ளார்

1604—மந்திர மாவதும் மாமருந் தாவதுந்
தந்திர மாவதுந் தானங்களாவதுஞ்
சுந்தர மாவதுந் தூய்நெறியாவதும்
எந்தை பிரான்தன் இணையடிதானே.

2045—மந்திர தந்திர மாயோக ஞானமும்
பந்தமும் விடுந் தரிசித்துப் பார்ப்பவர்
சிந்தனை செய்யாத் தெளிவியா தூண்பொருட்
டந்தக ராவோர் அசற்குரு வாமே.

2879—ஆகும் அனாதி கலையாகம வேதம்
ஆகுமத் தந்திர மந்நூல் வழிநிற்றல்
ஆகுமனாதி யுடலல்லா மந்திரம
ஆகுஞ் சிவபோ தகம் உபதேசமே.

86 – பிறப்பிலி நாதனைப் பேர்நந்தி தன்னை
சிறப்பொடு வானவர் சென்று கைகூப்பி
மறப்பிலர் நெஞ்சினுள் மந்திர மாலை
உறைப் பொடுங் கூடி நின்றோதலு மாமே.

85—நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரந்
தான்பற்றப் பற்றத் தலைப்படுந்தானே.

2073—ஞாயிறு திங்கள் நவின்றெழு காலத்தில்
ஆயுறு மந்திர மாரும் அறிகிலர்
சேயுறு கண்ணி திருவெழுத் தஞ்சையும்
வாயுறு வோதி வழுத்தலு மாமே.

533—'மந்திரம் ஒரெழுத் துரைத்த மாதவர்'

934 – அஞ்செழுத்தாலே அமர்ந்தனன் நந்தியும்
அஞ்செழுத்தாலே அமர்ந்த பஞ்சாக்கரம்
அஞ்செழுத்தாகிய வக்கர சக்கரம்
அஞ்செழுத்துள்ளே அமர்ந்திருந்தானே.

966—அஞ்செழுத் தாலைந்து பூதம் படைத்தனன்
அஞ்செழுத்தாற் பலயோனி படைத்தனன்
அஞ்செழுத்தாலிவ் வகலிடந் தாங்கினான்
அஞ்செழுத்தாலே அமர்ந்து நின்றானே.

969—ஐந்தின் பெருமையை அகலிட மாவதும்
ஐந்தின் பெருமையே ஆலய மாவதும்
ஐந்தின் பெருமையே யறவோன் வழக்கமும்
ஐந்தின் வகைசெயப் பாலனு மாமே

919—ஆலய மாக அமர்ந்தபஞ் சாக்கரம்
ஆலய மாக அமர்ந்தவித் தூலம்போய்
ஆலய மாக வறிகின்ற சூக்குமம்
ஆலய மாக அமர்ந்திருந்தானே.

359 – 'செவி மந்திரஞ் சொல்லுஞ் செய்தவத்தேவர்
அவி மந்திரத்தின் அடுக்கலைக் கோலி'

959—சேவிக்கு மந்திரஞ் செல்லுந் திசைபெற
ஆவிக்குள் மந்திரம் ஆதாரமாவன
பூவுக்குள் மந்திரம் போக்கற நோக்கிடில்
ஆவிக்குள் மந்திரம் அங்குச மாமே.

902— நடமிரண் டொன்றே நளினம தாகும்
நடமிரண் டொன்றே நமன்செய்யுங் கூத்து
நடமிரண் டொன்றே நகைசெயா மந்திரம்
நடஞ்சிவ லிங்கம் நலஞ் செம்பு பொன்னே.

948—பரந்தது மந்திரம் பல்லுயிர்க் கெல்லாம்
வரந்திரு மந்திரம் வாய்த்திட வாங்கித்
துரந்திடுஞ் மந்திரஞ் சூழ்பகை போக
உரந்தரு மந்திரம் ஓமென் றெழுப்பே.

'திருவம்பலச் சக்கரம்' என்ற தலைப்பில் திருமூலர் மந்திரயோகப் பயிற்சியை விளக்கியுள்ளார்.

ஞானசம்பந்தர் :

மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தை யுணின்றவர் தம்மை யாள்வன
செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுள் மந்திர மஞ்செழுத்துமே.

'வேதத்தின் மந்திரத்தால் வெண் மணலே சிவமாகப்
போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்கு வேளுரே'

'ஆகமத்தொடு மந்திரங்க ளமைந்த சங்கத பங்கமாப்
பாகநத் தொடிரைத் துரைத்த சனங்கள்
மந்திர வேதங்களோது நாவர்'

'ஓது நாம நமச்சிவாயவே'

'மந்திரமாவது நீறு'

'தந்திரமாவது நீறு'

'மந்திரத்தான் தந்திரத்தான்'

அப்பர் :

'மறைகலந்த மந்திரமு நீருங்கொண்டு வழிபட்டார்

'மந்திர நமச்சிவாய வாகநீறணியப் பெற்றால்'

'பஞ்ச மந்திர மோதும் பரமனார்'

'அஞ்செழுத்தாகிய மந்திரம்'

'பதத்தெழு மந்திர மஞ்செழுத்தோதி'

'மந்திர மானார் போலும்'

'மந்திரமு மறைப் பொருளு மானான் தன்னை'

'மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித்
தீரா நோய் தீர்த் தருளவல்லான் தன்னை'

'ஏது மொன்று மறிவில ராயினும்
ஓதி யஞ்செழுத்தும் உணவார்கட்கு'

'அருந்தவந்தரு மஞ்செழுத் தோதினால்'

சுந்தரர் :

'நற்றவாவுனை நான் மறக்கினுஞ்
சொல்லுநா நமச்சிவாயவே'

சேக்கிழார் :

"'வருதிறத்தின் மறை நான்குந் தந்தோம்' என்று
மந்திரங்கள் மொழிந்தவர்க்கு மதுர வாக்கால்"

'மந்திரங்களான எலாம் அருளிச் செய்து'

"முந்தைமுதன் மந்திரங்கள் எல்லாம் தோன்றும்
முதலாகும் முதல்வனார் எழுத்தஞ்சு என்பார்
'அந்தியினுள் மந்திரம் அஞ்செழுத்துமே' என்று
அஞ்செழுத்தின் திருப்பதிகம் அருளிச் செய்தார்"

பண்டையத் தமிழ்ச் சமய இலக்கியத்தில் வருகிற 'மந்திரம் எனும் சொல், வடமொழி வேத மந்திரங்களைங் குறிப்பதாக நாம் கொண்டுள்ள கருத்து தவறானது என்று மேலே எடுத்துக் காட்டியுள்ளவை புலப்படுத்துவதை உணரலாம். இங்கு குறிப்பிடப் பட்டுள்ள 'மந்திரம்' சிவனையே பொருளாக உள்ளது ; அந்த 'மந்திரம்' அஞ்செழுத்தாகிய 'நமச்சிவாய' தான். இத்தகைய விளக்கம் வடமொழி வேதமந்திரங்களுக்குக் கிடையாது.

'இருக்கு' எனும் சொல், மேலே விளக்கப்பட்டுள்ள 'மந்திரம்' எனும் சொல்லின் பொருளில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. அதாவது 'இருக்கு' எனும்'சொல் 'மந்திர'த்தைக் குறிக்கிறது. இதற்கு ஆதாரமாக உள்ளவை கீழே கொடுக்கப்படுகின்றன.

திருமந்திரம் :

53—இருக்குரு வாம் எழில் வேதத்தினுள்ளே
உருக்குணர் வாயுணர் வேதத்துள் ஓங்கி
வெருக்குரு வாகிய வேதியர் சொல்லுங்
கருக்குரு வாய் நின்ற கண்ணனுமாமே'

93—'இருக்கில் இருக்கும் எண்ணிலி கோடி
அருக்கின்ற மூலத்துள் அங்கே இருக்கும்'

சம்பந்தர் :

'நன்றுநகு நாண்மலரா னல்லிருக்கு மந்திரங்கொண்
டொன்றிவழிபாடு செயலுற்றவன்'

அப்பர் :

'இருக்கு வாய்மொழி யாற்றனை யேத்துவார்'

'இருக்கு நான்மறை யீசனையே தொழும்'

'முந்திய தேவர்கூடி முறைமுறை யிருக்குச் சொல்லி'

'எண்ணுடை யிருக்கிமாகி யிருக்கினுட் பொருளுமாகி'

'இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்து
மிளங்கோயில் மணிக்கோயி லாலக்கோயில்'

சுந்தரர் :

'இருக்குவா யந்தணர்க ளெழு பிறப்புளெங்கும்
வேள்வியிருந் திருநிதியம் வழங்குநக ரெங்கும்'

மாணிக்கவாசகர் :

'இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்'

சேக்கிழார் :

'எண்ணிலரு முனிவர்குழாம் இருக்குமொழி எடுத்தேத்த'

இவைகளில் வருகிற 'இருக்கு' ரிக் வேதத்தைக் குறிக்கிறது என்று எடுத்துக்கொள்வதற்கு விவரம் ஒன்றுமில்லை. ஆனால், 'இருக்கு' தமிழர் வேதத்தோடும் அஞ்செழுத்தோடும் சிவனோடும் தொடர்பு படுத்தப்பட்ட தமிழ்ச் சொல் என்று தெளிவாகத் தோன்றுகிறது,

நெடுங்காலமாகத் தமிழர்கள் தவறாகப் பொருள் கொண்டுள்ள மற்றொரு சமயச் சொற்றொடர் 'சாம வேதம்'. சைவ சமயக் குரவர்கள் கீழுள்ளவாறு பாடியுள்ளனர்

சம்பந்தர் :

'சாமவேத மோதினீர்'

'சாமவேத மொர்கீதம் மோதிய'

'சாமம் பாடுவார்'

'சாம வேதன்'

'சாம வேதா'

அப்பர் :

'யாடினார் சாமவேதம்'

'சாமவேதம் கூத்தொடும் பாடவைத்தார்'

'சாமவேத கந்தருவம் விரும்புமே'

'சந்தோக சாம மோதும்'

'சாமமோதும் வாயானை'

'சாம வேதர்'

'சாம வேதி'

'சாமனை'

சுந்தரர் :

'சாம வேதம் பெரிதுகப்பானை'

'சாம வேத மோதி'

'சாம வேதனை'

மேலே உள்ள மேற்கோள்களைப் பார்க்கும் போது, 'சாம வேதம்' எனும் சொற்றொடர் ஆரிய வடமொழி சாம வேதத்தைக் குறிப்பதாக எடுத்துக் கொள்வதற்கு இடமேயில்லை. சிவனைச் 'சாம வேதன்', 'சாம வேதர்' 'சாம வேதா' 'சாம வேதி', 'சாமன்' என்றெல்லாம் குறிப்பிடுகிறார்ளேயன்றி, இதர வடமொழி வேதங்

களின்பெயர்களோடு சிவனைச் சேர்த்து எந்தஇடத்திலும் குறிப்பிட வில்லை. வடமொழி சாம வேதத்தை சிவனருளியதாக வடமொழி யாளர்கள் கூறவில்லை. நான்கு வடமொழி வேதங்களில் எதையும் சிவனருளியதாக அவர்கள் கூறவில்லை.

'சாமம்' எனும் சொல்லிற்கு உபாயம், தந்திரம் நியமம் கிரமம், கிரியை, ஒழுங்கு, முறைமை, மூறை, நெறி, நீதி என்றெல் லாம் பொருள் கொள்ளலாம். இப்பொருளில் 'சாமம்' சொல்பயன் படுத்தப்பட்டுள்ளது என்பதை சமயக்குரவர்களின் பாடல்களே தெரிவிக்கின்றன.

சம்பந்தர் :

'வேதர் வேதமெல்லா முறையால் விரித்தோத நின்ற
வொருவனார்'
'கீதமொடு நீதி பலவோதி'
'நீதியால் வேத கீதங்கள் பாட'
'வேதமும் வேத நெறிகளுமாகி'

அப்பர்

'முறைமுறை நெறிகள் வைத்தார்'
'நியம நெறிகளை ஓதியானை'
'நெறியதனை விரித்துரைத்த நேர்மை தோன்றும்'

சுந்தரர் :

'முத்தியு ஞானமும் வானவரறியா முறை முறை பலபல
நெறிகளுங் காட்டி'

சிவனருளியதாகக் கருதப்படுகிற தமிழரின் தமிழ் வேதத்தில் ஒரு சாமம், நியதி, நீதி, நியமம், நெறி, அறம், ஒழுங்கு, முறைமை இருப்பதால், நம் அருளாளர்கள் சிவனை, சாமன், நீதி, நீதியான்' நெறியான், நெறி, நெறியினான், அறன், அறவன், அறவோன், அறத்தான், அறவா, என்றும் அழைத்திருக்கின்றனர். இவை யெல்லாவற்றையும் நுணுக்கமாக ஆய்வு செய்யும் போது, தமிழரின் தமிழ் வேதத்தைதான் 'சாமவேதம்' எனக்குறிப்பிட்டிருக்கிறார்கள் என்பதும், அச்சொற்றொடர் வடமொழி 'சாம வேத'த்தைக் குறிக்க வில்லை என்யதும் நன்கு விளங்குகிறது.

சிவனுக்கு 'மணிகண்டன்' என்ற பெயரும் உண்டு.

சம்பந்தர் :

'மணிகண்டன் மருவுமிடம்'

அப்பர் :

'பொய்கை மருகல்வாய்ச் சோதி மணிகண்டனை'

'இருளுமா மணிகண்டாநின் னிணையடி இரண்டுங் காண்பான்'

சிவனை 'ஐயனார்' என்றும் அழைத்திருக்கின்றனர்.

அப்பர் :

'திரிபுரங்கள் வேவச் செய்து
ஐயனார் போகின்றார் வந்துகாணீர்'

'மதியஞ் சூடும் ஐயனார்க் காளாகி'

பின்னால், 'ஐயனார்' சிறு தெய்வத்தைக் குறிக்கும் சொல்லாகி விட்டது

'சாத்தனை மகனா வைத்தார்' என்று அப்பர் சொல்வதில், 'சாத்தன்' (ஐயன், தண்டிக்கிறவன்) குமரனைக் குறிக்கிறது, சாஸ்தானை அல்ல.

சிவன் வேதன், கீதன், கீதத்தான் கூத்தன், ஆடவன்.

சம்பந்தர் :

'நால்வ ரொடானிழல்லற உரைத்ததும்'

'வேதமொடேழிசை பாடுவர்'

'பண்ணார் மறைபாடி யாடும் பரஞ்சோதி'

'ஆடலான் பாடலான் அரவங்கள் பூண்டான்'

அப்பர் :

'ஆலமர நீழலறஞ் சொன்னாய் போற்றி'

'........... பூதங்குழுமி நின்றார்க்கவே
ஆடினாரழகாகிய நான்மறை
பாடினாரவர் பாலைத்துறையரே'

சுந்தரர் :

'பன்னு நான்மறை பாடவல்லானை'

சொல்லினான், பாடலான், ஆடலான் ஆனதாலே, சிவன்

'முத்தமிழ்' (அப்பர்) 'முத்தமிழ் ஓசை' (திருமூலர்) என்று வர்ணிக்கப்படுகிறான். 'வீணை', 'யாழ்' ஆகிய இரு சொற்களும் ஒரே இசைக்கருவியைக்குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

சம்பந்தர்—'ஆலவாயரன் கையது வீணையே'

அப்பர்—'தங்கையில் வீணை வைத்தார்'
'தங்கையின் யாழும் வைத்தார்'

திருமுறைகளில் 'ஆறு சமயங்கள்' என பல இடங்களில் வருகிறது.

நக்கீரர் :

'அறுவகைச் சமயமும் நெறிமையில் வகுத்தனை'
(திரு எழு கூற்றிருக்கை)

திருமந்திரம் :

1550 – 'இமையங்களாய் நின்ற தேவர்கள் ஆறு
சமயங்கள் பெற்றனர்'

1558—'ஒன்றது பேரூர் வழியா றதற்குள
என்றது போல இருமுச் சமயமும்'

1535—அண்ணலை நாடிய ஆறு சமயமும்
விண்ணவராக மிகவும் விரும்பியே
முண்ணின் றழியு முயன்றில் ராதலான்
மண்ணின் றொழியும் வகையறியார்களே

1534— சிவமல்ல தில்லை யறையே சிவமாந்
தவமல்ல தில்லை தலைப்படுவார்க்கிங்கு
அவமல்ல தில்லை அறு சமயங்கள்
தவம் வல்ல நந்தி தான் சார்ந்துய்யு நீரே

1557—இமையவர் தம்மையும் எம்மையும் முன்னம்
அமைய வகுத்தவன் ஆதி புராணன்
சமையங்க ளாறுந்தன் தாளிணை நாட
அமையங் குழல் நின்ற ஆதிப் பிரானே.

1561—'ஆமா றுரைக்கும் அறுசமய யாதிக்குப்
போமாறு தானில்லை'

2782—'ஒன்பதும் ஆட ஒரு பதினாறாட
அன்புறு மார்க்கங்கள் ஆறும் உடனாட'

சம்பந்தர் :

'ஆறு சமயங்களும் விரும்பியடிபேணி யரனாகம மிகக்
கூறு மனம் வேறிரதி வந்தடியர் கம்பம் வருகோகரணமே'

'வேதமொடு வேள்வி பல வாயின மிகுத்து விதியாறு சமயம்
ஓதியுமுணர்ந்துமுள தேவர் தொழ நின்றருள் செயொரு
வனிடமாம்'

'முன்னமிரு மூன்று சமயங்களவை யாகிப்
பின்னை யருள் செய்த பிறையாளனுறை கோயில்'

'ஒத்தாறு சமயங்கட் கொரு தலைவன்'

அப்பர் :

'அறுவகைச் சமயம் வைத்தார்'

'சமயமவை யாறினுக்குந் தலைவன்றான் காண்'

'சமையமே லாறுமாகித் தானொரு சயம்புவாகி'

'வெவ்வேறா யிருமூன்று சமயமாகி'

'மிக்க சமயங்களாறி னுருவாகி நின்ற தழலோன்'

'ஆறொன்றிய சமயங்களி னவ்வவர்க்கப் பொருள்கள்
வேறொன்றி லாதன'

சுந்தரர் :

'அறிவினால் மிக்க அறுவகைச் சமய
மவ்வவர்க் கங்கே யாரருள் புரிந்து'

மாணிக்கவாசகர் :

'அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்
வீடு பேறாய் நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையுங் கிழவோன்'

சேக்கிழார் :

'அறுசமயத் தலைவராய் நின்றவருக் கன்பராய்'

'அறுவகை விளங்குஞ் சைவத் தளவிலா விரதஞ் சாரும்'

'ஆறுவகைச் சமயத்து அருந்தவரும் மறைமுனிவர்களும்'

பின்னர் வந்த சமய நூல்களிலும் 'ஆறு சமயங்கள்' குறிப்பு வருகிறது.

**சிவஞான சித்தியார் :**

'அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய்'

**தாயுமானவர் :**

'ஆறு சமயங்கள் தோறும் வேறுவேறு ஆகிவிளையும்
உனை யாவர் அறிவார்'

மேலே குறிப்பிடப்படும் ஆறு சமயங்கள், 'ஷண்மதம்' 'என்ற வடமொழிச் சொல்லால் குறிப்பிடப்படுகிற சௌரம் (சூரிய வழி பாடு), காணாபத்தியம் (கணபதி வழிபாடு), வைணவம் (விஷ்ணு வழிபாடு), சைவம் (சிவன் வழிபாடு), சாக்தம் (சக்தி வழிபாடு) கௌமாரம் (முருகன் வழிபாடு) ஆகிய ஆறும் என விளக்கப்படும் மரபு வெகுகாலமாக இருந்து வருகிறது. இவ்வாறு ஆறு சமயங்கள் விளக்கப்படுவது சரிதான், பொருத்தமானதுதான் என்று ஏற்றுக் கொள்வதற்கு வேண்டிய தெளிவு இருப்பதாகத் தோன்றவில்லை. இவ்விளக்கத்தில், சைவ சமயமும, ஆறு சமயங்களில் ஒன்றாகக் குறிப்பிடப்படுகிறது. இவ்வாறு, ஆறு சமயங்களில் சைவத்தையும் சேர்ப்பது சரிதானா என்பது பற்றிக் கீழ்க்காணும் திருமந்திரங்களி னால் நியாயமான ஐயம் ஏற்படுகிறது.

1533—ஆறு சமயமுங் கண்டவர் கண்டிலர்
ஆறு சமயப் பொருளும் அவனலன்
தேறுமின் தேறித் தெளிமின் தெளிந்தபின்
மாறுதல் இன்றி மனை புகலாமே.

1530—ஆயத்துள் நின்ற அறுசமயங்களுங்
காயத்துள் நின்ற கடவுளைக் காண்கிலா
மாயக் குழியில் விழுவர் மனை மக்கள்
பாசத்தில் உற்றுப் பதைக்கின்ற வாறே.

1537—நூறு சமயம் உளவா நுவலுங்கால்
ஆறு சமயமவ் வாறுட் படுவன
கூறு சமயங்கள் கொண்ட நெறிநில்லா
ஈறு பரநெறி யில்லா நெறியன்றே.

திருமூலர், ஆறு சமயங்களும் சிவனைக் காணவில்லை, அவை களின் பொருளாக சிவன் இல்லை என்று கூறி, ஆறு சமயங்கள் பற்றி வேறு சில கருத்துக்களையும் தெரிவித்துள்ளார்,

மாணிக்கவாசகர்,

'அணிமுடி ஆதி அமரர் கோமான்
ஆனந்தக் கூத்தன் அறுசமயம்
பணி வகை செய்து படவதேறிப்
பாரொடு விண்ணும் பரவியேத்தப்
பிணிகெட நல்கும்'

எனப்பாடி, சிவன், ஆறு சமயங்களும் தன்னையே வணங்கும்படிச் செய்கிறான் என்று கூறுகிறார்.

ஆக திருமூலர், மாணிக்கவாசகர் கூறியிருப்பதைப் பார்க்கும் போது, சிவ வழிபாட்டைக் கொண்டுள்ள சைவ சமயமும் சேர்ந்துள்ள ஆறு சமயங்கள் என விளக்கம் கொடுத்து வருவது பொருத்தமாகத் தோன்றவில்லை. மேலும், சைவ சமயத்தில் சத்தியும் (சக்தி) முருகனும் சிவனின் கூறுகளாகவே கருதப்படுகின்றன. அதனால் அவ்விரண்டிற்கும் தனித்தனிக் கோட்பாடும் கிடையாது. ஒவ்வொன்றையும் ஒரு தனிச் சமயமாகவும் தமிழ்ச் சைவ சமயத்தினர் பிரித்து வைக்கவில்லை. இருந்தும், இவ்விரண்டும்கூட 'ஷண்மதம்' என்ற பெயரின் கீழ் குறிப்பிடப்படுகின்ற ஆறு சமயங்களில் சேர்க்கப்பட்டுள்ளன. இந்நிலையில், பண்டையத் தமிழ்ச் சமய நூல்களில் குறிப்பிடப்படுகிற ஆறு சமயங்களை 'ஷண்மதம்' அடிப்படையில் விளக்கம் கொடுப்பது பொருத்தமற்றது என்பது உறுதிப்படுகிறது.

"'ஷண்மதஸ்தாபனம்' ஆதிசங்கரர் தோற்றுவித்திருக்கும் சாஸ்திரப் பொக்கிஷங்களில் ஒன்றாகும்'' என்பது ஆரிய வேதமதத்தினரின் விளக்கம். ஆதி சங்கரர் காலம் கி.பி. 8, 9 ஆம் நூற்றாண்டுகளில் அடங்கியது என முன்னர் குறிப்பிடப்பட்டுள்ளது. இதற்கு சில நூற்றாண்டுகளுக்கு முன் உள்ள காலத்தில் குறிப்பிடப்பட்ட ஆறு சமயங்கள், பிற்காலத்தில், 'ஷண்மதங்கள்' என்பதின் கீழ் பிரிக்கப்பட்டுள்ள காணாபத்யம், வைஷ்ணவம், சைவம், சாக்தம், கௌமாரம், சௌரம் ஆகிய ஆறு சமயங்கள்தான் என்பது பொருந்தாக் கூற்றாகும்.

மணிமேகலையில்,

'பாங்குறும் உலோகாயதமே, பௌத்தம்
சாங்கியம், நையாயிகம், வைசேடிகம்
மீமாஞ்சகம்,ஆம் சமய ஆசிரியர்' எனவும்,

வேதவாதி, ஆசீவகவாதி, நிகண்டவாதி, சாங்கியவாதி, வைசேடிக

வாதி, பூதவாதி ஆகிய ஆறு சமய வாதிகளிடமிருந்து, அவ்வவர் சமயத்து அறிபொருளை மணிமேகலை கேட்டனள் எனவும் கூறப்பட்டுள்ளன.

ஆரிய வேதத்தைப் பிரமாணமாக முழு உடன்படுதலைக் கொண்டுள்ள வேதாந்தம், பீமாம்சம் (பீமாஞ்சம்) ஆகிய இரண்டும், ஆரிய வேதத்தைப் பிரமாணமாக வெறும் பெயரளவிலே மட்டும் உடன்படுகின்ற சாங்கியம், தர்க்கம் ஆகிய இரண்டும், ஆரிய வேதத்தைப் பிரமாணமாகக் கொண்டிராத சமணம், பௌத்தம் ஆகிய இரண்டும் சேர்ந்து ஆறு சமயங்கள் என ஆரிய வேதக் கொள்கை அடிப்படையில் கூறப்படுகிறது.

சைவ சமயக்குரவர்கள் சமண புத்த மதங்களை கண்டித்துள்ளனர்.

மாணிக்கவாசகர் பிற சமயங்களைக் கீழே உள்ளவாறு கண்டித்துள்ளார் :

'புத்தன் மூதலாய புல்லறிவிற் பல்சமயம்
தத்தம் மதங்களில் தட்டுளப்புப் பட்டுநிற்க

'உவலைச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாஞ்
சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறும்'

'சமயவாதிகள் தத்தம் மதங்களே
அமைவதாக அரற்றி மலைந்தனர்'

திருமூலர் 'ஆறெழுத்தாவ தாறு சமயங்கள்' (994) என்றும் கூறியுள்ளார்.

மேலே தெரிவிக்கப்பட்டுள்ளவற்றையும், தமிழ்ச் சமய இலக்கியத்தையும் விரிவாக ஆராய்ந்து, 'ஆறு சமயங்கள்' எனும் சொற்றொடர் எந்தெந்த பொருளில் திருமுறைகளில் பயன் படுத்தப் பட்டுள்ளது, ஆறு மதங்களைக் குறிக்கும்போது, அவ் ஆறு மதங்கள் யாவை ஆகியவை பற்றியெல்லாம் தெளிவான, முடிவான கருத்து பெறுதல் நன்று.

சிவனை, ஊழி முதல்வனாக, ஆதிப் பிரானாக, பரம்பொருளாக, பெருந் தெய்வமாகக் கருதிய தமிழர்கள்,

'அண்டங்கள் ஏழும் அகண்டமும் ஆவியுங்
கொண்ட சராசர முற்றுங் குணங்களும்
பண்டை மறையும் படைப்பளிப் பாதியுங்
கண்ட சிவன்', (திருமந்திரம்) தானே 'வியாபித் தலைவனா'க

(திரும.1809) எங்கும் எதிலும் நிறைந்திருக்கிறான் என்பதைச் சித்தாந்தத் தத்துவங்களில் ஒன்றாகக் கொண்டதில் வியப்பில்லை. இத்தத்துவ உணர்வினால் நம் அருளாளர்கள் கீழுள்ளவாறு பாடி சிவனுக்குத் தனிச் சிறப்பளித்து போற்றியுள்ளார்கள்

திருமூலர் :

திரும. 59—'பண்டிதர் தங்கள் பதினெட்டுப் பாடையும்
அண்ட முதலான் அறஞ் சொன்னவாறே'

,, 2390—'அருவனும் ஆகிய ஆதரத்தானே'

,, 65—'ஆரியமுந் தமிழும் உடனே சொலி'

,, 66—'தமிழ்ச் சொல் வடசொல் எனும் இவ்விரண்டும்
உணர்த்தும் அவனை உணரலுமாமே'

சம்பந்தர் :

'தமிழ்ச் சொலும் வடசொலுந் தாணிழற் சேர'
'தென் சொல் விஞ்சமர் வடசொற் றிசைமொழி, யெழினரம் பெடுத்து'

'மொழியானை'

அப்பர் :

'எல்லாம் சிவனென்ன நின்றாய் போற்றி'

'எண்ணு மெழுத்துஞ் சொல்லானாய் போற்றி'

'சொல்லும் பொருளெலா மானார் தாமே'

'எண்ணவன் காணெழுத்தவன் காண்'

'சொல்லாகிச் சொற்பொருளாய் நின்றார் போலும்

'வடமொழியுந் தென்றமிழு மறைக ணான்கும்
ஆனவன் காண்'

'ஆரியந் தமிழோடிசை யானவன்'
'ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்'

சுந்தரர் :

'எண்டானே யெழுத்தொடு சொற்பொரு ளெல்லாமுன்
கண்டானே'

இவ்வாறாக, தமிழகத்துச் சைவ சமயத்தின் மெய்ப்பொருளான சிவன் தனிப் பெருமையுடன் விளங்குகிறான். அவனருளியவை தமிழ் வேதம், தமிழ் ஆகமம். இத்தமிழ் வேதம் எவ்வாறெல்லாம் ஆரியரின் வடமொழி வேதத்திலிருந்து வேறுபட்டிருக்கிறது என்பது இப்பகுதியில் விவரிக்கப்பட்டிருக்கிறது. தமிழரின் சைவ சமயச் சொற்களான சங்கரன், உருத்திரன், மந்திரம், இருக்கு, சாமவேதம் ஆகியவற்றிற்குப் பிழையான பொருளை நாம் கொண்டிருப்பதும் சுட்டிக்காட்டப்பட்டு, இச்சொற்களின் உண்மைப் பொருளும் சமய இலக்கியச் சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளது.

இந்நூலில் தமிழகத்துச் சைவ சமயம்பற்றியும், அச்சைவ சமயத்தின் சித்தாந்தத் தத்துவம்பற்றியும், தொல்காப்பியம், சங்க நூல்கள், திருமுறைகள் ஆகியவை தெரிவிக்கும் பொதுப்படையானச் செய்திகளை ஆராய்ந்தோம். இந்நூல்களில் தமிழினத்தோடு தொடர்புப்படுத்திக் குறிப்பிடப்படுகிற வேதத்திற்கும், ஆரிய வேதத்திற்கும் அடிப்படையில் பல வேறுபாடுகள் உள்ளன; இவ்வேறுபாடுகள் காரணமாக, இந்நூல்களில் குறிப்பிடப்படுகிற 'வேதம்' (நால் வேதம், மறை, நான்மறை), ஆரிய வேதத்திற்கு வேறானது; அது தமிழ் வேதம், தமிழர்வேதம், அதன் முழுமுதற்பொருள், உட்பொருள், மெய்ப்பொருள் தமிழினம் ஆதியிலிருந்து வழிபடும் சிவன்' என்றெல்லாம் கண்டோம்,

எனவே, தொல்காப்பியம், சங்க நூல்கள், திருமுறைகள் ஆகியவற்றில் வருகின்ற வேதம், மறை, அந்தணர், ஐயர், பார்ப்பார், வேதியர், வேதாந்தம், சித்தாந்தம், வேதாந்த சித்தாந்தம், சித்தாந்தவேதாந்தம், சங்கரன், உருத்திரன், சாமவேதம், மந்திரம் இருக்கு முதலிய சொற்களுக்குச் சாதாரணமாகக் கொடுக்கப்பட்டு வருகிற பொருள்களுக்குப் பதிலாக. இந்நூலில் விரிவாக கொடுக்கப்பட்டுள்ள விளக்கங்களைச் சிந்தித்து, ஏற்றுக் கொண்டவைக்கு ஒத்துப் பொருள்கொண்டால், இந்நூல்களிலும் இதர பழைய தமிழ் இலக்கிய நூல்களிலும் கூறப்பட்டுள்ளவற்றின் உண்மைப் பொருளை, உண்மை நிலையைத் தெளிவாக உணர்ந்து, மேலும் பல புதுக் கருத்துக்களையும் தெரிந்து, தமிழினத்தின் சைவ சமயம், சைவ சித்தாந்தம் ஆகியவற்றின் தொன்மைச் சிறப்பையும் தனித் தன்மையையும் தத்துவ உயர்வையும் நன்கு அறிந்து மகிழலாம்; நமது பண்டைய இலக்கியமும் புதுப் பொலிவு பெற்று, தமிழர் சமூகத்தின் மறுமலர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்கும்.

சைவ சித்தாத்தம் தமிழ் நாட்டிற்கும் தமிழ்ப் பண்பாட்டிற்கும் உரிய தமிழ் நெறி, அறநெறி; இது தென்னாடுடைய "சிவனவன் வைத்ததோர் தெய்வநெறி" (திருமந்திரம்1560)

தமிழகத்துச் சைவ சித்தாந்தம்பற்றி மேல் நாட்டு அறிஞர்கள் தெரிவித்துள்ள கருத்துக்களை இங்கே சேர்த்து நூலை நிறைவு செய்வாம்.

**Dr. G. U. POPE :**

"Saivism is the old pre-historic religion of South India, essentially existing from pre-Aryan times and holds sway over the hearts of the Tamil people. It is the choicest product of the Dravidian intellect. The Saiva Siddhanta system is the most elaborate, influential and undoubtedly the most intrinsically valuabl- of all the religions of India. It is peculiarly the South Indian and Tamil religion".

**Theos Bernard :**

"The unique position of Saiva Siddhanta in the history of thought is the fact that it expounds by careful reflection, the systematic account of the process of cosmic evolution which attempts to comprehend the universe as a sum total of 36 categories. This exposition is no mere metaphysical speculation but is a purely logical account on scientific principles"

**Sir Monier Williams :**

"A characteristic of Saiva Siddhanta is its receptivity and all-comprehensiveness. It claims to be the one religion of humanity ; of human nature of the entire world. It cares not to oppose the progress of any other system. And in real truth, Saiva Siddhanta has something to offer which is suited to all minds".

(Reproduced from "Thirukoil" magazine)

——— :o: ———

## பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| VII | 35 | அமபலம் | அம்பலம் |
| VIII | 12 | தம | தம் |
| ,, | 21 | சிவதாரயச | சிவதராயச |
| X | 8 | ஆணையாறராக | ஆணையாளராக |
| ,, | 32 | திருகோயில்கள் | திருக்கேயிால்கள் |
| XI | 24 | உறுப்திபொருள்கள் | உறுதிப்பொருள்கள் |
| XIII | 18 | ஆதாம்யம் | ஆகாம்யம் |
| XV | 28 | ஆராயவதிலும் | ஆராய்வதிலும் |
| ,, | ,, | சிக்களுக்குத் | சிக்கல்களுக்குத் |
| XXIII | 20 | இந்நூாலைப் | இந்நூலைப் |
| ,, | 31 | சான்றோ | சான்றோர் |
| XXIV | 15 | வணிந்துறையில் | வணிந்துரையில் |
| XXV | 30 | விளககமாக | விளக்கமாக |
| XXVI | 6 | இவர்தம் | இவர்தாம் |
| ,, | 9 | எலலா | எல்லா |
| XXVII | 28 | கட்டப்பெற்றுள்ள | சுட்டப்பெற்றுள்ள |
| XXIX | 31 | ரேண்டும் | வேண்டும் |
| XXX | 22 | தொலகாப்பியம் | தொல்காப்பியம் |
| XXXI | 18 | சானறுகள் | சான்றுகள் |
| 1 | 1 | மக்கள | மக்கள் |
| 1 | 31 | சல்வியும் | கல்வியும் |
| 6 | 8 | காரனமாக | காரணமாக |
| 7 | 3 | மைத்தல் | சமைத்தல் |
| 10 | 2 | ஆலி | ஆல |
| ,, | 5 | நீழலுரைக்கின் | நீழலுரைக்கின்ற |
| ,, | 10 | கீழுருத்தங் | கீழுருந்தங் |
| 17 | 19 | தொமுதெழுவாள் | தொழுதெழுவாள் |

| | | | |
|---|---|---|---|
| 20 | 21 | ஐம்பெருப்பூதம் | ஐம்பெரும்பூதம் |
| 22 | 6 | ஞானசம்பந்தா | ஞானசம்பந்தர் |
| ,, | 11 | நன்றாய் | நின்றாய் |
| 23 | 28 | னெனநின | னெனநின் |
| 24 | 1 | பெருந்தெய்வத் தானே | பெருந்தெய்வந்தானே |
| ,, | 19 | வீழுங்கு | விழுங்கு |
| 26 | 2 | தேடு | தேடும் |
| 27 | 4 | காண்டாற் | காண்டற் |
| ,, | 26 | உளையம் | உளையும் |
| ,, | 27 | இவன் | இலன் |
| 29 | 28 | கண்டமு | தண்டமு |
| 30 | 33 | அணுவகல் | அணுகவல் |
| 32 | 17 | சொல்லுமால் | சொல்லுமாறு |
| ,, | 21 | பிராணார்க்கு | பிரானார்க்கு |
| ,, | 30 | அவணே | அவனே |
| 35 | 6 | நெஞுசம் | நெஞ்சம் |
| ,, | 25 | சிந்தனையுள | சிந்தனையுள் |
| 39 | 7 | ஐவாக் | ஐவர்க் |
| ,, | 9 | நிலவாவணி | நிலவா ணி |
| 40 | 17 | சொற்றுனை | சொற்றுணை |
| 44 | 13 | வலியிறுத்தி | வலியுறுத்தி |
| ,, | 18 | உலகத்தே | உலகேத்த |
| 47 | 7 | தெள்ளேனம் | தெள்ளேணம் |
| ,, | 12 | உரை | உறை |
| ,, | 22 | திமிர் | நிமிர் |
| 53 | 10 | தலைச் செங்கோடு | தலைச்சங்காடு |
| 53 | 19 | மன்னர்களமல் | மன்னர்களால் |
| 54 | 8 | திவான்மியூர் | திருவான்மியூர் |
| 54 | 8 | திருவாணைக் கோயில் | திருவானைக்கோயில் |

| | | | |
|---|---|---|---|
| 55 | 5 | கோயிலாய்க் | கோயிலாக் |
| 55 | 16 | கோபுரம்கோ கரணகம் | கோபுரக்கோகர்ணம் |
| 56 | 10 | இராசாராசேச்சுரம் | இராசராசேச்சுரம் |
| 73 | 25 | திருவாரூத் | திருவாரூர்த் |
| 78 | 23 | எமம் | ஏமம் |
| 79 | 9 | நம | நம் |
| 83 | 3 | மெயந்நெறி | மெய்ந்நெறி |
| 84 | 14 | மேயருள | மேயருள் |
| 85 | 23 | தத்துவாமாய் | தத்துவமாய் |
| 87 | 13 | சேர்க்ப்க | சேர்க்கப் |
| 92 | 14ஆவது வரி பதின்மூன்றாக சேர்க்கப்படவேண்டும் | | |
| 106 | 23 | பரம்பொருளாமக் | பரம்பொருளாகக் |
| 110 | 19 | நீதியானினைத் | நீதியானினை ந் |
| ,, | 34 | குலவனோயன்று | குலவனேயென்று |
| 118 | 8 | கேயில் | கோயில் |
| ,, | 13 | ரந்தனர் | ரந்தணர் |
| 119 | 29 | கருன்புரிந்து | கருள்புரிந்து |
| 120 | 24 | ஆவின் | ஆவின் |
| 21 | 9 | போனாய் | யோனாய் |
| ,, | 23 | வேதியானை | வேதியனை |
| 133 | 19 | வெந்து | வெந்த |
| 135 | 14 | பார்ப்பதியோடுடன | பார்ப்பதியோடுடன் |
| 136 | 17 | முனனோர் | முன்னோர் |
| 138 | 6 | வேதக்குனற்குறி | வேதத்தனற்குறி |
| 139 | 3 | தொழுதொழு | தொழுதெழு |
| ,, | 5 | செய்ஞலூர் | சேய்ஞலூர் |
| 140 | 11 | பயன்படுதி | பயன்படுத்தி |
| ,, | 20 | தமிழர்காளல் | தமிழர்களால் |
| 141 | 13 | பிராமனர் | பிராமணர் |
| 144 | 8 | நிமித்நங் | நிமித்தங் |
| 145 | 12 | சிவனிக்கு | சிவனுக்கு |
| ,, | 3 | நான்முகனுக்கா | நான்முகனும்கா |
| 146 | 4 | பாம்பனையன் | பாம்பனையான் |
| ,, | 13 | இன்னருன் | இன்னருள் |
| 148 | 19 | மலெறியாத | மாலறியாத |
| ,, | 28 | தோர்மைதி | தோரமைதி |

| | | | |
|---|---|---|---|
| 150 | 9 | மூன்னெறி | முன்னெறி |
| | 21 | மூர்த்தியை | மூர்த்தியே |
| 153 | 2 | சரண்பணிய | தாள்பணிய |
| | 6 | டனறரியு | டன்றரியு |
| | 25 | முதலாய | முதலாய் |
| 154 | 5 | இல்லாதோர் | இலாததோர் |
| | 7 | என்தனக்குப் | என்தனக்கும் |
| | 11 | கோணாய் | கோனாய் |
| 155 | 8 | ஆடாமா | ஆடாமோ |
| | 12 | காண | காண் |
| 159 | 8 | முதல்வனவனே | முதல்வனவனேயாம் |
| 160 | 19 | ஒல்வொரு | ஒவ்வொரு |
| | 32 | கடவுடான | கடவுளான |
| 161 | 25 | தூாமறை | தூமறை |
| 168 | 3 | சித்தாந்நம் | சித்தாந்தம் |
| 172 | 19 | வேதாநத | வேதாந்த |
| 175 | 10 | தமிழ | தமிழ் |
| 176 | 3 | போற்ழுயுள்ளாரே | போற்றியுள்ளாரே |
| | 4 | நமச்சிவாயத்லை | நமச்சிவாயத்தை |
| | 7 | ஒனறாய் | ஒன்றாய் |
| | 14 | திவநெறிய | திருநெறிய |
| 177 | 14 | இடந்தில் | இடத்தில் |
| 177 | 17 | (சேர்த்தல்) | திருநாவுக்காசு |
| 178 | 14 | நான்மறைவல் | நான்மறைவல்ல |
| | 17 | தழங்தெரி | தழங்கெரி |
| | 28 | கெளடிண்ய | கௌண்டிண்ய |
| 179 | 17 | இவ்வாறன | இவ்வாறான |
| | 23 | தத்துவத்னதக் | தத்துவத்தைக் |
| | 25 | கொண்டிருத்தல் | கொண்டிருந்ததில் |
| | 26 | என்வதை | என்பதை |
| 181 | 10 | மூளையாகும் | முளையாகும் |
| | 18 | மாணுக்கவாசகர் | மாணிக்கவாசகர் |
| 182 | 1 | வேதத்தில் | வேதித்தல் |
| | 8 | மண்ணேடெறி | மண்ணேடெரி |
| 187 | 54 | அத்தெய்வகளுக்கு | அத்தெய்வங்களுக்கு |
| 188 | 25 | ன்பற்றிய | பின்பற்றிய |
| 193 | 20 | மந்திரங்களைங் | மந்திரங்களைக் |
| 197 | 11 | சறு | சிறு |
| 200 | 14 | சமயமும | சமயமும் |

